ஸ்ரீ ராமாநுஜாய நம:



——:0:——

பரபக்தஜநகூடஸ்தரான பெரியாழ்வார் முதலானோர்

அருளிச்செய்த

# முதலாயிரம் மூலமும்,

இதற்கு

பெரியவாச்சான்பிள்ளை

அருளிச்செய்த

## வ்யாக்யானமும்,



————————

சிந்நகரம் கந்தாடை - திருவேங்கடாசார்யர்,

ஆசார்யபுருஷ-கந்தாடை-கிருஷ்ணமாசார்யரால்

பரிசோதித்து,

[illegible]

சென்னைப்பட்டணம்:

[illegible] மெமோரியல் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டன.

———

1882.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

## பிள்ளைலோகஞ்சீயரருளிச்செய்த வ்யாக்யாநம்.

அ.—(இன்னமுதமூட்டுகேன்) இதில் – திவ்யதேசத்திலே வர்த்திக்கும் திர்யக்குகள்தான் திருநாமங்களைச் சொல்லவற்றாயிறேயிருப்பது. ஆகையால் "[illegible]" "ஶுகாநாமிதபர்ம் ஹறகோஷாம்" என்றும், "பூமருவிப்புள்ளினங்கள்புள்ளரையன் புகழ்குழறும்புனலரங்கமே" என்றும், "அறுகால்வரிவண்டுகளாயிரநாமஞ்சொல்லிச் சிறுகாலைப்பாடும்" என்றும், "எல்லியம்போதிருந் சிறைவண்டெம்பெருமான் குணம்பாடி" என்றும்" "அள்ளியம்பொழில்வாயிருந்து வாழ்குயில்கள் அரியரியென்றவை யழைப்ப" என்றும், "செவ்வாய்க்கிளி நான்மறைபாடும்" என்றும் சொல்லுகையாலே – ராமபக்தரான குலசேகரர் ராமன்திருநாமத்தை அவற்றுக்குக் கற்பித்துக் கேட்குமாப்போலே குலசேகர பக்தரானவர்களும் அவர்திருநாமங்களை யவற்றின் வாயாலேகேட்க விச்சிக்கிறபடியைச் சொல்லுகிறதாகவுமாம். அன்றிக்கே, "ராமாயணமென்னும் பக்தி வெள்ளங்குடிகொண்ட கோயிலிராமாநுசன்" என்றும், "பொன்னரங்கமென்னில் மயலேபெருகுமிராமாநுசன்" என்றுமிறே ஸ்ரீராமாயணத்திலும் ஸ்ரீரங்கதாமத்திலும் எம்பெருமானார் மண்டியிருப்பது; ஸ்ரீகுலசேகரப்பெருமாளும், "எல்லையில் சீர்த்தயரதன்றன் மகனாய்த்தோன்றிற்றது முதலாத்தன்னுலகம் புக்கதீறு" என்றும், "எம்பெருமான்றன் சரிதை செவியால் கண்ணால் பருகுவோம் இன்னமுதமதியோமன்றே" என்றும், "[illegible]" "ரங்கயாத்ராதிநேதிநே" என்றும், "அணியரங்கன்திருமுற்றம்" என்றும், "அரங்கனடியிணைத் தங்குசிந்தைத் தனிப்பெரும்பித்தனும்" என்றும் இரண்டையு மாதரித்துக்கொண்டிறே போருவது. ஆகையால், "கொல்லிகாவலன்சொல் பதிக்கும் கலைக்கவி பாடும் பெரியவர்பாதங்களே துதிக்கும் பரமனிராமாநுசன்" என்னும்படி ராஜாவான ஸ்ரீகுலசேகரப்பெருமாளிடத்திலே யதிராஜரான எம்பெருமானார் மடுவிட்டிருப்பது. * அஜ்ஞபத்தரபிமாநத்திலே யொதுங்கிப்போருகிற ஆழ்வான்போல்வாரை யாய்த்து "இன்னமுதமூட்டுகேன் இங்கேவாபைங்கிளியே" என்கிறாராகவுமாம். கிளியுங்கற்பித்ததே சொல்லும்; இவரும் * கற்பியாவைத்தமாற்றமிறே சொல்லுவது; மேல்சொல்லுமவரன்றே. சொன்னத்தைச் சொல்லுமவரிறே. ஆகையால், கூரத்தாழ்வான்போல்வாரைக்கொண்டு குலசேகராழ்வார் வைபவத்தைக் கூறுவிக்கிறார். "இன்னமுதமூட்டுகேன் – கூறு" என்கிறது.

இன்னமுதமூட்டுகேனிங்கேவாபைங்கிளியே
தென்னரங்கம்பாடவல்லசீர்ப்பெருமாள்
பொன்னின்சிலைசேர்நுதலியர்வேள்சேரலர்கோன்
எங்கள்குலசேகரனென்றேகூறு.

வ்யா.—(இன்னமுதமூட்டுகேன்) இன்னடிசிலொடுபாலமுதூட்டி யெடுத்த வென்கோலக்கிளியை என்னக்கடவதிறே. இங்கு "தேனும்பாலுமமுதுமாய திருமால் திருநாமத்தையிறே ஊட்டி வளர்த்தது; அதுதோன்ற ஆழ்வான் வலத்திருச்செவியிலே முன்பு ப்ரஸாதித்த த்வயத்தை மீளவும் ப்ரஸாதித்தருளிற்று. "இங்கே வா" என்று - திருநாமஞ்சொல் என்றத்தால் வடிவில் பிறந்த ஹர்ஷத்தைக் கண்டு வரவழைக்கிறது. (பைங்கிளியே) பசுத்தநிறமாகத் தம்போலே யிருக்கிற மடக்கிளியே. இத்தால் - "என்னுருயிர்க்காகுத்தன் நின்செய்யவாயொக்கும் வாயன்கண்ணன் கைகாலினன் நின்பசுஞ்சாம நிறத்தனன்" என்னும்படியான ரூபஸாம்யத்தைச் சொல்லுகிறது. * పరమం సామ్యముపైతి - பரமஸாம்யமுபைதியிறே. எதுக்காக வென்னை யழைக்கிறதென்னில்; (தென்னரங்கம் பாடவல்ல சீர்ப்பெருமாள் பொன்னின் சிலைசேர் நுதலியர் வேள் சேரலர்கோனெங்கள் குலசேகரனென்றே கூறு) என்கிறது. தென்னரங்கம்பாடவல்ல சீர்ப்பெருமாளாவது - "இருளிரிய" "தேட்டருந் திறல்தேன்" "மெய்யில்வாழ்க்கை" என்கிற மூன்றுதிருமொழியிலும் பாடி, முடிவிலும் "யாவரும் வந்தடிவணங்க வரங்கநகர்த்துயின்றவனே" என்றும், மற்றும் திருமலை முதலாயிருக்கிற ஆராமங்களான திருப்பதிகளையும் "காகுத்தா கண்ணனே" என்றும் அர்ச்சாவதாரத்துக் கடியான அவதாரங்களையு மருளிச்செய்து தலைக்கட்டுகையாலும், அவர் தாம், * செருவிலேயரக்கர்கோனைச்செற்ற நஞ்சேவகனாராகையாலும், * வெண்ணெயுண்ட வாயனாகையாலும், எல்லாம் திருவரங்கத்திருப்பதி விஷயமாகலாமிறே. * பொன்னின் சிலைசேர் நுதலியர் வேளாகையாவது - ஸ்ப்ருஹணீயமானவில்லுக்கு ஸத்ருசமான புருவத்தை முகத்திலேசேர்ந் துடைய ஸ்த்ரீகளுக்கு ரஞ்சநீயரா யிருக்கிறவர். வேள் - காமன். "కన్దర్పఇవమూర్తిమాన్" "கந்தர்ப்பஇவமூர்த்திமாந்" "காமர்மானேய்நோக்கியர்க்கு" என்னக்கடவதிறே. இத்தால் - ஜ்ஞாநத்துக்கு மேலான ஸ்வரூபதாந்தியையுடையவர்களுக்கு தர்ஶநீயமாயிருக்குமவரொன்றபடி. (சேரலர்கோன்) சேரவம்சத்திலவர்கட்கெல்லாம் ராஜாவென்கை. "రాజాధిరాజస్సర్వేషాం" "ராஜாதிராஜஸ்ஸர்வேஷாம்" கோன-ராஜா. குடிக்குநிர்வாஹகரொன்றபடி (எங்கள்குலசேகரன்) ப்ரபந்நகுலஶேகரனென்கை. "இராமாநுச னெங்குலக்கொழுந்து" என்னுமாப்போலே. (குலஶேகரனென்றே கூறு) * நான்வளர்த்த சிறுகிளிப்பை

தலே, இன்குரல் நீயிழற்றாதே, குலசேகரனென்றே கூறு, கூறின வாய்க்கு * அமுதமாய திருமால் திருநாமமான * இன்னமுதமூட்டு கேன்; ஆகையாலே குலசேகரனென்றே கூறு. "வக்தவ்யமாசார்யவை பவம்" "வக்தவ்யம்ஆசார்யவைபவம்" என்னக்கடவதிறே.

அ.—(ஆரங்கெட) இதில்-அவர் ஸ்ரீவைஷ்ணவர்கள் திறத்தில் பக்ஷபதித் திருக்கிறபடியைச் சொல்லுகிறது.

ஆரங்கெடப்பரனன்பர்கொள்ளாரென்றவர்களுக்கே
வாரங்கொடுக்குடப்பாம்பிற்கையிட்டவன்மாற்றலரை
வீரங்கெடுத்தசெங்கோற்கொல்லிகாவலன்வில்லவர்கோன்
சேரன்குலசேகரன்முடிவேந்தர்சிகாமணியே.

வ்யா.—(ஆரங்கெடவென்றுதொடங்கி) ஸ்ரீவைஷ்ணவர்கள் திறத்தில் அவர்க்குண்டான ப்ராவண்யத்தைக் குலைக்கவேணுமென்று மந்த்ரிகள் அவர் திருவாரத்தை யெடுத்து மறையவைத்து அவர்கள்பேரிலே ஆரோபிக்க; அத்தைக்கேட்டு (பரனன்பர்கொள்ளாரென்று) பரவஸ்துவிலே பக்திபண்ணுமவர்கள் பரவஸ்துவைக் கொள்ளாரென்று ப்ரதிஜ்ஞைபண்ணி. பரனன்பரல்லாதவர்களிறே * பிறர் நன்பொருள் தன்னை நம்புவது. இப்படியாகையால் (அவர்களுக்கே வாரங்கொடு) அவ்வளவன்றிக்கே அவர்கள்விஷயத்திலே பக்ஷபதித்தது. "பாம்பார்வாய்கை நீட்டல்பார்த்தி" என்கிறபடியே பாம்புக்குடத்திலே அதின்படத்திலேபடக் கையிட்டு "அவர்கள் ஆபரணமெடார்கள்" என்று பணத்திலே கையிட்டவர். அப்படி செய்தவர்தான் அல்பரோவென்னில்; ஶத்ருக்களை நிரஸிக்கும் ஸார்வபௌமரென்கிறது (மாற்றலரைவீரங்கெடுத்த) என்று. ஶத்ருக்களை வீர்யத்தை நிர்வீர்யமாகப் பண்ணினவிது எத்தாலே யென்னில்; செங்கோல் - ஆஜ்ஞையாலே. "இருளார்வினை கெடச்செங்கோல் நடாவுதிர்." (கொல்லிகாவலன்) "குருகைகாவலன்" என்னுமாப்போலே. "கொல்லி" என்கிற நகரத்துக்குநிர்வாஹகரென்கை. (வில்லவர்கோன்) அவாந்தரராஜர்களுக்கும் அதிராஜனென்கை. அன்றிக்கே, "வில்லவர்கோன்" என்று - வில்லவரென்றுபேர். "கொல்லிகாவலன் கூடல்நாயகன் கோழிக்கோன் குலசேகரன்" என்றாரிறே. கோழி-உறையூர்.உறையூருக்கும் இறையவரென்கிறது. அது சோழன் ராஜதானி. (சேரன்குலசேகரன்) சேரனுடைய குலத்துக்கு ஶேகரன். குலஶேகரர் - திருநாமம். இப்படி ராஜாதிராஜராகையாலே (முடிவேந்தர்ஶிகாமணி)என்கிறது.முடிவேந்தர் ஶிகாமணியாவது- * மணிமகுடந்தாழத் துளங்கு நீண்முடியரசர், அடியிலே வணங்குகையாலே."மாலடிமுடிமேல் கோலமாங்குலசேகரன்"என்று தமக்கிருக்குமாப்போலே தாமும் அவர்களுக்கு ஶிகாமணிபோ

லே ஶேகரிக்குமவராய் அலங்காராவஹராயிருக்கை. “பெருமணி வானவ ருச்சிவைத்த” “𑌈𑌶𑍍𑌵𑌰𑌾𑌣𑌾𑌂𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌕𑌿𑌰𑍀𑌟𑌤𑌟𑌪𑍀𑌡𑌿𑌤𑌪𑌾𑌦𑌪𑍀𑌠𑌮𑍍” “ஈஶ்வராணும்ஶ்ரீமத்கிரீடதடபீடிதபாதபீடம்” என்னக்கடவதிறே இவர் பெருமானை. குலஶேகரப்பெருமாளான விவர்பெருமையும் அப்படியே. இப்படி முடிவேந்தர் சிகாமணியான இவரும் ஒருவரோ யென்னுதல்; இப்படி பெரியவேண்டப்பாட்டை யுடையவரே குடப்பாம்பில் கையிடுவதே! என்று ஈடுபாடாதல். இத்தால் – அரங்கன் மெய்யடியார்கள் தம் எல்லையி லடிமைத்திறத்தினி லென்று மேவு மநத்தனும்” என்றத்தை அநுஷ்டாந பர்யவஸாயியாம்படி அநுஷ்டித்த ப்ரகாரத்தைச் சொல்லித்தாய்த்து.

குலஶேகரப்பெருமாள் திருவடிகளே சரணம்.

பிள்ளைலோகம்ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

# பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநாவதாரிகை.

அ.—ஸ்ரிய:பதியாய் ஜ்ஞாநாநந்தைக ஸ்வரூபனாய் ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய் உபயவிபூதியுக்தனாய் ஸர்வஸ்மாத்பரனான ஸர்வேஶ்வரன் அடியாகப் பெருமாள் பெற்றது பக்திரூபாபந்நஜ்ஞாநமாகையாலே க்ரமத்தாலே காண்கிறோமென்று ஆறியிருக்கலாவது தந்தலையாலே வந்ததாகிலிறே; அவன்றானே காட்டக்காண்கிறவராகையாலே அப்போதே காணவேண்டும்படி விடாய் பிறந்தது. பரமபதத்திலும் அநுபவிப்பது குணாநுபவமாகையாலே அந்த ஶீலாதிகுணங்கள் பூர்ணமான கோயிலிலே யநுபவிக்க ப்ரார்த்திக்கிறார். இங்கநுபவிக்கக் குறையென்? ப்ரார்த்தனை யென்னென்னில்; ஸ்வாதந்த்ர்யம் பிறப்பேயுடைய ராகையாலே, மநுஷ்யர் விரோதிப்பார்பலருமுண்டாகையாலே, இங்குவந்தநுபவிக்கமாட்டாதே "அடியார்கள் குழாங்களை - உடன் கூடுவதென்றுகொலோ" என்றும், "அந்தமில்பேரின்பத்தடியரோடிருந்தமை" என்றும்-நம்மாழ்வார் ப்ரார்த்தித்துப் பெற்றபேற்றை இங்கே யநுபவிக்க வாசைப்படுகிறார். ... ... ... ... ... ... ...

வ்யா.—முதற்பாட்டு.(இருளிரியவித்யாதி) பர்யங்கவித்யையிற் சொல்லுகிறபடியேயிறே முமுக்ஷு மநோரதிப்பது; அத்தையிங்கே திருவநந்தாழ்வான் மேலே சாய்ந்துகிடக்கிறவிடத்திலே யநுபவிக்க மநோரதிக்கிறார். ஸம்ஸாரிமுக்தனாய்ச்சென்றால் "[Telugu-script quotation]" "பாதேநாத்யாரோஹதி" இத்யாதிப்படியே – எழுந்தருளியிருக்கிற பர்யங்கத்திலே மிதித்தேறினால் "நீயார்" என்றால், "நான் ராஜபுத்ரன்" என்பாரைப்போலே, "[Telugu-script quotation]" "அஹம்ப்ரம்ஹாஸ்மி" என்றிறே இவன்சொல்லுவது.

இருளிரியச்சுடர்மணிகளிமைக்கும்நெற்றியினத்துத்தியணிபணமாயிரங்களார்ந்த, அரவரசப்பெருஞ்சோதி யநந்தனென்னுமணிவிளங்குமுயர்வெள்ளையணையைமேவித், திருவரங்கப்பெருநகருட்டெண்ணீர்ப்பொன்னி திரைக்கையாலடிவருடப் பள்ளிகொள்ளும், கருமணியைக்கோமளத்தைக்கண்டுகொண்டென் கண்ணிணைகளென்றுகொலோகளிக்குநாளே. ... ... ... ... ... (க)

ப-ரை. திருவரங்கப்பெருநகருள் - திருவரங்கமாகிற மஹாநகரத்திலே, இருள் இரிய - இருள் சிதறிப்போம்படியான, சுடர் - ஜ்யோதிஸ்ஸையுடைத்தான, மணிகள் - மாணிக்கங்கள், இமைக்கும் - விளங்காநின்றுள்ள, நெற்றி-

நெற்றியையும், இனத்துத்தி - இரண்டாய்ச்சேர்ந்த திருவடிநிலையென்று சொல்லுகிறவற்றை, அணி - உடைத்தான, பணங்களாயிரம் - ஆயிரம்பணங்களையும், ஆர்ந்த - பூர்ணமாகவுடையனாய், அரவரசன் - நாகராஜாவென்னும், பெருஞ்சோதி - மஹாதேஜஸ்ஸையுடையனாய், அநந்தனென்னும் - திருவநந்தாழ்வானாகிற, அணிவிளங்கும்-அழகுமிக்கு, உயர் - ஒக்கத்தையுடைத்தாய், வெள்ளை - வெளுத்த, அணையை திருப்படுக்கையை, மேவி - பொருந்தி, தெள்-தெளிந்த, நீர் - நீரையுடைத்தான, பொன்னி - காவேரியானது, திரை - அலைகளாகிற, கையால் - கைகளாலே, அடி-திருவடிகளை, வருட - தடவ, பள்ளிகொள்ளும் - கண்வளர்ந்தருளுகிற, கருமணியை - நீலரத்நம்போன்றவனாய், கோமளத்தை - ம்ருதுஸ்வபாவனானவனை, என் கண்ணிணைகள் - என்னுடையகண்களானவை, கண்டுகொண்டு - இடைவிடாமல் ஸேவித்து, களிக்குமநாள் - ஆநந்திக்குங்காலம், என்று கொலோ - என்றோவென்கிறார்.

வ்யா.—(இருளிரியச் சுடர்மணிகளிமைக்கும் நெற்றி) இருள் சிதறிப்போம்படி ஜ்யோதிஸ்ஸையுடைய மணிகள் விழுக்கிறநெற்றியையும். (இனத்துத்தியணிபணமாயிரங்களார்ந்த)இனமானதுத்தி; அதாவது - இரண்டாய்ச்சேர்ந்த திருவடி நிலையென்று சொல்லுகிறவற்றையுடைத்தான பணங்களாயிரத்தையும் பூர்ணமாகவுடையனாய். (அரவரசப்பெருஞ்சோதி) நாகராஜாவென்னும் மஹாதேஜஸ்ஸையுடையவனாய். (அநந்தனென்னும்) எல்லாவற்றையும் வ்யாபித்து நிற்கிற ஸர்வேஶ்வரனை விளாக்குலை கொள்ளுகிற ஸ்வரூப குணங்களை யுடையனாகையாலே அநந்தனென்று சொல்லப்படுகிற. (என்னும்) ஸுமுகந், வாஸுகி, தக்ஷகன்என்று மூண்டிறே; அவர்களிற் காட்டில் பகவத் ப்ரத்யாஸத்தியை யுடையதென்னும் ப்ரஸித்தியையுடையவன். (அணிவிளங்குமுயர் வெள்ளையணையைமேவி) அழகுமிக்கு ஒக்கத்தையுடைத்தாய் மறுவற்ற வெள்ளைப்படுக்கையாகிற திருவநந்தாழ்வானைமேவி. (திருவரங்கப்பெருநகருள்) "வைகுண்டேது பரேலோகே" "வைகுண்டேது பரேலோகே" என்று சொல்லுமது அங்கேகாணும்; இவர்க்குத் திருவரங்கமாகிற மஹா நகரத்திலே. (தெண்ணீர்ப்பொன்னி திரைக்கையா லடிவருட) தெளிந்த நீரையுடைய காவேரி, திரையாகிறகைகளாலே திருவடிகளைவருட. (பள்ளிகொள்ளும் கருமணியை) திருவநந்தாழ்வான்மேலே ஒரு நீலரத்நம் சாய்ந்தாப்போலே கண்வளர்ந்தருளுகிறவனை. (கோமளத்தை) கண்ணாரத்து கைக்கவொண்ணு தஸௌகுமார்யமுடையவனை. (கண்டுகொண்டு) கலியர், "சோற்றைக் கண்டுகொண்டு" என்னுமாப்போலே. (என் கண்ணிணைகள்) பட்டினிவிட்ட வென்கண்கள். (என்றுகொலோகளிக்கும் நாளே) அங்கேகண்டு. "அஹமந்நமஹமந்நமஹமந்நம்" "அஹமந்ந மஹமந்ந மஹமந்நம்" என்று களிக்கும் களிப்பை இங்கேகண்டு களிப்பதென்றோ. ... ... ... (க)

வாயோரீரைஞ்ஞூறுதுதங்களார்ந்தவளையுடம்பிலழல்நாகமுமிழ்ந்தசெந்தீ, வீயாதமலர்ச்சென்னிவிதாநமேபோல்மேன்மேலும்மிகவெங்கும்பரந்ததன்கீழ்,காயாம்பூமலர்ப்பிறங்கலன்னமாலைக்கடியரங்கத்தரவணையிற்பள்ளிகொள்ளும், மாயோனைமணத்தூணேபற்றிநின்றென்வாயாரவென்றுகொலோவாழ்த்துநாளே. ... ... (உ)

ப-ரை.—துதங்கள்-ஸ்தோத்ரம்பண்ணுகைக்கிடாக, ஆர்ந்த-பொருந்தின, ஓர் ஈரைஞ்ஞூறுவாய் - ஆயிரம்வாயையும், வளை - வெளுத்த, உடம்பில் - திருமேனியையும், சத்ருக்கள் அணுகவொண்ணாதபடி, அழல் - அழலாநின்றுள்ள, நாகம் - திருவநந்தாழ்வான், உமிழ்ந்த - வாயால் இடைவிடாதே உமிழுகிற; எங்கும் - நாற்பக்கமெங்கும், மேன்மேலும் மிகப்பரந்த-மிகவும் அதிகமாகப் பரந்த, விதானமேபோல் - மேற்கட்டியையொத்த, செந்தீக்கீழ் - அக்நிஜ்வாலைகளின் ஜ்யோதிஸ்ஸின்கீழே, மலர்வீயாத - பூமாறாத, சென்னி - திருமுடியையுடையனுமாய், காயா - காயாவின், பூ - அழகிய - மலர் - மலர்களாலாகிய, பிறங்கல் - மாலைபோலேயிருக்கிற, மாலை - ஸர்வேச்வரனை, கடி - அரணாகப்போரும் மதிளையுடைய, அரங்கத்து - கோயிலிலே, அரவணையில் - திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலே, பள்ளிகொள்ளும் - கண்வளர்ந்தருளுகிற, மாயோனை - ஆச்சர்யபூதனை, மணத்தூணே பற்றிநின்று - ஆமோதஸ்தம்பத்வயங்களைப் பற்றிநின்று, என் - என்னுடைய, வாயார—, வாழ்த்தும்நாள் - ஸ்தோத்ரம்பண்ணுங்காலம், என்றுகொலோ - என்றோ.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (வாயோரீரைஞ்ஞூறு துதங்களார்ந்த) யசோதைப்பிராட்டி க்ருஷ்ணஸ்பர்சத்தால்வந்த ஸுகத்துக்குப் போக்குவிட்டேத்துமாப்போலே பகவதநுபவஹர்ஷ ப்ரகர்ஷத்தாலே வந்த ப்ரீதிக்குப் போக்குவிட்டேத்துகைக்காக ஆயிரம் வாயையும்; துதங்களாவது - ஸ்தோத்ராதிகளைப் புறப்படவிடுகை. ஸ்துதமிடே. (வளையுடம்பிலழல்நாகம்) வெளுத்த நிறத்தையுடையனுமாய், ப்ரதி பக்ஷத்துக்கு வந்தணுகவொண்ணாதபடி அநபிபவநீயனாயிருக்கிற திருவநந்தாழ்வான். (உமிழ்ந்தசெந்தீ வீயாதமலர்ச்சென்னி விதாநமேபோல் மேன்மேலும் மிகவெங்கும் பரந்ததன் கீழ்) அவன்வாயாலே யிடைவிடாதே யுமிழ்கிற அக்நிஜ்வாலைகளின் ஜ்யோதிஸ்ஸாகிற மேற்கட்டியின் கீழே, வீயாதமலர்ச்சென்னி— பூமாறாத திருமுடியை யுடையனுமாய். (காயாம்பூமலர்ப் பிறங்கலன்னமாலை)காயாவின் அழகியபூவாலேசெய்யப்பட்டமாலைபோலே யிருக்கிற ஸர்வேச்வரனை. (கடியரங்கத் தரவணையில் பள்ளிகொள்ளும்)அரணாகப்போரும்மதிளையுடையகோயிலிலேஅப்படிபரிவனான திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந் தருளுகிற. (மாயோனை) "𑌸𑌮𑌯𑌾𑌬𑍋𑌧𑌿𑌤𑌶𑍍𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑍍" "ஸமயாபோதிதஸ் ஸ்ரீமாந்" என்னும்படி கண்வளர்ந்தருளுகிற ஆச்சர்யபூதனை. (மணத்தூணேபற்றிநின்று) ஆமோத ஸ்தம்பத்வயங்களைப்பற்றி நின்று. அழகிலே அகப்பட்ட ஹர்ஷத்தாலேதன்னுண்ணாமே இரண்டு ஸ்தம்பங்களைப்பற்றிநின்று.

(வாயார என்றுகொலோ வாழ்த்துநாளே) கண்டால் சொல்வது வேறொரு ப்ரயோஜநமில்லையிறே; "பல்லாண்டு பல்லாண்டு" என்னு மித்தனையிறே. ... ... ... ... ... (௨)

எம்மாண்பிலயனான்குநாவினாலுமெடுத்தேத்தியீரிரண்டுமுகமுங்கொண்டு, எம்மாடுமெழிற்கண்க ளெட்டினோடுந் தொழுதேத்தியினிதிறைஞ்சநின்றசெம்பொன்,அம்மான்றன்மலர்க்கமலக்கொப்பூழ்தோன்றவணியரங்கத்தரவணையிற்பள்ளிகொள்ளும், அம்மான்றனடியிணைக்கீழலர்களிட்டங் கடியவரோ டென்றுகொலோ வணுகுநாளே. ... ... ... ... ... ... ... (௩)

ப-ரை.—எம்மாண்பில்-எப்படிப்பட்ட மாட்சிமையையுடைய, அயன்-ப்ரஹ்மாவானவன், நான்குநாவினாலும் - ஸ்தோத்ராதிகளுக்கு பரிகரமான நாலு நாக்காலும், எடுத்து - தன்சரத்தைக்குத்தக்கபடி யெடுத்து, ஏத்தி - ஸ்தோத்ரம்பண்ணி, ஈரிரண்டுமுகமுங்கொண்டு-நாலுவேதத்துக்கும்சமைந்த நான்கு முகங்களைக்கொண்டு, எம்மாடும் - நாற்புறத்திலும், எழில் - அழகிய, கண்களெட்டினோடும் - எட்டுக்கண்களோடே, தொழுது - அஞ்சலிபத்தனாய்க்கொண்டு, ஏத்தி - ஸ்தோத்ரம்பண்ணி, இனிது-ஸாஷ்டாங்கமாக, இறைஞ்சநின்ற-ஸேவிக்கும்படி நின்றவனாய், செம்பொன் - ஸ்ப்ர்ஹணீயனாய், அம்மான்றன்-இவ்வருக்குண்டான கார்யவர்க்கத்துக்கெல்லாம் காரணபூதனானவனுடைய தாய், கமலமலர் - தாமரைப்பூவையுடைய, கொப்பூழ்தோன்ற-திருநாபிதோன்றும்படி, அணி - ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான, அரங்கத்து - கோயிலிலே, அரவணையில் - திருவநந்தாழ்வான்மேலே, பள்ளிகொள்ளும் - கண்வளர்ந்தருளுகிற, அம்மான்றன் - ஸர்வேச்வரனுடைய, அடியிணைக்கீழ் - திருவடிகளின் கீழே, அலர்களிட்டு - புஷ்பம்முதலியவைகளைப் பணிமாறி, அங்கு - அங்கே, அடியவரோடு - அந்தரங்கவ்ர்த்திபண்ணுமவர்களோடே, அணுகும்நாள் - கிட்டும்காலம், என்றுகொலோ - என்றோ.

வ்யா.—மூன்றாம்பாட்டு.(எம்மாண்பிலயன்) எப்படிப்பட்ட மாட்சிமையுடைய ப்ரஹ்மா. அதாவது - ஸ்தோத்ராதிகளைப்பண்ணுந் தன்மை குறைவற்றிருக்கை. (நான்குநாவினாலும்) ஸ்தோத்ராதிகளுக்கு பரிகரமான நாலுநாக்காலும். (எடுத்தேத்தி) தன் ஶ்ரத்தைக்குத் தக்கபடி எடுத்தேத்தி. (ஈரிரண்டு முகமுங்கொண்டு) நாலுவேதத்துக்குச் சமைந்த நாலுமுகமுங்கொண்டு. (எம்மாடும்) பின்னும் முன்னு மட்டங்களாகிற பர்யந்தங்க ளெங்கும். (எழில் கண்களெட்டினோடும்) அழகை யநுபவிக்கைக்குப் பல கண்படைத்த ப்ரயோஜநம்பெற்றான். (தொழுதேத்தி யினி திறைஞ்சநின்ற) ப்ரீதி ப்ரேரிதனாய்க் கொண்டுதொழுது ஸ்தோத்ராதிகளைப் பண்ணுவது தண்டனிடுவ தாம்படிநின்ற. (செம்பொ னம்மான்றன் மலர்க் கமலக் கொப்பூழ்தோன்ற) ஸ்ப்ர்ஹணீயமாய் இவ்வருக்குண்டான கார்யவர்க்கத்துக்கெல்லாம் காரணமென்னும் மஹத்வம் தோற்றும் படியாயிருக்கிற தாமரைப் பூவையுடைய தன் திருநாபிதோன்ற.

(அணியரங்கத்தரவணையில் பள்ளிகொள்ளுமம்மான்றன்) ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான கோயிலிலே திருவநந் தாழ்வான் மேலே கண்வளர்ந் தருளுகிற ஸர்வேஶ்வரனுடைய. (அடியிணைக்கீழலர்களிட்டு) அவன்திருவடிகளின்கீழே புஷ்பாத் யுபகரணங்களைப் பணிமாறி. (அங் கடியவரோடென்றுகொலோ வணுகுநாளே) அங்கு அந்தரங்க வ்ர்த்திசெய்யு மவர்களோடே ஸஜாதீயனானநானும் கிட்டுவ தென்றோ. "அடியார்கள் குழாங்கள்" இத்யாதி. ... (ங)

மாவினைவாய்பிளந்துகந்தமாலை வேலைவண்ணனை யென்கண்ணனைவன்குன்றமேந்தி, ஆவினையன்றுயக்கொண்டவாயரேற்றையமரர்கடந்தலைவனையந்தமிழின்பப், பாவினையவ்வடமொழியைப்பற்றற்றார்கள் பயிலரங்கத்தரவணையிற்பள்ளிகொள்ளும், கோவினைநாவுறவழுத்தியென்றன்கைகள் கொய்மலர்தூயென்று கொலோகூப்புநாளே. ... ... ... ... ... ... ... (ச)

ப-ரை.—மாவினை-கேசியெனுமஸுரனுடைய, வாய்-வாயை, பிளந்து-பிளந்துபொகட்டு, உகந்த-ஆச்ரித விரோதிபோகப் பெற்றோமென்றுஉகந்த, மாலை-ஆச்ரித வ்யாமுக்தராய், வேலைவண்ணனை-கடலோடொத்த திருநிறத்தையுடையராய், என்கண்ணனை - எனக்குப்பவ்யனான க்ர்ஷ்ணனாய், அன்று - இந்த்ரன் கல்மழை பெய்வித்த அக்காலத்திலே, வன் - பலிஷ்டமாயிருப்பதொரு, குன்றம்-கோவர்த்தநபர்வதத்தை, ஏந்தி - கையால்தாங்கி, ஆவினை - பசுக்களை, உய்யக்கொண்ட - ரக்ஷித்தவராய், ஆயர் ஏற்றை - * தன்னேராயிரம் பிள்ளைகளிற்காட்டில் மேனாணித்திருக்குமவராய், அமரர்தம் - நித்யஸூரிகளிற்காட்டில், தலைவனை - ப்ரதாநரானவராய், அம் - அழகிய, தமிழ் - தமிழாலாகிய, இன்பப்பாவினை - பாட்டுப்போலே யினியராய், அவ்வடமொழியை - ஸ்ரீமந்நாராயணம்போலே இனியவராய், பற்றற்றார்கள் - தன்னையே பற்றிப் புறம்புள்ளவற்றை விட்ட அநந்யப்ரயோஜநர்கள், பயில் - நித்யவாஸம்பண்ணுகிற, அரங்கத்தரவணையிற் பள்ளிகொள்ளும்—, கோவினை - நாதனை, நாவுற - நாத்தழும்பேறும்படி, வழுத்தி - ஸ்தோத்ரங்களைப்பண்ணி, என்றன்கைகள்-என்னுடைய கைகளானவை, கொய் - காலத்தில் பறிக்கப்பட்ட, மலர்-புஷ்பங்களை, தூய்-பணிமாறி, கூப்பும்நாள் - அஞ்சலிபண்ணும்காலம், என்றுகொல் - என்றோ.

வ்யா.—நாலாம்பாட்டு. (மாவினை வாய்பிளந்து கந்தமாலை) கேஶியை அநாயாஸேநப்பிளந்து, "ஆஶ்ரிதவிரோதி போகப்பெற்றோம்" என்று உகந்த ஆஸ்ரீத வ்யாமுக்தனை. (வேலைவண்ணனை) ஆஸ்ரீத விரோதிகளை வளர்த்தாலும் விடவொண்ணாத வடிவழகையுடையவனை. (என் கண்ணனை) வெறும் வடிவழகே யன்றியே எனக்கு பவ்யனானவனை. (வன்குன்றமேந்தி யாவினையன்றுய்யக்கொண்டவாயரேற்றை) இந்த்ரன் வர்ஷிக்கிற கல்வர்ஷத்திலே வர்ஷிக்கிற கல்வர்ஷத்துக்குச் சலியாத மலையை யென்னுதல்; ப்ரமஹரமான குன்றமென்னுதல். (ஆவினையன்றுய்யக்கொண்ட) உபகாரஸ்ம்ர்தியுமில்லாத பசுக்களை ரக்ஷித்த. (ஆயரேற்றை) தன்பருவத்தில் பிள்ளை

களைக்காட்டில் தான்மேனணிப்புடையவனை. (அமரர்தந்தலைவனை) தன்னோடு ஸாம்யாபத்தி பெற்றிருக்கிற நித்ய ஸூரிகளைக் காட்டில் தலைவனானவனை. (அந்தமிழின்பப்பாவினை) * இருளிரியச்சுடர்மணி களிமைக்கும் நெற்றிபோலே இனியவனை. (அவ்வடமொழியை) ஸ்ரீமந்நாராயணம்போலே இனி யவனை. (பற்றற்றார்கள் பயிலரங்க த்தரவணையில் பள்ளிகொள்ளுங்கோவினை) தன்னையேபற்றிப் புறம் புள்ளவற்றைவிட்ட அநந்ய ப்ரயோஜநர் நித்யவாஸம் பண்ணுகிற கோயிலிலே திருவநந்தாழ்வான் மேலே கண்வளர்ந் தருளுகிறநாத னை. (நாவுறவழுத்தி) நாத்தழும்பேறும்படி ஸ்தோத்ரங்களைப்பண் ணி. (என்றன் கைகள் கொய்மலர் தூயென்று கொலோ கூப்புநா ளே) கைதழும் பேறும்படி புஷ்பாத் யுபகரணங்களைப் பணிமாறி அஞ்சலி பண்ணப் பெறுவதென்றோ. ... ... ... (௪)

இணையில்லாவின்னிசை யாழ்கெழுமி யின்பத்தும்புருவுநாரத னுமிறைஞ்சியேத்தத், துணையில்லாத்தொன் மறைநூற்றோத்திரத் தாற்றொன்மலர்க்கணயன்வணங்கியோவாதேத்த, மணிமாடமாளி கைகள் மல்கு செல்வமதி ளரங்கத்தரவணையிற் பள்ளிகொள்ளும், மணிவண்ண னம்மானைக்கண்டுகொண்டென்மலர்ச்சென்னியென்று கொலோவணங்குநாளே. ... ... ... ... (௫)

ப-ரை.—இன்பம்-பாட்டால்வந்த ஆநந்தத்தையுடைய, தும்புருநாரதன்-தும்புருநாரதனென்பவர்கள், இணையில்லா - உபமாநரஹிதமான, இன்-இனிய, இசை-இசையையுடைய, யாழ்-வீணையை, கெழுமி-மீட்டி, இறைஞ்சி - திருவடி களிலேவிழுந்து, ஏத்த - ஸ்தோத்ரம்பண்ண, துணையில்லா - ஒப்பில்லாததாய், தொல் - பழையதான, மறைநூல் - வேதசாஸ்த்ரமாகிற, தோத்திரத்தால்-ஸ்தோத்ரத்தாலே, தொல் - அநாதிஸித்தமான, மலர்க்கண் - திருநாபீகமலத் திலிடத்திலிருக்கிற, அயன் - ப்ரஹ்மாவானவன், வணங்கி - திருவடிகளிலே ப்ரணாமம்பண்ணி, ஓவாது - இடைவிடாதே, ஏத்த - ஸ்தோத்ரம்பண்ணும்படி, மணி - ரத்நமயமான, மாடம் மாளிகைகள் - மாடமாளிகைகளையும், மல்குசெ ல்வம் - மிக்க ஐச்வர்யத்தையு முடைத்தாய், மதிளரங்கத்தரவணையிற் பள்ளி கொள்ளும்—, மணி - அழகிய, வண்ணன் - வடிவையுடையனான, அம்மானை-ஸர்வேச்வரனை, கண்டுகொண்டு-இடைவிடாமல் ஸேவித்து, என்-என்னுடைய, மலர் பூச்சூடின, சென்னி - தலை, வணங்கும்நாள்-அவன்திருவடிகளிலே வணங்கும்காலம், என்றுகொலோ—.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (இணையில்லா வின்னிசை யாழ்கெழு மி) உபமாநரஹிதமான இனிய இசையையுடைய யாழைநெருங்கி. (இன்பத்தும் புருவும் நாரதனு மிறைஞ்சியேத்த) பாட்டால் வந்த ஆநந்தத்தையுடைய தும்புருவும் நாரதனும் திருவடிகளிலே விழு ந்து ஸ்தோத்ரங்களைப்பண்ண. (துணையில்லாத் தொன்மறைநூல் தோத்திரத்தால்) ஒப்பில்லாத பழைய வேதசாஸ்திரமாகிற ஸ்தோ த்ரத்தாலே. (தொன்மலர்க்க ணயன்வணங்கி யோவாதேத்த)

திருநாபீகமலத்தினிடத்திலேயிருக்கிற ப்ரஹ்மா,திருவடிகளிலேப்ரணாமம்பண்ணி விடாதேஸ்தோத்ரம்பண்ணி. (மணிமாடமாளிகைகள் மல்குசெல்வம்) மணிமயமான மாடங்களையும் மிக்கஐஶ்வர்யத்தையுமுடைய. (மதிளரங்கத் தரவணையில் பள்ளிகொள்ளும்) மிக்க அரணான பெரிய மதிளையுடைய பெரியகோயிலிலே திருவநந் தாழ்வான் மேலே பள்ளி கொண்டருளும். (மணிவண்ண னம்மானைக் கண்டுகொண்டு) அழகிய வடிவையுடைய ஸர்வேஶ்வரனைக் கண்டுகொண்டு. (என் மலர்ச்சென்னி யென்றுகொலோ வணங்குநாளே) நான் பூமுடி சூடினதலை என்றோ அவன் திருவடிகளிலே வணங்குவது. ... ... ... ... ... ... (௫)

அளிமலர்மேலயனரனிந்திரனோடேனையமரர்கடங்குழுவுமரம்பையரும்மற்றும், தெளிமதிசேர்முனிவர்கடங்குழுவு முந்தித்திசைதிசையின்மலர்தூவிச்சென்றுசேரும், களிமலர்சேர்பொழி லரங்கத்துரகமேறிக்கண் வளருங்கடல்வண்ணர்கமலக்கண்ணும், ஒளிமதிசேர்திருமுகமுங்கண்டுகொண்டென் னுள்ளமிகவென்றுகொலோவுருகுநாளே. ... ... ... ... ... ... (௬)

ப-ரை.—அளி-வண்டுகள் படிந்திருந்துள்ள, மலர்மேல் - திருநாபீசமலத்திலிருக்கிற, அயனோடு - ப்ரஹ்மாவும், அரனோடு - ருத்ரனும், இந்திரனோடு- இந்த்ரனும், ஏனை - மற்ற, அமரர்கள் தம்குழுவும் - தேவஸமூஹங்களும், அரம்பையரும் - ரம்பைமுதலான அப்ஸரஸ்ஸுக்களும், மற்றும் - இன்னும், நாராயணனே ஸர்வஸ்மாத்பரனென்று, தெளிமதிசேர் - தெளிந்தஜ்ஞாநத்தையுடையரான, முனிவர்கள் தம்குழுவும் - ஸநகாதிபரமரிஷிகளின் ஸமூஹமும், உந்தி - ஒருவர்க்கொருவர் நெருக்கித்தள்ளி, திசைதிசையில் - பார்த்த பார்த்த விடமெல்லாம், மலர்தூவி - புஷ்பவர்ஷ்டியைப் பண்ணிக்கொண்டு, சென்று சேரும் - சென்று கிட்டும், களி - தேன்மாறாத, மலர்சேர் - மலர்களையுடைத்தான, பொழில் - பொழிலையுடைய, அரங்கத்து - கோயிலிலே, உரகம்ஏறி- திருவநந்தாழ்வான்மேலே யேறி, கண்வளரும்-பள்ளிகொண்டருளுகிற, கடல் வண்ணர் - நீர்வண்ணருடைய, கமலக்கண்ணும் - தாமரைமலர்போன்ற கண்களையும், ஒளி - புகரையுடைத்தான, மதிசேர்-சந்த்ரனையொத்த, திருமுகமும்- திருமுகத்தையும், கண்டுகொண்டு—, என் உள்ளம் - என்மநஸ்ஸானது, மிகவுருகுவது - மிகவும் உருகிப்போருவது, என்றுகொலோ—.

வ்யா.—ஆறும்பாட்டு. (அளிமலர்மே லயனர னிந்திரனோடு) வண்டுகள்படிந்த அரவிந்தத்தின் மேலே யிருக்கிற ப்ரஹ்மாவும், அவன் மகனான ருத்ரனும், அவர்களோடே ஸஹபடிக்கப்பட்ட இந்த்ரனும் இவர்களுடனே. (ஏனையமரர்கள்தங் குழுவும்) அவர்கள் மூவரையு மொழிந்த தேவர்கள் திரளும். (அரம்பையரும்) ரம்பை முதலான அப்ஸரஸ்ஸுக்களும். (மற்றுந் தெளிமதிசேர் முனிவர்கள்தங் குழுவும்) ப்ரஹ்ம பாவநையாய்ச் சொல்லும் ஸநகாதிகள்திரளும். (உந்தி) ஒருவர்க்கொருவர்நெருக்கித்தள்ளி.(திசை

திசையில் மலர்தூவிச் சென்றுசேரும்) பார்த்தபார்த்த விடமெல்லாம் புஷ்ப வ்ர்ஷ்டியைப் பண்ணிக்கொண்டு சென்றுகிட்டும். (களிமலர் சேர்பொழி லரங்கத்துரகமேறி) மதுமலரை யுடைத்தான பொழிலையுடைய அரங்கத்திலே திருவநந்தாழ்வான் மேலே யேறி. (கண்வளருங் கடல்வண்ணர் கமலக்கண்ணும்) பள்ளி கொள்ளுகிற நீர்வண்ணர் கமலக்கண்ணும். (ஒளிமதிசேர்திருமுகமுங் கண்டுகொண்டு) குளிர்த்திமிக்குப் புகரையுடைய சந்த்ரனை யொப்புச்சொல்லலான அழகிய திருமுகத்தையுங் கண்டுகொண்டு. (என்றுள்ள மிக வென்றுகொலோ வுருகுநாளே) என்னெஞ்சு குளிர்ந்து உருகுவதென்றோ. ... ... ... ... ... ... (௬)

மறந்திகழுமநமொழித்துவஞ்சமாற்றி யைம்புலன்களடக்கியி டர்ப்பாரத்துன்பம், துறந்திருமுப்பொழுதேத்தி யெல்லையில்லாத் தொன்னெறிக்கணிலைநின்றதொண்டரான, அறந்திகழுமநத்தவர் தங்கதியைப்பொன்னியணி யரங்கத்தரவணையிற் பள்ளிகொள்ளும், நிறந்திகழுமாயோனைக்கண்டென் கண்கள்நீர்மல்கவென்றுகொலோ நிற்குநாளே. ... ... ... ... ... ... (௭)

ப-ரை.—மறம் - கொலை முதலியவற்றால், திகழும் - விளங்காநின்றுள்ள, மநம் - மநஸ்ஸை, ஒழித்து - வாஸநையோடேபோக்கி, வஞ்சம - பொய்யை, மாற்றி - போக்கி, ஐம்புலன்கள் - ஐம்புலன்களையும், அடக்கி - பட்டிபுகாமே கட்டி, இடர் - துக்கத்தை விளைப்பதான, பாரத்துன்பம் - * பாரமானபழவினையை, துறந்து - பற்றறுத்து, இருமுப்பொழுது - ஐந்துகாலங்களிலும், ஏத்தி - ஸ்தோத்ரம்பண்ணி, எல்லையில்லாத் தொலநெறிக்கண் - மிகப் பழையமாயாதையிலே, நிலைநின்ற—, தொண்டரான - தாஸபூதராய், அறம்திகழும்-அருளாலே விளங்குகின்ற, மநத்தவர்தம் - மநஸ்ஸையுடையரான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு, கதியை - பரமப்ராப்யனானவனாய், பொன்னி - காவேரியால் சூழப்பட்டு, அணி - லீலாவிபூதிக்காபரணமான, அரங்கத்து - கோயிலிலே, அரவணையில் - திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலே, பள்ளிகொள்ளும் - கண்வளர்ந்தருளுமவனாய், நிறந்திகழும் - அழகுவிளங்காநின்றுள்ள, மாயோனை - ஆச்சர்யபூதனானவனுடைய வடிவழகை, என் கண்கள்—, கண்டு - கண்டுகளித்து, நீர்மல்க - ஆநந்தாச்ருப்ரவஹிக்கும்படி, நிற்குநாள் - நிற்குங்காலம், என்றுகொலோ—.

வ்யா.—ஏழாம்பாட்டு. (மறந்திகழு மநமொழித்து) மறம்- கொலையும், சினமும், கொடுமையும். இவற்றால் விளங்காநின்ற மநஸ்ஸை வாஸநையோடே போக்கி. (வஞ்சமாற்றி) பொய்யைப்போக்கி. (ஐம்புலன்களடக்கி) * வன்புலச் சேக்கைப் பட்டிபுகாமேகட்டி. (இடர்ப்பாரத் துன்பந்துறந்து) மிக்க துக்கத்தை விளைப்பதான * பாரமாய பழவினையைப் பற்றறுத்து. (இருமுப்பொழுதேத்தி) பஞ்சகாலமென்னுதல்; பெரியமுப்பொழுதென்னுதல். இக்காலங்களிலேயேத்தி. (எல்லையில்லாத் தொன்னெறிக் கண்ணிலை நின்ற

தொண்டரான) அளவிறந்த பழையமர்யாதையிலேசிலவரால் கல க்கவொண்ணாதபடி நிலைநின்ற வைஷ்ணவர்களான. (அறந்திகழு ம் மநத்தவர்தங்கதியை) ஆந்ரூம்ஸ்ய ப்ரதாநராயிருக்கு மவர்க ளுக்கு பரமப்ராப்யனானவனை. (பொன்னி யணியரங்கத்தரவணை யில் பள்ளிகொள்ளும்) * பொன்னி சூழரங்கத்திலே திருவநந் தாழ் வானாகிற படுக்கையிலே கண்வளர்ந்தருளும். (அணி அரங்கம்) லீலாவிபூதிக்கு ஆபரணமான கோயில். (நிறந்திகழுமாயோனைக் கண்டு) அழகுவிளங்காநின்ற ஆஸ்சர்ய பூதனைக்கண்டு. (என்கண் கள் நீர்மல்கவென்று கொலோநிற்குநாளே) அவனுடைய வடிவ ழகைக்கண்டு களித்து ஆநந்தாஸ்ரு ப்ரவஹிக்கநிற்கும் நாள் என் றோ. ... ... ... ... ... ... ... (எ)

கோலார்ந்தநெடுஞ்சார்ங்கங்கூனற்சங்கங்கொலையாழி கொடுந் தண்டு கொற்றவொள்வாள், காலார்ந்தகதிக்கருடனென்னும்வென் றிக்கடும்பறவையிவையனைத்தும்புறஞ்சூழ்காப்பச், சேலார்ந்தநெடு ங்கழனிசோலைசூழ்ந்த திருவரங்கத்தரவணையிற் பள்ளிகொள்ளும், மாலோனைக்கண்டின்பக் கலவியெய்திவல்வினையேனென்றுகொலோ வாழுநாளே... ... ... ... ... ... ... (அ)

ப-ரை.—கோல் ஆர்ந்த - திருச்சரங்களோடுகூடி, நெடும் - பெரிதாயிருக் கின்ற, சார்ங்கம் - ஸ்ரீசார்ங்கமும், கூன் - பகவதநுபவத்தாலே வளைந்திருக் கிற, நல்-தன்னுடைய ஸைகயாலே ஆச்ரிதவிரோதிகளைப்போக்கும்நன்மையையுடைத் தான, சங்கம் - ஸ்ரீபாஞ்சஜந்யமும், கொலை - சத்ருக்களைக் கொல்லுமவனான, ஆழி - திருவாழியாழ்வானும், கொடும் - யார்க்கும்போதே பகைவர்மண்ணுண் ணும்படியிருக்கிற, தண்டு - ஸ்ரீகௌமோதகீயென்னும் கதையும், கொற்றம்- ஜயத்தைத்தருமதாய், ஒள் - ப்ரகாசம் மிகுந்த, வாள் - ஸ்ரீநந்தகமென்னும் வாளும், கால் - காற்றின் வேகம்போலே, ஆர்ந்த-பொருந்தின, கடும்கதி-மிக வும் வேகமானசெலவுகையை யுடைய, கருடனென்னும்-பெரிய திருவடியென் கிற பேரையுடையனாய், வென்றி - ஜயப்ரதனான, பறவை-இவையனைத்தும் - பக்ஷிராஜனும்ஆகியஇவர்களெல்லாரும், புறம்சூழ் - நாற்புறமும் சூழ்ந்து, கா ப்ப - காத்துக்கொண்டிருக்க, சேல் - சேல் மத்ஸ்யங்களாலே, ஆர்ந்த-நிரம் பின, நெடும்-பெரிய, கழனி - கழனிகளும், சோலை - சோலைகளும், சூழ்ந்த- சூழ்ந்திருக்கிற, திருவரங்கத்தரவணையில் பள்ளிகொள்ளும் மாலோனை—, வல்வினையேன் - மஹாபாபியானநான், கண்டு - கண்ணாரக்கண்டு, இன்பம் - நிரதிசய ஆநந்தயுக்தனாகும்படி, கலவியெய்தி-ஸம்ச்லேஷித்து, வாழும்நாள்- அநுபவித்து வாழப்பெறுங்காலம், என்றுகொலோ—.

வ்யா.—எட்டாம்பாட்டு. (கோலார்ந்த நெடுஞ்சார்ங்கம்) திரு ச்சரங்களோடேகூடின ஸ்ரீஸார்ங்கம். "எப்போதுங்கைகழியான்" என்னுமாப்போலே எப்போது இவனையுண்டாமென்றறி யாமை யாலே திருச்சரங்களைத்தொடுத்தபடியே யாய்த்து ஸ்ரீஸார்ங்கமிரு ப்பது. (கூன்நல்சங்கம்) பகவதநுபவஜநிதத்தால்வந்த செருக்காலே

கூனியா யாய்த்து ஸ்ரீபாஞ்சஜந்ய மிருப்பது. (கொலையாழி) இவர்களநுபவத்தில் இழியப்போதின்றியே ப்ரதிபக்ஷத்தை இரு துண்டமாகவிடுகைபணிப்போருமாய்த்து திருவாழியாழ்வானுக்கு. (கொடுந்தண்டு) பிடித்தபிடியிலே உகவாதார் மண்ணுண்ணும்படி யாயிருக்கிறகதை. (கொற்றவொள்வாள்) ஐஶ்வர்ய ப்ரகாஶகமான திருக்கொற்றவாள். கொற்றம் - வெற்றி. (காலார்ந்த கதிக்கருட னென்னும் வென்றிக்கடும் பறவை) காற்றினுடைய மிக்கவேகம் போலே யிருக்கிற கதியை யுடையனாய் பெரியதிருவடி யென்கிற பேரையுமுடையனா யிருக்கிற பறவை. (இவையனைத்தும் புறஞ் சூழ்காப்ப) "ராமலக்ஷ்மணகுப்தா" "ராமலக்ஷ்மண குப்தாஸா" என் னுமாப்போலே சடற்கரைவெளியில் ஸ்ரீஸேனையெல்லாம் குழைச் சரக்காய், தாமும் தம்பியாருங் காக்குமாப்போலே பெரிய பெரு மாள் கண்வளர்ந் தருளுகையாலே பெரியதிருவடி முதலாசஸ்ரீபஞ் சாயு தாழ்வார்கள் சுற்றுங் காத்துக் கொண்டாய்த்து நிற்பது. (சேலார்ந்த நெடுங்கழனிசோலை சூழ்ந்த திருவரங்கத்தரவணையில் பள்ளிகொள்ளும் மாலோனை) சேலாலே நிரம்பின கழனிகளும் சோலைகளும் சூழ்ந்தகோயிலிலே திருவநந்தாழ்வான் மேலேகண்வ ளர்ந் தருளுகிற ஸர்வாதிகனை. (கண்டின்பக் கலவியெய்தி) கண்டு நிரதிஶயாநந்த யுக்தனும்படி ஸம்ஶ்லேஷித்து.(வல்வினையேனென் றுகொலோவாழுநாளே) லோகாந்தரத்திலே போய்க்காணவேண்டு ம்வஸ்து இங்கேஸந்நிஹிதமாயிருக்கச்செய்தே அநுபவிக்கவொண் ணாத மஹாபாபத்தைப்பண்ணின நான் அநுபவித்துவாழப்பெறுவ தென்றோ. பகவதநுபவத்துக்கு விரோதியாயுள்ளவையெல்லாம் பாபமாயிருக்குமிறே. ... ... ... ... ... (அ)

தூராதமநக்காதற்றொண்டர் தங்கள்குழாங் குழுமித்திருப்புக ழ்கள்பலவும்பாடி, ஆராதமநக்களிப்போடழுதகண்ணீர்மழைசோர நினைந்துருகியேத்திநாளும், சீரார்ந்தமுழவோசைபரவைகாட்டுந் திருவரங்கத்தரவணையிற்பள்ளிகொள்ளும், போராழியம்மானைக்கண் டு துள்ளிப்பூதலத்திலென்றுகொலோ புரளுநாளே... ... (கூ)

ப-ரை.—ஆராத - ஒருக்காலும் ஆராதிருக்கிற, காதல் - ஆசையையுடைத் தான,மநம்-மநஸ்ஸை யுடையராய், தொண்டர்தங்கள் குழாம்-தாஸபூதரான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய ஏழாத்திலே, குழுமி - கலந்து, திருப்புகழ்கள் பல வும்பாடி - அவனுடைய குணங்களுக்கு வாசகமான திருநாமங்கள் பலவற் றையும்பாடி, அத்தாலே, ஆராத - ஆராதிருக்கிற, மநக்களிப்போடு - மநக்களி ப்பாலே, அழுத—, கண் கண்களினின்றும்,நீர் - ஆநந்தாச்ருக்கள், மழை-மழை போலே, சோர-ப்ரவஹிக்க,நினைந்து-அவனைநினைத்து, உருகி-அத்தாலேயுருகி, ஏத்தி - ஸ்தோத்ராதிகளைப்பண்ணி, நாளும் - நாள்தோறும், சீர்ஆர்ந்த - ஐச் வர்ய ப்ரகாசகமான, முழவோசை - வாத்யகோஷங்கள், பரவை - ஸமுத்ர

கோஷத்தை, காட்டும்-காட்டாநிற்கிற, திருவரங்கத்தரவணையில் பள்ளிகொள்ளும்—, போர் - யுத்தோர்முகமான, ஆழி - திருவாழியைக்கையிலேயுடைய, அம்மானைக்கண்டு - ஸர்வேச்வரனைக்கண்டு, துள்ளி - ஸஸம்ப்ரம ந்ருத்தம் பண்ணி, பூதலத்தில்-பூமியிலே, புரளும்நாள் - புரளுங்காலம், என்றுகொலோ—.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (தூராத மனக்காதல் தொண்டர்தங்கள்குழாங்குழும்) "தூராக்குழி தூர்த்தெனைநா ளகன்றிருப்பன்" என்று - ஸம்ஸாரிகள் ஶப்தாதிவிஷயங்களிலே அநுபவித்தாலும் இந்த்ரியங்களை த்ருப்தியாக்கப் போகாதாப்போலே, பகவதநுபவம் ஒருக்காலும் ஆராதிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் குழாத்திலே யென்னையுங்கூடக் கலசி. (திருப்புகழ்கள் பலவும்பாடி) அவனுடைய கல்யாண குணங்களுக்கு வாசகமான திருநாமங்கள் பலவற்றையும் பாடி.(ஆராதமனக்களிப்போ டழுதகண்ணீர்மழைசோர) திருநாமங்களைச் சொன்னபடியாலே மநஸ்ஸுக்கு ஆராமையாலே ஹ்ருஷ்டனாய் அத்தாலே ஆநந்தாஶ்ருப்ரவஹிக்க. (நினைந்துருகியேத்தி) இவர்கள் திரளிலே கூடி திருநாமத்தைச் சொன்னபடியாலே திருநாமத்வாராவிஷயத்தை நினைத்து அத்தாலேயுருகி, "உருகிவழிந்து புறப்பட்டசொல்" என்னும்படி ஸ்தோத்ராதிகளைப் பண்ணி. (நாளும் சீரார்ந்த வித்யாதி) ஐஶ்வர்யப்ரகாஶகமான வாத்யகோஷங்கள் ஸமுத்ரகோஷத்தைக் காட்டாநிற்கிற கோயிலிலே திருவநந்தாழ்வான்மேலே நித்யவாஸம்பண்ணுகிற யுத்தோந்முகமான திருவாழியைக் கையிலேயுடைய ஸர்வேஶ்வரனை. (துள்ளி) ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணி. ( பூதலத்திலென்றுகொலோ புரளுநாளே ) ஸிம்ஹாஸநத்திலே இருமாந்திருக்கு மிருப்பொழிந்து ஹ்ருஷ்டனாய் பூமியிலே புரளுவதென்றுகொலே. ... ... (கூ)

வன்பெருவானகமுய்ய வமாருய்ய மண்ணுய்ய மண்ணுலகின் மனிதருய்யத், துன்பமிகுதுயரகலவயர்வொன்றில்லாச் சுகம்வளர வகமகிழுந்தொண்டர்வாழ, அன்பொடுதென்திசைநோக்கிப் பள்ளிகொள்ளுமணியரங்கன்திருமுற்றத்தடியார்தங்கள், இன்பமிகுபெருங்குழுவு கண்டியானு மிசைந்துடனே யென்றுகொலோ விருக்குநாளே. ... ... ... ... ... (கO)

ப-ரை.—வல்-நைமித்திகப்ராளயத்திலழியாததாய், பெரு - பெருமைதங்கிய, வானகம் - ஸ்வர்க்கம் முதலிய லோகங்கள், உய்ய - உய்யும்படியாகவும், அமரர் - தேவர்கள், உய்ய - உஜ்ஜீவிக்கும்படியாகவும், மண் - பூலோகம், உய்ய - உய்யவும், மண்ணுலகில் - பூலோகத்திலுண்டான, மனிசர்- மநுஷ்யர், உய்ய - உஜ்ஜீவிக்கவும், மிகுதுன்பம் - மிக்க து:கத்தைவிளைப்பதான, துயர் - பாபங்கள், அகல - நீங்கவும், அயர்வொன்றில்லா - து:கம் கலவாத, சுகம் - நித்யமான ஸுகமானது, வளர - வளரவும், அகம்மகிழும்- நிரதிசயாநந்தயுக்தரான, தொண்டர் - ஸ்ரீவைஷ்ணவர்கள், வாழ - வாழவும்,

அன்பொடு - ஸ்ரீவிபீஷணாழ்வான் பக்கலுண்டான அன்பாலே, தென்திசை நோக்கி - "தென்திசையிலங்கைநோக்கி" என்கிறபடியே - லங்கையைப்பார்த்தவண்ணமாக, பள்ளிகொள்ளும் - கண்வளர்ந்தருளுகிற, அணியரங்கன்-பெரியபெருமாளுடைய, திருமுற்றத்து - உள்ளில் திருமுற்றத்திலே, மிகுஇன்பம்-நிரதிசயாநந்தயுக்தரா யிருக்கிற, அடியார் தங்கள் பெருங்குழுவுகண்டு - ஸ்ரீவைஷ்ணவர்களுடைய பெரியதிரளைக்கண்டு, யானும் - நானும், இசைந்து-அவர்களிலே ஒருவனாகவிசைந்து, இருக்கும்நாள் - இருக்குங்காலம், என்றுசொலோ—.

வ்யா.—பத்தாம்பாட்டு. (வன்பெருவானகமுய்யவமரருய்ய) நைமித்திகப்ரளயாபத்துக்கு இளையாத ப்ரஹ்மலோகம் முதலாக மேலுண்டான லோகங்களுய்ய. அங்குண்டான ப்ரஹ்மாதிகளுஞ் ஜீவிக்க வாய்த்து ப்ரஹ்மலோகத்தில் கோயிலாழ்வார் எழுந்தருளியிருந்தபடி. (மண்ணுய்ய மண்ணுலகில் மனிதருய்ய) ஸ்ரீவிபீஷணாழ்வானுக்காக அங்கு நின்றும் இங்கேற வெழுந்தருளுகையாலே பூமியும் பூமியிலுண்டான சேதநரு முஜ்ஜீவிக்க. (துன்பமிகுதுயரகல) நித்யதுக்கத்தை விளைப்பிப்பதான பாபங்கள் அகல. (அயர்வொன்றில்லாச்சுகம் வளர) துக்கம் விஸ்ரமியாத நித்யமானஸுகம்வளர. (அகமகிழுந்தொண்டர்வாழ) பகவதநுபவத்தாலே நிரதிசயாநந்தயுக்தரான ஸ்ரீவைஷ்ணவர்கள் வாழ. (அன்பொடு தென்றிசைநோக்கிப் பள்ளிகொள்ளும் அணியரங்கன் திருமுற்றத்து) ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு ராஜ்யத்தைக் கொடுத்து அத்திக்கைப்பார்த்துக் கண்வளர்ந்தருளுகிற பெரியபெருமாளுடைய உள்ளில் திருமுற்றத்திலே. (அடியார் தங்கள் இன்பமிகு பெருங்குழுவுகண்டு) நிரதிசயாநந்த யுக்தரா யிருக்கிற ஸ்ரீவைஷ்ணவர்கள் திரளைக்கண்டு. (யானுமிசைந்து) "அபிஷிக்தக்ஷத்ரியன்" என்று என்னை நினையாதே அவர்களிலே யொருவனாக விசைந்து. (உடனே யென்றுசொலோ இருக்குநாளே) என்னைச் சிலர் ஸேவிக்க நான்கியாமகனாயிருக்குமிருப்பையொழிந்து ஸ்ரீவைஷ்ணவர்கள் திரளிலே ஸேவித்திருப்பதென்றோ. ... ... ... ... (க0)

திடர்விளங்குகரைப்பொன்னிநடுவுபாட்டுத் திருவரங்கத்தரவணையிற்பள்ளிகொள்ளும், கடல்விளங்குகருமேனியம்மான்றன்னைக்கண்ணாரக்கண்டுகக்குங்காதல்தன்னால், குடைவிளங்கு விறற்றானைக்கொற்றவொள்வாள் கூடலர்கோன் கொடைக்குலசேகரன் சொற்செய்த, நடைவிளங்குதமிழ்மாலைபத்தும்வல்லார் நலந்திகழ்நாரணனடிக்கீழ்நண்ணுவாரே. ... ... ... (கக)

ப-ரை.—விளங்கு - விளங்காநின்ற, திடர் - மேடான, கரை - திருக்கரையையுடைத்தான, பொன்னி - காவேரிசூழ்ந்த, நடுவுபாட்டு - மத்ய ப்ரதேசத்திலே, திருவரங்கத்தரவணையில் பள்ளிகொள்ளும்—, கடல் - கடல்போலே, விளங்கு - ப்ரகாசிக்குமதாய், கரு - ச்யாமளமான, மேனி - திருமேனியை

யுடைய, அம்மான்றன்னை - ஸர்வேச்வரனை, கண் ஆர - கண்கள் நிறையும்படி, கண்டுகக்கும் காதல் தன்னால் - கண்டநுபவிக்க வேணுமென்னு மாசையாலே, விளங்கு - விளங்குகிற, குடை - வெண் கொற்றக்குடையையும், விறல்-வெற்றியையுடைய, தானை - ஸேனையையும், கொற்றம் - ஐச்வர்ய ப்ரதமான, ஒள்-ஒளி பொருந்திய, வாள் - வாளையுமுடையராய், கூடலர் - மதுரையிலுள்ளார்க்கு, சேரன் - நிர்வாஹகருமாய், கொடை - கொடையையு முடையானரான, குல சேகரன் - ஸ்ரீகுலசேகரப்பெருமாள், சொற்செய்த - அருளிச்செய்த தாய், நடைவிளங்கு - நடையால்விளங்குகிற, தமிழ்மாலைபத்தும் வல்லார் - தமிழ்த் தொடையான இப்பத்துப்பாட்டையும் சொல்லவல்லவர்கள், நலம்திகழ்-சீலாதிகுணபூர்ணராய், நாரணனடிக்கீழ் - வத்ஸலராயிருக்கும் பெரியபெருமாள் திருவடிகளின்கீழ், நண்ணுவார்-கிட்டப்பெறுவர்கள்.

† அ.—திருநாமப்பாட்டு. "భూవోభూత్యైభూభుజాం భూసురాణాం దివ్యోగుప్త్యై శ్రేయసేదేవతానామ్ । శ్రియైరాజ్ఞాంచోళవంశోద్భవానాం శ్రీమద్రఙ్గం సహ్యజామాజగామ" "பூவோபூத்யை பூபுஜாம்பூஸுராணாம் திவ்யோகுப்த்யை ச்ரேயஸே தேவதாநாம் । ச்ரியைராஜ்ஞாம்சோள வம்சோத்பவாநாம் ஸ்ரீமத்ரங்கம் ஸஹ்யஜாமாஜகாம."

வ்யா.—(திடர்விளங்குகரைப் பொன்னிநடுவுபாட்டு) விளங்காநின்ற திருக்கரையை யுடைத்தாய்க்காவேரிசூழ்ந்த. (திருவரங்கத் தரவணையில் பள்ளிகொள்ளும் கடல்விளங்கு கருமேனியம்மான் றன்னை) கோயிலிலே திருவநந்தாழ்வான் மேலே கண்வளர்ந்தருளுகிற கடல்போலே ச்யாமளமான திருமேனியையுடைய ஸர்வேச்வரனை. (கண்ணாரக்கண்டு உகக்கும்காதல்தன்னால்) கண்ணாலே கண்டநுபவிக்கவேணுமென்னும் ஆசைப்பாட்டோடே. (குடைவிளங்கு விறல்தானைக் கொற்றவொள்வாள்கூடலர்கோன்) விளங்குகிற வெண்கொற்றக்குடையையும் வெற்றியையுடைய ஸேனையையும், ஐச்வர்யப்ரகாசகமான ஆனையையுமுடையராய் மதுரைக்கு நிர்வாஹகருமான. (கொடைக்குலசேகரன் சொற்செய்த) கொடைமாறாதே கொடுக்கும் பெருமாள் அருளிச்செய்த. (நடைவிளங்கு தமிழ்மாலை பத்தும்வல்லார்) உள்ளில் அர்த்தத்திலிழியவேண்டாதே, பதங்கள் சேர்ந்த சேர்த்திகள் பார்க்கவேண்டாதே, இதுதானே ஆகர்ஷகமாயிருக்கிற தமிழ்த்தொடை பத்தும்வல்லார். (நலந்திகழ் நாரணனடிக்கீழ் நண்ணுவாரே) சீலாதிகுணபூர்ணராய், ஸர்வஸ்வாமிகளாய், வத்ஸலராயிருக்கும் பெரியபெருமாள் திருவடிகளின்கீழே யநுபவிக்க ஆசைப்பட்டாப்போலே கிட்டப்பெறுவர்கள். ... ... ... ... (கக)

அடிவரவு-இருள், வாய், எம்மா, மாவினை, இணை, அளி, மறம், கோல், தூரா, வன், திடர், தேட்டு.

குலசேகரப்பெருமாள் திருவடிகளே சரணம்.

ஆ. திருமொழி - க - ஐ பாட்டு - கo

---

† "பதிகேழாம்பாட்டு" என்றும் சில ஸ்ரீகோசங்கள்.

## இரண்டாந்திருமொழி தேட்டரும் ப்ரவேசம்.

————:O:————

அ.—பகவத்விஷயத்திலே கைவைத்தார்க்கு ஸம்பவிப்பான சில ஸ்வபாவங்களுண்டு; - "ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப: ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநம்" "ஆநுகூல்யஸ்யஸங்கல்ப: ப்ராதிகூல்யஸ்யவர்ஜநம்." ஆநுகூல்யமாவது-பாகவதவிஷயத்திலும் பகவத்விஷயத்திலும் பண்ணுமவை. பகவத் விஷயம் பூர்ணமாகையாலே இவனுக்கு ஆநுகூல்யம் பண்ணுகைக் குத் துறையில்லையிறே. இப்படி துறையில்லையென்று இவன் கைவா ங்காமைக்கிறே இவனுகந்தத்ரவ்யமே தனக்குத் திருமேனியாகவும் இவன் திருமஞ்சநம்பண்ணினபோது அமுதுசெய்து அல்லாத போது பட்டினியுமாம்படியிறே அவர்களுக்குத் தன்னை யமைத்து வைப்பது; இப்படியாய்த்ததில்லையாகில் பரிபூர்ணவிஷயத்தில் இவ னுக்கு கிஞ்சித்கரிக்கைக்குத் துறையில்லையிறே. "ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம்" "ஜ்ஞாநீத்வாத்மைவமேமதம்" என்றும் "மம ப்ராணா ஹி பாண்டவா:" "மமப்ராணாஹிபாண்டவா:" என்றும், "பத்தராவி" என்றும்-ததீ யவிஷயத்திலே பண்ணும் ஆநுகூல்யமும் பகவத்விஷயத்திலே பண்ணிற்றாமிறே. ஆகையாலே இவரும் தமக்கு இவையிரண்டும் பிறந்த தென்கிறார். பகவத்விஷயத்தில் பிறந்த ஆநுகூல்யம் சொன்னார் - கீழில் திருமொழியில்; ததியவிஷயத்தில் ஆநுகூல்யம் பிறந்தபடி சொல்லுகிறார் - இத்திருமொழியில். ...

வ்யா.—முதற்பாட்டு. (தேட்டருமித்யாதி) முடியபாகவதவிஷ யமுத்தேஸ்யமாகிறதும் பகவத்விஷயத்திலே அவகாஹித்தாரென் னுமதிறே. "இன்னான் அர்த்தமுடையன், க்ஷேத்ர முடையன்" என்று ஆஸ்ரயிப்பாரைப்போலே, பகவத்ப்ரத்யாஸத்தி யுடையா ரென்றிறே இவர்களைப்பற்றுகிறது. பகவத்விஷயத்திலே ஸ்தோத் ரம்பண்ண இழிந்தவர் ஆசார்யவிஷயத்தை ஸ்தோத்ரம்பண்ணப் புக்கு அவர்க்கு நிறமாகச்சொல்லிற்று பகவத் விஷயத்தில் ஜ்ஞான பக்திகளையிறே; "ஜ்ஞாநவைராக்யராஶயே" "ஜ்ஞாநவைராக்யராஶயே."

தேட்டருந்திறற்றேனினைத்தென்னரங்கனைத்திருமாதுவாழ்
வாட்டமில்வனமாலைமார்பனைவாழ்த்திமால்கொள்சிந்தையராய்
ஆட்டமேவியலர்ந்தழைத்தயர்வெய்துமெய்யடியார்கள்தம்
ஈட்டங்கண்டிடக்கூடுமேலதுகாணுங்கண்பயனாவதே. (க)

ப-ரை.—தேட்டு-ஸ்வயத்நத்தால் தேடுகைக்கு, அரும் - அரிதாய், திறல்-தன்னை அநுபவிக்கைக்குத் தக்க பலத்தைக்கொடுக்கும், தேனினை - தேன்போ லே பரமபோக்யனாய், தென் - ஸ்ப்ருஹணீயமான, அரங்கனை - திருவரங்கத் திலே நித்ய வாஸம் பண்ணுமவனாய், திருமாது - பெரியபிராட்டியார், வாழ்-நித்யவாஸம்பண்ணுமதாய், வாட்டம்இல்-ஒருக்காலும்வாடாமல், வனம்-அழகு

பெற்றிருக்கிற, மாலை - திருமாலை சாத்தியருளின, மார்பனை - திருமார்புடையவனை, வாழ்த்தி - அவனும் அவளுமானசேர்த்திக்கு மங்களாசாஸநம் பண்ணி, மால்கொள் சிந்தையராய் - பித்தேறின மநஸ்ஸையுடையராய், அத்தாலே, ஆட்டம்மேவி - ஆடுகையிலே ஒருப்பட்டு, அலர்ந்து - ஆடலின் மிகுதியால்வருந்தி, அழைத்து - வாய்படைத்த ப்ரயோஜநம்பெறக்கூப்பிட்டு, அயர்வெய்தும் - மெய்ம்மறந்து நிற்கிற, மெய் - அநந்ய ப்ரயோஜநரான, அடியார்கள் தம் ஈட்டம் - அடியார்கள் குழாங்களை, கண்டிடக்கூடுமேல் - காணக்கூடுமாகில், கண்பயனாவது-கண்படைத்த ப்ரயோஜநமாகிறது, அதுகாணும்-அதுவே யாம்.

வ்யா.—(தேட்டரும்) தாமேவந்து ஸுலபராமித்தனை யல்லது ஸ்வயத்நத்தால் காணவொண்ணாதென்கை. (திறல்தேனினை) "ஸர்வரஸ:" "ய ஆத்மதாபலதா" என்னுமாப்போலே தன்னையுங்கொடுத்து த்தன்னையநுபவிக்கைக் கீடானபலத்தை யுங்கொடுக்கும்தேன். (தேனினைத்தென்னரங்கனை) ஸ்ப்ர்ஹணீயமான திருவரங்கத்திலே நித்யவாஸம்பண்ணு மவனாய், திருமேனியின் ஸ்பர்ஶத்தாலே ஒருக்காலைக்கொருக்கால்செவ்விபெறுமாய்த்து இட்டதிருமாலை. (வாழ்த்தி) "வடிவாய் நின்வலமார்பினில்வாழ்கின்றமங்கையும் பல்லாண்டு"என்கிறபடியே அவளும் இவனும் சேர்ந்த சேர்த்திக்கு மங்களாஶாஸநம் பண்ணி. (மால்கொள் சிந்தையராய்) பித்தேறின மநஸ்ஸையுடையராய். (ஆட்டமேவி) ஆடவேணுமென்னும் கார்யபுத்யாவன்றி யிலேப்ரேமம் ஒட்டாமையாலே ஆட்டமேவி. (அலர்ந்தழைத்து) அலர்ந்து கார்யப்பாடறக் கூப்பிட்டு. (அயர்வெய்தும் மெய்யடியார்கள்தம்) க்ரமப்ராப்தி பொறாமையாலே அறிவுகுடிபோய் பரவஶராய் அநந்யப்ரயோஜநருடைய. (ஈட்டம்)இப்படியிருப்பார் உமக்கு எத்தனைபேர்வேணுமென்ன; * அடியார்கள் குழாங்களைக்காணப்பெறில். (கூடுமேல் அதுகாணுங்கண் பயனாவதே) இதுகூடிற்றாகில் ப்ரயோஜநங் கண்ணுக்கி தல்ல தில்லை. த்ர்ஷ்டப்ரயோஜநமிது. ... ... ... ... (க)

தோடுலாமலர்மங்கைதோளிணைதோய்ந்ததுஞ்சுடர்வாளியால்
நீடுமாமரஞ்செற்றதுந்நிரைமேய்த்ததும்மிவையேநினைந்
தாடிப்பாடியரங்கவோவென்றழைக்குந்தொண்டரடிப்பொடி
ஆடநாம்பெறிற்கங்கைநீர்குடைந்தாடும்வேட்கையென்னாவதே(௨)

ப-ரை.—தோடுஉலாம்-இதழ்மிக்கிருந்துள்ள, மலர் - தாமரைப்பூவை வாஸஸ்தாநமாகவுடைய, மங்கை - பெரியபிராட்டியாருடைய, தோள்இணை-திருத்தோள்களோடு, தோய்ந்ததும் - அணைந்தருளினதும், சுடர் - புகரையுடைய, வாளியால் - அம்பாலே, நீடு - உயர்ந்த, மாமரம் - மராமரங்களேழையும், செற்றதும் - ஒருக்காலே துளையாம்படி எய்ததும், நிரைமேய்த்ததும் - பசுநிரையை மேய்த்ததும், ஆகிய, இவையேநினைந்து-இந்த சீலாதிகுணங்களையே நினைத்து, ஆடி-ப்ரீதிப்ரகாஶத்தாலே இருந்தவிடத்திலிருக்கமாட்டாதேயாடி,

பாடி - அதுக்குப்போக்குவிட்டுப்பாடி, ஓ அரங்க என்று அழைக்கும் - ஓ அரங்கனே என்று கூப்பிடுகிற, தொண்டர் - தாஸபூதரான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய, அடிப்பொடி - பாதரேணுக்களிலே, நாம்—, ஆடப்பெறில் - அவகாஹிக்கும்படியான பாக்யத்தைப்பெற்றால், கங்கைநீர் - கங்காஜலத்திலே, குடைந்து - அவகாஹித்து, ஆடும் - நீராடுதலில் உண்டாகும், வேட்கை - ஆசையானது, என் ஆவது - என்னப்ரயோஜநத்தையுடையது.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (தோடுலாமலர்மங்கைதோளிணை தோய்ந்ததும்) இதழ்மிக்கிருந்த தாமரைப்பூவை வாஸஸ்தாநமாக வுடைய பெரியபிராட்டியார் திருத்தோள்களிரண்டையும் தோய்ந்ததும். தனியன் பெருவெள்ளத்திலேயிழிந்து அநுபவிக்கத்தேடினாற்போலே தோய்ந்ததும். (சுடர்வாளியால்) புகரையுடைய அம்பாலே. (நீடுமாமரம்செற்றதும்) ஓக்கத்தையுடைத்தான மராமரங்களேழையும், பண்டே துளையானவற்றிலே ஓட்டினாற்போலேயாய்த்து, அந்தமாய் பலவத்தரமான ஸப்தஸாலத்தை நிரஸித்ததும். ஆஸ்ரிதரை விஸ்வஸிப்பிக்கும் செயலிறே. (நிரைமேய்த்ததும்) உபய விபூதிநாயகனாயிருந்துவைத்து கையிலே யொருகோலையுங்கொண்டு பசுமேய்த்ததும். (இவையே நினைந்து) இந்தலீலாதிகுணங்களையே நினைந்து. இவற்றை நினைக்குமதொழிய வேறொரு ப்ரயோஜநத்தையும் கணிசியாதே. (ஆடிப்பாடி) ப்ரீதிப்ரகர்ஷத்தாலே யிருக்கமாட்டாதே ஆடிப்பாடி. (அரங்கவோ என்றழைக்கும்) பெருமாள் திருநாமத்தைச் சொல்லி யாற்றமாட்டாதே கூப்பிடும். (தொண்டரடிப்பொடியாட நாம்பெறில்) பகவத்குணவித்தரான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய பாதரேணுக்களிலே அவகாஹிக்கப்பெறில். (கங்கைநீர்குடைந்தாடும் வேட்கையென்னாவதே!) எப்போது மொக்க பகவத்ஸம்பந்தமுடைய ராகையாலே தீர்த்த பூதரான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய பாதரேணுக்களிலே அவகாஹிக்கப்பெறில் கங்கைநீர்குடைந்தாடும் வேட்கை யென்னாவதே. காதாசித்கஸம்பந்தமே யாய்ப்பலசிக்குத்தலைகளிலே புக்கு உபகதிப்பட்ட கங்கையாடினால் என்ன ப்ரயோஜநமுண்டு. [நலந்திகழ்சடையான்] (இத்யாதி) பொதுவானதிறே அது. ... ... ... ... (உ)

ஏறடர்த்ததுமேனமாய்நிலங்கீண்டதும்முன்னிராமனாய்
மாறடர்த்ததுமண்ணளந்ததுஞ்சொல்லிப்பாடிவண்பொன்னிப்பேர்
ஆறுபோல்வருங்கண்ணநீர்கொண்டரங்கன்கோயிற்றிருமுற்றம்[னே
சேறுசெய்தொண்டர் சேவடிச்செழுஞ் சேறென் சென்னிக் கணிவ

ப-ரை.—நப்பின்னைப்பிராட்டிக்காக, ஏறு - ரிஷபங்களேழையும், அடர்த்ததும் - ஒருக்காலேகொன்றதும், ஸ்ரீபூமிப்பிராட்டிக்காக, ஏனமாய் - மஹாவராஹமாய், நிலம் - அண்டபித்தியிலே சேர்ந்தபூமியை, கீண்டதும் - ஒட்டுவிடுவித்தெடுத்ததும், முன் - இராவணன் பிராட்டியைப் பிரித்தவன்று, இரா

மனாய் - சக்ரவர்த்தித் திருமகனாகத் திருவவதரித்தருளி, மாறு - எதிரியான ராவணனை, அடர்த்ததும் - கொன்றதும், அச்சிரதனை இந்த்ரனுக்காக, மண் - மஹாபலிகைக்கொண்ட பூமியை, அளந்ததும்சொல்லி - அளந்து அவனுக்குக்கொடுத்ததும் ஆகிய சரிதங்களைச்சொல்லி, பாடி - ப்ரீதிப்ரகர்ஷத்தாலே பாடி, வண் - பெருவெள்ளத்தையுடைய, பெரு - பெரிய, பொன்னியாறு - காவேரிபோலே, வரும் - வருகிற, கண்ணநீர்கொண்டு - கண்ணநீராலே, அரங்கன் - அழகிய மணவாளருடைய, கோயில் - கோயிலின், அலங்கரிக்கப்பட்டிருக்கிற, திருமுற்றம் - உள்ளில் திருமுற்றத்தை, சேறுசெய் - சேறாக்கிவிடுகிற, தொண்டர் - தாஸபூதரான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய, சேவடி - திருவடிகளால் துகையுண்ட, செழுஞ்சேறு - அழகிய சேற்றை, என்சென்னிக்கு அணிவன் - என் சிரஸ்ஸிலே தரிப்பேன் என்கிறார்.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (ஏறடர்த்ததும்) நப்பின்னைப் பிராட்டியோட்டை ஸம்ஶ்லேஷத்துக்கு இடைச்சுவரான ரிஷபங்களையுமடர்த்ததும். (ஏனமாய்நிலங்கீண்டதும்) ஸ்ரீபூமிப்பிராட்டியோட்டை ஸம்ஶ்லேஷத்துக்குஇடைச்சுவரான விரோதியாய் அவர்களுக்கு ப்ரகாரமான பூமியை ப்ரளயங்கொள்ள உதவிற்றிலனென்னும் அவத்யம்வாராதபடி மஹாவராஹமாய் அண்டபித்தியிலேபுக்குஒட்டினபூமியைஒட்டுவிடுவித்தது. (முன்னிராமனாய்மாறடர்த்ததும்) பிராட்டியைப் பிரித்த பையலை எதிரியாக்கிக் கொன்றதும். (மண்ணளந்ததும்) பிராட்டியோட்டைஸம்ஶ்லேஷ விரோதியைப் போக்கினாப்போலே இந்த்ரனோடு விரோதித்த மஹாபலிகைக்கொண்ட பூமியைமீட்டு எல்லைநடந்து கொடுத்ததும். (சொல்லிப்பாடி) இவ்வபதாநங்களைச்சொல்லி ப்ரீதி ப்ரகர்ஷத்தாலே பாடி. (வண்பொன்னிப்பேராறுபோல்வருங்கண்ணநீர்கொண்டு) காவேரி, பெருவெள்ளமாய் மலைப்பண்டங்கொண்டுவருமாப்போலே அமைக்கநில்லாதே கடல்குடமாக வெள்ளமிடுகிற கண்ணீரைக் கொண்டு. (அரங்கன்கோயில் திருமுற்றம் சேறுசெய்தொண்டர்) அங்குப்பாங்காநத் திருவலகு திருப்பணிசெய்து வைத்தால் இவர்கள்அத்தைக் கண்ணநீராலேசெறுக்குவர்களாய்த்து. (சேவடிச்செழுஞ்சேறென் சென்னிக்கணிவனே) அமங்கலமான புழுதியாலே அலங்கரித் துள்ளதோஷந்தீர மங்களார்த்தமான ஸ்ரீவைஷ்ணவர்களின் திருவடிகளில் அழகியசேற்றை யணிவன். ... (௩)

தோய்த்ததண்டயிர்வெண்ணெய்பாலுடனுண்டலுமுடன்றாய்ச்சிக
டார்த்ததோளுடையெம்பிரானென்னரங்கனுக்கடியார்களாய் [ண்
நாத்தழும்பெழநாரணாவென்றழைத்துமெய்தழும்பத்தொழு [மே
தேத்தியின்புறுந்தொண்டர்சேவடியேத்திவாழ்த்துமென்னெஞ்ச

ப-ரை.—தோய்த்த - தடாக்களில் தோய்க்கப்பட்டிருப்பதாய், தண் - குளிர்ந்த, தயிர் - தயிரையும், வெண்ணெய் - உறியில் சேமித்துவைத்த வெண்ணெயையும், பால் - குடங்களில் நிறைத்துவைத்த பாலையும், உடன் - ஒரே காலத்

திலே, உண்டலும் - அமுது செய்தவாறே, ஆய்ச்சி - தாயாரான யசோதைப் பிராட்டி, கண்டு-பார்த்து, உடன்று - கோபித்து, ஆர்த்த - பிடித்துக்கட்டின, தோள்உடை - தோளையுடையனாய், எம்பிரான் - என்னை அநந்யார்ஹனாக்கின வனாய். என் அரங்கனுக்கு - எனக்கு சேஷியான அழகிய மணவாளருக்கு, அடியார்களாய்-சேஷபூதராய், நாத்தழும்பஎழ-நாவானது தழும்பேறும்படி, நாரணா என்று அழைத்து - அவன் திருநாமத்தை அடைவுகெடச் சொல்லி, மெய்தழும்ப - மெய்தழும்பேறும்படி, தொழுது - ப்ரணாமம்பண்ணி, ஏத்தி- ஸ்தோத்ரம்பண்ணி, இனபுஉறும் - ஆநந்தயுக்தராயிருக்கிற, தொண்டர்-ஸ்ரீவை ஷ்ணவர்களுடைய, சேவடி - ஸ்ரீபாதங்களை, என்மனம் - என்மநஸ்ஸானது, ஏத்தி - ஸ்தோத்ரம்பண்ணி, வாழ்த்தும்-மங்களாசாஸநம்பண்ணும் என்கிறார்.

வ்யா.—நாலாம்பாட்டு. (தோய்த்த தண்டயிர் வெண்ணெய் பால்) கடைந்து பிரித்தவெண்ணெய், அதுக்குறுப்பாகத்தோய்த்த தயிர், அதுக்கடியானபால். (உடனுண்டலும்) இவையடங்கலும் நிஃஸேஷமாக ஒருக்காலே யமுது செய்தவாறே. (உடன்று) உடை க்கொணுவிட்டவாறே கோபித்தாள். [தீராவெகுளியளாய்] ஸ்நே ஹத்துக்கு அவதியுண்டாகிலிறே கோபத்துக்கு அவதியுண்டாவ து. (ஆய்ச்சிகண்டு) வாயதுகையது வாகக்கொண்டு அடியோடே கண்டு பிடித்தாளாய்த்து. (ஆர்த்ததோளுடை யெம்பிரான்) கண் டவாறே பிடித்துக்கொண்டு கட்டினாள். (எம்பிரான்) ஆஸ்ரிதஸ்பர் ஶமுள்ளத்ரவ்யத்தா லல்லது செல்லாமைகாட்டி என்னையநந்யார் ஹனாக்கினவன். (என்னரங்கனுக்கடியார்களாய்) அவதாரகாலத்தி ல் இழந்தாரிழவுதீரவந்து ஸுலபரான பெரிய பெருமாளுடைய செயலாலே யெழுதிக்கொடுத் தவர்களாய்த்து. (நாத்தழும்பெழ) நாவானது தழும்பேறும்படி. (நாரணாவென் றழைத்து) "அம்மே" என்பாரைப்போலே திருநாமத்தை அடைவுகெடச்சொல்லி. (மெ ய்தழும்பத்தொழுது) ப்ரணாமம் பண்ணினபடி தோற்ற உடம்பெ ல்லாம்தழும்பாகச்சிறியாத்தானைப்போலே யேத்தி. இப்படிப்பட்ட செயல்களைச் சொல்லியேத்தி. (இன்புறுந்தொண்டர் சேவடி) மந ஸ்ஸிலே வைத்தேத்துகையாலே விஷயத்தைக் கிட்டினால் பிறக்கு ம் நிரதிஶயாநந்த யுக்தராயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸ்ரீபாத ங்களை. (தொண்டர் சேவடியேத்தி வாழ்த்து மென் னெஞ்சமே) அவர்கள்தாங்கள் அகப்பட்ட நவநீதசௌர்யத்தில் போகாது என் னெஞ்சு; அதிலே யகப்பட்டவர்கள்தங்களை ஏத்திவாழ்த்து மித் தனை. (ஏத்திவாழ்த்தும்) இச்செயலுக்கு இவர்கள் நிலவராவதே! என்று ஸ்தோத்ரத்தைப்பண்ணி, இது நித்யமாக வேணுமென்று மங்களாஶாஸநம் பண்ணும் என்னெஞ்சு. ... ... (ச)

பொய்சிலைக்குரலேற்றெருத்தமிறுத்துப்போராவீர்த்தகோன்
செய்சிலைச்சுடர்சூழொளித்திண்ணமாமதிட்டென்னரங்கனும்
மெய்சிலைக்கருமேகமொன்றுதஞ்னெஞ்சுணின்றுதிகழப்போய்
மெய்சிலிர்ப்பவர்தம்மையேநினைந்தென்மநம்மெய்சிலிர்க்குமே. (ரு)

ப-ரை.—பொய் - க்ர்த்ரிமமாய், சிலை - கோபத்தையுமுடைத்தான, குரல்-த்வநியையுடைய, ஏறு - ரிஷபங்களினுடைய, எருத்தம் - கழுத்துக்களை, இறுத்து - முறித்தும், போர்-யுத்தோந்முகமான, அரவு-காளியனென்கிற ஸர்ப்பத்தை, ஈர்தத - நிரஸிக்கையாலே, ஸ்ரீதிருவாய்ப்பாடியிலுள்ளார்க்கு, கோன்-நாதனானவனாய், சிலை - கல்லினாலே, செய் - செய்யப்பட்டு, சுடர் ஒளி- மிக்க ஜ்யோதிஸ்ஸையுடைத்தாய், திண்-திண்மையையும், மா-உயர்த்தியையுமுடைய, மதிள் - மதிள்களாலே, சூழ் - சூழப்பட்டு, தென் - ஸ்பர்ஹணீயமான, அரங்கன் ஆம் - ஸ்ரீரங்கத்தில் நித்யவாஸம் பண்ணும் அழகியமணவாளராகிய; மெய் - சரீரத்தில், சிலை - இந்த்ரதநுஸ்ஸோடுகூடின, கரு - கறுத்த, மேகம் ஒன்று - ஒருமேகமானது, என்நெஞ்சுள் - என்மநஸ்ஸில், நின்று - நிலைபெற்று, போய்த்திகழ - மிகவும் விளங்கும்படி, மெய்சிலிர்ப்பவர்தம்மையேநினைந்து - புளகிதகாத்ர ராயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களையே நினைத்து, என்மநம்-என்மநஸ்ஸானது, மெய்-மெய்யே, சிலிர்க்கும் - புளகியாநின்றது என்கிறார்.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (பொய்சிலைக் குரலேற்றெருத்தமிறுத்து) பொய் – க்ர்த்ரிமம். சிலை - கோபம். அஸுரா வேஶத்தாலே க்ர்த்ரிமமாய் கோபத்தையு முடைத்தாயிருந்துள்ள ஏறுமுறுயப் பொருது. நப்பின்னைப் பிராட்டியோட்டை ஸம்ஶ்லேஷத்துக்கு விரோதியானவையுமாய்ப் பொருகிறவையுமாய்ச் சிலைபோலேகோரமான த்வநியையுடைத்தா யிருந்துள்ள ரிஷபங்களைக் கழுத்தை முறித்து. (போரரவுஈர்த்தகோன்) திருவாய்ப் பாடியில் பசுக்களும் இடையரும் தண்ணீர் குடிக்கவொண்ணுதபடி ஜலத்தை தூஷித்துக்கிடந்த காளியன், யுத்தோந்முகனாய்ப் புறப்படும்படி கலக்கிப் பொய்கையில்நின்றும்போகவிட்டு, அத்தாலேதிருவாய்ப்பாடியிலுள்ளார்க்குநாதனானவனை. (செய்சிலைச்சுடர்சூழொளித்திண்ணமாமதிள் தென்னரங்கனும்) கல்லாலே செய்யப்பட்டுப்பிறரால் அபிபவிக்கவொண்ணுதபடியான மதிப்பை யுடைத்தான திண்மையையும் ஓக்கத்தாலும்விஞ்சின திருமதிள்கள் பலவுஞ் சூழ்ந்திருக்கிறகோயிலிலே கண்வளர்ந்தருளுகிற. (மெய்சிலைக் கருமேகம்) உடம்பிலே வில்லையுடைய மேகமென்னுதல்; மெய்யேவில்லோடே கூடின மேகந்தானென்னுதல். (ஒன்றுதன்னெஞ்சில் நின்றுதிகழப்போய்) "ஶ்ரீமாந் ஜநஸ்தாநம்" "ஶோபயந் தண்டகாரண்யம்" என்னுமாப்போலே மாணிக்கக்குப்பியில் உள்ளுநின்றநிலை புறம்பேதெரியுமாப்போலே பெரியபெருமாளைத் தங்கள் நெஞ்சிலே எழுந்தருளுவித்து வைக்கையாலே நிழலிடாநிற்குமிறே. (மெய்சிலிர்ப்பவர்) உள்ளேயெழுந்தருளி யிருக்கிறபடியை யநுஸந்தித்து புளகித காத்ராராயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள்தம்மை நினைத்து. (என்மநம் மெய்சிலிர்க்குமே) பெரிய பெருமாளை யநுபவித்து அவர்களுடம்புபடும்பாட்டை, அவர்களை யநுபவித்து என்னெஞ்சு படாநின்றது. ஸ்பர்ஶத்ரவ்யம் பட்டதெல்லாம் படாநின்றது அமூர்த்த த்ரவ்யம். (ரு)

ச

ஆதியந்தமநந்தமற்புதமானவானவர்தம்பிரான்
பாதமாமலர்சூடும்பத்தியிலாதபாவிகளுய்ந்திடத்
தீதில்நன்னெறிகாட்டியெங்குந்திரிந்தரங்கனெம்மானுக்கே [மே.
காதல்செய்தொண்டர்க்கெப்பிறப்பிலுங் காதல்செய்யுமென்னெஞ்ச

ப-ரை.—ஆதி- ஜகத்காரணபூதனாய், அந்தம்-ப்ரளயகாலத்திலும் ஓரசை வின்றியிருக்குமவனாய், அநந்தம் - காரணகாரியங்க ளிரண்டிலும் வ்யாபித்து நிற்குமவனாய், அற்புதம் - ஆச்சர்யபூதனாய், ஆன - எப்போதுமொக்க உளரா யிருக்கும், வானவர்தம்பிரான் - நித்யஸூரிகளுக்கு நாதனான ஸர்வேச்வரனு டைய, பாதம் - திருவடிகளிலே, மா - ச்லாக்யமான, மலர் - தாமரைமலர் களை, சூடும் - ஸமர்ப்பிக்கிற, பத்தி இலாத - பக்தியில்லாத, பாவிகள்-பாபிக ளானவர்கள், உய்ந்திட - உஜ்ஜீவிக்கும்படி, எங்கும் - தேசமெங்கும் புக்கு, திரிந்து - ஸஞ்சரித்து, தீதுஇல் - குற்றமில்லாத, நல்நெறி - நல்வழியேபோம் படி, காட்டி - தாங்க ளநுஷ்டித்துக் காட்டி, எம்மான் - என்னை அநந்யார்ஹ னாக்கின, அரங்கனுக்கு பெரியபெருமாள் திருவடிகளிலே, காதல்செய் - பக்தி யையுடையராயிருக்கிற,தொண்டர்க்கு-ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு,என்நெஞ்சம்- என் மநஸ்ஸானது, எப்பிறப்பிலும்-அநேக ஜந்மங்களிலே, அவர்களுக்கு அடி மைசெய்யவேணும் என்று, காதல்செய்யும் - ஆசைப்படாநின்றது என்கிறார்.

வ்யா.—ஆறாம்பாட்டு. (ஆதி) ஜகத்காரணபூதன். (அந்தம்) ப்ரளயகாலத்திலும் ஸதவஸ்தனாய் நிற்குமவன். (அநந்தம்) காரணா வஸ்தையிலும் கார்யாவஸ்தையிலு மொக்க வ்யாபித்து நிற்குமவன். (அற்புதம்) காரணாவஸ்தையோடு ஸதாவஸ்தனாய் நிற்குமத் தோடு வாசியற நிற்கும்நிலைகள் வேறோரிடத்தில் காணவொண்ணா தென்னும்படியிருக்கும் ஆஸ்சர்யபூதன்.(ஆனவானவர்தம்பிரான்) ஆனபோதும் அமர்ந்தபோதும்எப்போதுமொக்க உளராயிருக்கும் நித்யஸூரிகளுக்குநாதன். உபயவிபூதிநாதனென்றபடி.(பாதமாம லர்சூடும்பத்தியிலாத) அவன் † திருவடிகளாகிற செவ்வித்தாமரை யைச்சூடும் பக்தியையுடையரா யிருக்கையாய்த்து கர்த்தவ்யம்; அதில்லாத. (பாவிகளுய்ந்திட) பக்தியில்லாத மஹாபாபத்தைப் பண்ணி, "ஶஸந்நேவ" "அஸந்நேவ" என்னும்படி யிருக்கிற தேஶ மெங்கும் புக்கு ஸஞ்சரித்து அவர்களை பக்தியுண்டாக்கி யுஜ்ஜீவிப் பிக்கைக்காக. (தீதில்நன்னெறிகாட்டி) தீமையோடே கூடின நெறி யன்றிக்கே, சேதநர்நல்வழிபோம்படி தாங்களாசரித்துக் காட்டி. (எங்குந்திரிந்து) புகக்கடவதல்லாத தேஶமெங்கும் புக்கு ஸஞ்ச ரித்து. (அரங்கனெம்மானுக்கே காதல்செய்தொண்டர்க்கு) என்னை யநந்யார்ஹமாக்கின பெரியபெருமாள் திருவடிகளிலேபக்தியுண்டா யிருக்கும ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு. (எப்பிறப்பிலுங்காதல்செய்யுமெ ன்னெஞ்சமே) அநேகஜந்மங்கள் பிறந்து அவர்களுக்கடிமைசெய் யவேணுமென்று ஆசைப்படாநின்றதென்னெஞ்சு. ... (௬)

† "திருவடிகளிலே" என்று சில ஸ்ரீகோசங்கள். "திருவடிகளாகிற"என் றபாடத்துக்கு "பாதமாம்மலர்"என்று பாடம்.

காரினம்புரைமேனிநற்கதிர்முத்தவெண்ணகைச்செய்யவாய்
ஆரமார்பனரங்கனென்னுமரும்பெருஞ்சுடரொன்றினைச்
சேருநெஞ்சினராகிச்சேர்ந்துகசிந்திழிந்தகண்ணீர்களால்
வாரநிற்பவர்தாளிணைக்கோர்வாரமாகுமென்னெஞ்சமே. (எ)

ப-ரை.—கார் இனம்புரை-மேகஸமூஹத்தையொத்த, மேனி-திருமேனியை யும், நல்-நல்ல, கதிர்-ஒளியையுமுடைய, முத்தம்-முத்துக்களையொத்த, வெள்-வெளுத்த, நகை-திருமுத்துக்களையும், செய்ய-சிவந்த, வாய்-திருப்பவளத்தை யும், ஆரம்-முக்தாஹாரம்பூண்ட, மார்வன் - திருமார்பையுடையராய், அரங்க னென்னும் - பெரியபெருமாளென்னும் திருநாமத்தையுடையராய், அரும்பெ ருஞ்சுடர்-நிரவதிகதேஜோரூபராய், ஒன்றினை - அத்விதீயரானவரை, சேரும்-கிட்டவேணுமென்கிற, நெஞ்சினராகி-மநஸ்ஸையுடையராய்க்கொண்டு, சேர்ந்து-அவனைக்கிட்டி, கசிந்து இழிந்த—, கண்ணநீர்கள்வாரநிற்பவர் - கண்ணீர் ப்ரவஹிக்கும்படி நிற்பவர்களுடைய, தாளிணைக்கு - திருவடிகளுக்கு, என்னெ ஞ்சம்-என்மநஸ்ஸானது, ஓர்வாரமாகும்-ஒப்பற்ற பக்தியடையாநின்றது.

வ்யா.—ஏழாம்பாட்டு. (காரினம்புரைமேனி) "தொக்கமேகப் பல்குழாங்கள்" என்றும், "கார்த்திரளனையமேனி" என்கிறபடியே அழகிய திருமேனியையு முடையராய். (நல்கதிர்முத்தவெண்ணகைச்செய்யவாய்) கண்டாரைப் போகாமல் துவக்கவல்ல வொளியையுடைய முத்துநிரைபோலே யிருக்கும் தந்தபங்தியையும், இதுக்குப் பரபாகமான திருவதரத்தில் பழுப்பையுமுடையராய். (ஆரமார்பன்) "பெரிய வரைமார்வில் பேராரம்பூண்டு" என்று ஐஶ்வர்ய ப்ரகாஶகமாம்படி இட்டுப் பூணவேண்டும்படியுள்ள ஹாரத்தையும் திருமார்பிலேயுடையரா யிருக்கிற. (அரங்கனென்னும், அரும் பெருஞ்சுடரொன்றினை) பெரியபெருமாளென்று உபய விபூதியிலும் ப்ரஸித்தராய் நிரவதிகதேஜோரூபராய் அத்விதீயரானவரை. (சேரும்நெஞ்சினராகி) அவர்வந்து கிட்டும்போது விலக்காமை யடியாகப்பிறந்த பக்தியையுடையராய். (சேர்ந்துகசிந்திழிந்த கண்ணீர்களால் வாரநிற்பவர் தாளிணைக்கு) அவனைக்கிட்டி நிரதிஶய பக்தியுக்தராய்க் கண்ணும் கண்ணீருமாய் நிற்குமவர்களுக்கு பக்திபாரவஶ்யத்தாலே யிறே யென்று அங்குத்தைக்கும் இவர்களுக்கு மாய் நில்லாதே இவர்களுடைய திருவடிகளுக்கு. (ஓர் வாரமாகுமென்னெஞ்சமே) அநந்யப்ரயோஜநமாய் நில்லாநின்றதென்னெஞ்சு. ... ... ... ... ... ... (எ)

மாலையுற்றகடற்கிடந்தவன்வண்டுகிண்டுநறுந்துழாய்
மாலையுற்றவரைப்பெருந்திருமார்பனைமலர்க்கண்ணனை
மாலையுற்றெழுந்தாடிப்பாடித்திரிந்தரங்கனெம்மானுக்கே
மாலையுற்றிடுந்தொண்டர்வாழ்வுக்குமாலையுற்றதென்னெஞ்சமே.

ப-ரை.—†மாலேஉற்ற - அலேயெறிகிற, கடல்-திருப்பாற்கடலிலே, கிடந்தவன்-கண்வளர்ந்தருளுமவனும்,வண்டு-வண்டுகள்,கிண்டு-குடையாநின்றுள்ள, நறு-நல்ல, துழாய்மாலேயுற்ற-திருத்துழாய்மாலேசேர்ந்து, வரை-மலேபோலே, பெரு-விசாலமான, திருமார்வனே-திருமார்பையுடையராய், மலர்-செந்தாமரை மலர்போன்ற, கண்ணனே - திருக்கண்களேயுடைய பெரியபெருமாள் விஷயத்திலே, மாலேயுற்று - பக்தியையுடையராய், எழுந்து ஆடி - இருந்தவிடத்தில் இருக்கவொட்டாமையாலே எழுந்து ஆடி, பாடி - ப்ரீதிக்குப் போக்குவிட்டுப் பாடிக்கொண்டு, திரிந்து - ஸஞ்சரித்து; அரங்கன் - கோயிலிலே நித்யவாஸம் பண்ணுகிற, எம்மானுக்கு-என்னுடையஸ்வாமிக்கு, மாலேயுற்றிடும் - பித்தேறித்திரியும், தொண்டர் - தாஸபூதரான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய, வாழ்வுக்கு - வைஷ்ணவலக்ஷ்மிக்கு, என்னெஞ்சம்-என்மநஸ்ஸானது, மாலுற்றது-பித்தேறு நின்றதென்கிறார். † மலே-என்பது மாலேஎன நீட்டிக்கிடக்கிறது.

வ்யா.—எட்டாம்பாட்டு. (மாலேயுற்றகடல்கிடந்தவன்) ஸ்வஸ்பர்ஶத்தாலே அலேயெறிகிற திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிறவன். (வண்டுகிண்டு நறுந்துழாய் மாலேயுற்றவரைப் பெருந்திருமார்பனே) வண்டுகள் நெருங்கி யிருக்கிற செவ்வித்திருத்துழாய் மாலேசேர்ந்து, வரைபோலே யிருக்கிற பெருந்திருமார்வை யுடையவரை. "மைபோல் நெடுவரைவாய்த்தாழு மருவிபோல் தார்கிடப்ப" என்னக்கடவதிறே. (மலர்க்கண்ணனே) செவ்வித்தாமரைப் பூப்போலே மலர்ந்த திருக்கண்களேயுடையவரை. (மாலேயுற்றெழுந்தாடிப் பாடித்திரிந்து) பக்தியையுடையராய் இருந்தவிடத்திலிருக்கவொட்டாமையாலே எழுந்தாடுவது பாடுவதாய் ப்ரீதிப்போரிக்கஇருக்கமாட்டாதே ஸஞ்சரித்து. (அரங்கனெம்மானுக்கே மாலேயுற்றிடுந் தொண்டர்வாழ்வுக்கு) கோயிலிலே ஸ்ுலபரானபடியைக்காட்டி என்னே யெழுதிக்கொண்ட பெரியபெருமாளுக்கே பக்திகார்யமான பித்தேறித்திரியும் ஸ்ரீவைஷ்ணவர்களுடைய வைஷ்ணவலக்ஷ்மிக்கு. (மாலேயுற்றதென்னெஞ்சமே) பித்தேறுநின்றேனென்கிறார். (அ)

அ.—ஒன்பதாம்பாட்டு. பித்தேறித்திரிவார்க்கு ஒருநீர் பித்தேறுவதென்ன; ப்ராப்தவிஷயத்தில் பித்தேறுமவர்கள் பித்தரன்றென்கிறார்.

மொய்த்துக்கண்பனிசோரமெய்கள்சிலிர்ப்பவேங்கியிளேத்துநின்
றெய்த்துக்கும்பிடுநட்டமிட்டெழுந்தாடிப்பாடியிறைஞ்சியென்
அத்தனச்சனரங்கனுக்கடியார்களாகியவருக்கே
பித்தராமவர்பித்தரல்லர்கள்மற்றையார்முற்றும்பித்தரே. (கூ)

ப-ரை.—கண்-இரண்டுகண்களினின்றும்,ஆநந்தக்கண்ணீரானது,பனி-மழைத்தாரைபோலே,மொய்த்துச்சோர-இடைவிடாதேசொரிய,மெய்கள்-சரீரங்கள்,சிலிர்ப்ப-மயிர்க்கூச்செறியவும், ஏங்கி-அவனேநினைத்து ஏங்கி, இளேத்துநின்று-இளேத்துச்சிதிலராய்,எய்த்து - அசைவற்றுநின்று, கும்பிடுநட்டமிட்டாடி - ஸஸம்ப்ரமந்ர்த்தம்பண்ணி, பாடி-ப்ரீதிக்குப்போக்குவிட்டுப்பாடி, இறைஞ்சி

த்ர்க்கப்ரணாமம்பண்ணி,என்-எனக்கு, அத்தன்-தந்தையாய், அச்சன்-நாதரான, அரங்கனுக்கு-பெரியபெருமாளுக்கு, அடியார்கள் - தாஸபூதரான ஸ்ரீவைஷ்ண வர்களுக்கு, ஆகி - அடியார்களாகி, அவருக்கே-அவர்கள் விஷயத்திலே, பித்த ராமவர் - பித்தேறித்திரியுமவர்கள், பித்தரல்லர்கள்—; மற்றையார்முற்றும் - அவனுடைய தாஸபூதரிடத்தில்பத்திபண்ணுதாரெல்லாம், பித்தர்-பித்தராவர்க ளென்கிறார்.

வ்யா.—(மொய்த்துக்கண்பனிசோர)இரண்டுகண்ணாலே வர்ஷ தாரைபோலே சொரிய. (மெய்கள் சிலிர்ப்ப) புளகிதகாத்ரராய். (ஏங்கி யிளைத்துநின்று எய்த்துக்கும்பிடு நட்டமிட்டெழுந்தாடிப் பாடி இறைஞ்சி) விஷயத்தை நினைத்தேங்கி யிளைத்து ஶக்திலராய், அவ்வளவன்றியிலே ஸ்தப்தராய் நின்று. அந்நிலையும் நில்லாதே (கும்பிடு நட்டமிட்டு)ஸஸம்ப்ரமந்ர்த்தம்பண்ணி.(இறைஞ்சி) தீர்க் கப்ரணாமத்தைப் பண்ணி. (என்னத்தனச்சன்) எனக்கு ஜநகனு மாய் ஸ்வாமியுமானவன். (அரங்கனுக்கடியார்களாகி) பெரியபெரு மாளுக் கநந்யப்ரயோஜநரா யிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கடியா ராகி. (அவருக்கே பித்தராமவர் பித்தரல்லர்கள்) அவர்க்கு பக்தி மான்களாய் பக்திகார்யமான பித்தேறித்திரிகிறவர்கள். பித்தரல் லர்கள். (மற்றையார் முற்றும்பித்தரே)இந்த பக்திகார்யமான பித்த ரல்லாதவர்களுடைய பித்தரே. இக்கலக்கமில்லாதே தெளிந்திருக் கும் ஸநகாதிகளேயாகிலும் அவர்கள் பித்தர். ... ... (கூ)

அல்லிமாமலர்மங்கைநாதனரங்கன்மெய்யடியார்கள்தம்
எல்லையில்லடிமைத்திறத்தினிலென்றுமேவுமநத்தனும்
கொல்லிகாவலன்கூடல்நாயகன்கோழிக்கோன்குலசேகரன்
சொல்லினின்றமிழ்மாலைவல்லவர்தொண்டர்தொண்டர்களாவரே.()

ப-ரை.—அல்லி-அகவிதழையுடைத்தாய், மா-ச்லாக்யமான, மலர்மங்கை-செந்தாமரைமலரைப் பிறப்பகமாகவுடைய பெரியபிராட்டியார்க்கு, நாதன் - வல்லபரான, அரங்கன்-பெரியபெருமாளுடைய,மெய்-மெய்யான,அடியார்கள் தம்-தாஸபூதரான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய, எல்லையில்-அளவில்லாத, அடிமை த்திறத்தினில்-தாஸ்யத்திலே,என்றும்-என்றும் ஒருபடிப்பட,மேவும்-பொருந்தி ன,மநத்தனும்-திருவுள்ளத்தையுடையராய், கொல்லி-கொல்லிநகருக்கு, காவல ன் தலைவராய், கூடல்-மதுரைக்கு, நாயகன்-நாயகராய், கோழி-உறையூர்க்கு, கோன்-ராஜாவான, குலசேகரன்-குலசேகரப்பெருமாள் அருளிச்செய்ததாய், இன்-இனிதான, சொல்-சப்தங்களையுடைய, தமிழ்மாலைவல்லவர் - தமிழ்த்தொ டையை வல்லவர்கள். தொண்டர் தொண்டர்களாவர் - அவனடியார்க்கு அடி யாராவ ரென்கிறார்.

வ்யா.—பத்தாம்பாட்டு. (அல்லிமாமலர் மங்கைநாதன் அரங் கன்) ஸ்ரீயப்பதியான பெரியபெருமாளுடைய. (மெய்யடியார்கள் தம்) அநந்யப்ரயோஜநரா யிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுடைய. (எல்லையி லடிமைத்திறத்தினி லென்று மேவுமநத்தனும்)ஆத்மதாஸ் யத்திலேயென்றுமொக்கப்பொருந்தினதிருவுள்ளத்தையுடையராம்.

(கொல்லிகாவலன் கூடல்நாயகன் கோழிக்கோன்) கொல்லிக்கும் மதுரைக்கும் உறையூர்க்கும் நாயகரான பெருமாள். பெரிய உடையாருடைய இழவால்வந்த வெறுப்பாலே"வநவாஸோமஹோதய:" "வநவாஸோமஹோதய:" என்றுபோய், "ராஜ்யாத்ப்ரம்ஶோவநேவாஸ:" "ராஜ்யாத்ப்ரம்ஶோவநேவாஸ:"என்றுவந்ததுக்குப்போந்து அது ப்ரியமாயிருந்தவர் இவ்விழவாலே அடியில் போந்ததுவும் எல்லாந் தமக்கு வெறுப்புக்குடலாளுப்போலே, "ஊனேறுசெல்வத்துடற்பிறவியான் வேண்டேன்" என்றும், "இவ்வரசும்யான்வேண்டேன்" என்றும் சொல்லுகிறவிவர்க்குத் ததீயஶேஷத்வத்தைத் தந்த ஜந்மமென்று ராஜஜந்மந் தன்னையுங் கொண்டாடுகிறாரிறே. (சொல்லி னின்தமிழ்மாலை வல்லவர்)இனிதான ஶப்தங்களையுடைய தமிழ்த்தொடைவல்லவர்கள். (தொண்டர் தொண்டர்களாவரே) இவராசைப்பட்டுப் போந்த பாகவதஶேஷத்வ பர்யந்தமாகிற புருஷார்த்தத்தை லபிப்பர்கள். ... ... ... ... ...

குலசேகராழ்வார் திருவடிகளேஶரணம்.

———:0:———

அடிவரவு-தேட்டு தோடு ஏறு தோய்த்த பொய் ஆதி காரினம் மாலை மொய்த்து அல்லி மெய்.

———:0:———

## மூன்றாந்திருமொழி - மெய்யில்வாழ்க்கை - ப்ரவேசம்.

அ.—"பேராளன் பேரோதும் பெரியோரை யொருகாலும் பிரிகிலேன்" என்று - பகவத்ப்ராவண்யம் ததீயஶேஷத்வ பர்யந்தமாய், அவர்களல்லது செல்லாமை பிறக்குமளவுமுண்டு, அது சொல்லிற்று - கீழில் திருமொழியில்; "எண்ணுதமானிடத்தையெண்ணுதபோதெல்லாமினியவாறே" "மானிடவரல்லரென் றென் மநத்தே வைத்தேனே" என்றும், "பித்தரென்றேபிறர்கூற" என்றும் பிறக்கு மவஸ்தையுண்டு; - பகவத்ப்ராவண்யத்தாலே முன்பிலதுக்கு ஸங்கல்பமேயாய்த்துவேண்டுவது ; அடிமை அவர்கள் கொள்ளக்கொள்ளவிறேசெய்வது.ப்ராதிகூல்யத்தில் வர்ஜித்தேயிற்க வேணும் பகவத்குணங்களோபாதி விபூதியும் ததீயத்வாகாரத்தாலே அநுபாவ்யமென்று சொன்ன ஶாஸ்த்ரந்தானே யிறே இத்தை த்யாஜ்யமென்றதும். ஜ்ஞாநகார்யமாயிறே ததீயருத்தேஶ்யமாகிறதும்; தமோகுண ப்ரசுரரோடு ஸஹவாஸம் பொருந்திற்றில் அஜ்ஞாநகார்யமிறே. "மத்தஸ்ஸர்வமஹம்" "மத்தஸ்ஸர்வமஹம்" என்று - ஸாமாந்ய புத்திபண்ணின ஸ்ரீப்ரஹ்லாதாழ்வான் பூர்வாவஸ்தையில், "ஸ்ஸுஹ்ருத:" "மத்பிது:" என்று - அவனை ரக்ஷிக்கப்பார்த்தவன் ப்ராதிகூல்யத்திலேவிஞ்சினவாறே அவனை விட்டுக்காட்டிக்

கொடுத்தானிறே. ஸ்ரீவிபீஷணாழ்வான் ஆந்தனையும் ஹிதம்சொல்லிப் பார்த்துத் தன் ஹிதத்துக்கு மீளாத வவஸ்தையானவாறே, நெருப்புப்பட்டவிடத்தில் விலக்கலொண்ணாதபோது தன்னைக் கொண்டு தான் தப்புவாரைப்போலே, ப்ராதிகூல்யம் அசலிட்டுத் தள்ளவும் வருமென்று தன்னைக்கொண்டு தான் தப்பினானிறே. ப்ராதிகூல்யமாகிறது - தேஹாத்மாபிமாநிகளாகையும், விஷயப்ரவணராயிருக்கையும், தேஹாத்வ்யதிரிக்தம் வேறொரு வஸ்துவுண்டென்றறியாதிருக்கையுமிறே. இப்படி இருப்பாரோடு எனக்குப் பொருந்தாதென்கிறார் - இத்திருமொழியில். ... ... ...

மெய்யில்வாழ்க்கையைமெய்யெனக்கொள்ளுமிவ்
வையந்தன்னொடுங்கூடுவதில்லையான்;
ஐயனே! அரங்கா! என்றழைக்கின்றேன்;
மையல்கொண்டொழிந்தேனென்றன்மாலுக்கே. (க)

ப-ரை.—மெய்யில்-பொயயான, வாழ்க்கையை-இகலோகஸுகத்தை, மெய் எனக்கொள்ளும்-நித்யமென்று நினைக்கிற, இவ்வையந் தன்னொடும்-இந்தலோகத்தாரோடே, யான் - தேஹாத்மாபிமாநமற்றயான், கூடுவதில்லை-சேருவதில்லை; ஐயனேஎன்று-ஸர்வஸ்வாமியானவனே என்றும், அரங்காஎன்று-கோயிலிலேவந்து ஸர்வஸுலபனானவனே என்றும், அழைக்கின்றேன் - கூப்பிடாநின்றேன், என்றன்மாலுக்கு-என்விஷயத்தில் வ்யாமுக்தனான அழகியமணவாளன் விஷயத்திலே, மையல்கொண்டொழிந்தேன்-பித்தேறாநின்றேன் என்கிறார்.

வ்யா.—முதற்பாட்டு. (மெய்யில்வாழ்க்கையை மெய்யெனக் கொள்ளும்) மெய்யென்றும் பொய்யென்மது நில்லாமையும், நிலைநிற்குமத்தையும்சொல்லுகிறது. நிலைநில்லாததிலே, நித்யமான ஆத்ம வஸ்துவைப்பண்ணும் ப்ரதிபத்தியைப் பண்ணுமென்னுதல்; மெய்யிலேயுண்டான வாழ்க்கையென்னுதல். அதாகிறது-ப்ரக்ர்தியைப்பற்றிவரும் ப்ராக்ர்தபோகங்களிறே. (இவ்வையந்தன்னொடுங்கூடுவதில்லையான்)தேஹாத்மாபிமாநிகளாயிருப்பாரோடுஎனக்கொருசேர்த்தியில்லை. (ஐயனித்யாதி)தேஹாத்வ்யதிரிக்தம் வேறொருவருண்டென் றறிந்தவனென்கிறார். (ஐயனே) நிருபாதிகபந்துவே. (அரங்கா) அநுஷ்டாநபர்யந்தமாக்கின முதலித்தாப்போலேகோயிலிலே வந்து ஸுலபனானவனே. (என்றழைக்கின்றேன்) காரியப்பாடறக்கூப்பிடாநின்றேன். (மையல்கொண்டொழிந்தேன் என்றன் மாலுக்கே) அவன் எனக்குப் பித்தேறினபடியைக்கண்டு நானும் அவனுக்குப்பித்தனானேன். ... ... ... க.

நூலினேரிடையார்திறத்தேநிற்கும்
ஞாலந்தன்னொடுங்கூடுவதில்லையான்;
ஆலியாவழையாவரங்காவென்று
மாலெழுந்தொழிந்தேனென்றன்மாலுக்கே. (உ)

ப-ரை.—நூலின்நேர்-நூல்போல்நுண்ணிதான, இடையார்திறத்து-இடையையுடையரான ஸ்த்ரீகளவயவததிலே, நிற்கும் - வைத்தகிந்தைவாங்கமாட்டாதேநிற்கிற, ஞாலந்தன்னோடும் - லோகத்தாரோடே, யான்கூடுவதில்லை—; ஆலியா-பெரியபெருமாள் திருநாமங்களைச்சொல்லி, அழையா-அடைவுகெடக்கூப்பிட்டு, என்றன்மாலுக்கு—, மாலெழுந்து ஒழிந்தேன் - பித்தேறுகின்றேன் என்கிறார்.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (நூலினேரிடையார் திறத்தேநிற்கும்) நூல்போலே நுண்ணிய இடையையுடையராயிருக்கும் ஸ்த்ரீகள்திறத்திலேநிற்கும். ஒரு அவயவத்தை யநுபவிக்கப்புக்கால் மற்ற அவயவத்தில் போகமாட்டாதேநிற்கும். (ஞாலந்தன்னோடுங் கூடுவதில்லையான்) ப்ராப்தவிஷயத்திலிருக்கக்கடவவிருப்பை அப்ராப்தவிஷயத்தேயிருக்கு மவர்களோடு எனக்கொரு ஸம்பந்தமில்லை. (ஆலியாவித்யாதி) இவர்கள் அப்ராப்தவிஷயத்திலே படும்பாடெல்லாம் ப்ராப்த விஷயத்தே படுமவன் நானென்கிறார். (ஆலியாவழையாவரங்காவென்று) ப்ரீதிப்ரகர்ஷத்தாலேயிருக்கமாட்டாதே, ஆலியா-பெரியபெருமாள் திருநாமத்தைச்சொல்லி, அடைவுகெடக்கூப்பிட்டு. (மாலெழுந்தொழிந்தேனென்றன்மாலுக்கே) "ஸீத ஸீத ஸமவ்ரதா:" "தேநத்தேதமநுவ்ரதா:" என்னுமாப்போலே அவன் என்பக்கல் வ்யாமுக்தனானபடிகண்டு நானும்பித்தேறினேன். ... (௨)

மாரனார்வரிவெஞ்சிலைக்காட்செய்யும்
பாரினாரொடுங்கூடுவதில்லையான்;
ஆரமார்பனரங்கனநந்தனல்
நாரணன்நரகாந்தகன்பித்தனே. (௩)

ப-ரை.—மாரனார் - மன்மதனுடைய, வரி-தர்சநீயமாய், வெம் - யாவரையும் தன்வசமாக்கவல்ல, சிலை-வில்லுக்கு, ஆள்செய்யும்-அடிமை பண்ணிப்போருகிற, பாரினாரொடும் - பூலோகத்தாரோடே, யான்கூடுவதில்லை—; ஆரம்-முக்தாஹாரம் சாத்தியருளின, மார்வன்-திருமார்பையுடையரான, அரங்கன்-அழகியமணவாளராய், இங்கேவந்து ஸுலபராயிருக்கச்செய்தேயும், அநந்தன்-இப்படிப்பட்டவரென்று பரிச்சேதிக்கவொண்ணாதவராய், நல்நாரணன் - குற்றங்களைக்குணமாகக்கொள்ளுமவராய், நரகாந்தகன்-ஆச்ரிதர்நரகத்தில்வீழாதபடி காக்குமவரான பெரியபெருமாள் விஷயத்தில், பித்தன் - நான்பித்தனானேன் என்கிறார்.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (மாரனார்வரி வெஞ்சிலைக் காட்செய்யும்) காமனுடைய தர்சநீயமாய்த் தப்பவொண்ணாதபடி கொடிதாயிருக்கிற வில்லுக்குக்குடிமகனாய்த்திரியும் பாரினாரொடுங்கூடுவதில்லையானென்னுதல். * சார்ங்கமென்னும் வில்லாண்டான் றனக்காட்செய்யுமவன்நான். (ஆரமார்வனரங்கன்) ஆகர்ஷகமான வொப்பனையையுடைய பெரியபெருமாள். (அநந்தன்) மநுஷ்யத்வே பரத்வம் போலே இங்கேவந்து ஸுலபராய்க்கிடக்கச்செய்தே, பரிச்சேதிக்க

வொண்ணாதபடியிருக்கிறவர். (நன்னாரணன்) தன்னுடைமையை விடமாட்டாமையாலே அழுக்கை விரும்புமவன். (நரகாந்தகன் பித்தனே) அவன் தன் வாத்ஸல்யத்தாலே மேல்விழாநிற்க நடுவே விரோதியும் போய்க்கொடு நிற்குமிறே. இப்படி யிருக்கிறவனுக்குப் பித்தனே. ... ... ... .. ... ௩.

உண்டியேயுடையேயுகந்தோடும்
மண்டலத்தொடுங்கூடுவதில்லையான்;
அண்டவாணனரங்கன்வன்பேய்முலை
உண்டவாயன்றனுன்மத்தன்காண்மினே. (௪)

ப-ரை.—உண்டி-ஆஹாரத்தையும், உடை - வஸ்த்ரத்தையும், உகந்து-விரும்பி, ஓடும் - கண்டவர்களாகிற் நம்மைநக்கிற, இம்மண்டலத்தொடும் - இந்த லோகத்தாரோடே, யான் கூடுவதில்லை—; அண்டம் - அண்டாந்தர்வர்த்திகளான தேவர்களுக்கு, வாணன் - நிர்வாஹகராய், வல் - கடிநசித்தையான, பேய் - பூதனையுடைய, முலை - விஷத்தோடு கூடிய முலைப்பாலை, உண்ட-தாய் முலைபோலே அமுதுசெய்த, வாயன் - திருப்பவளத்தையுடையரான, அரங்கன்தன் - அழகிய மணவாளனை விஷயத்தில், உன்மத்தன் - பெரும்பித்தேறுகின்றேன் என்கிறார்.

வ்யா.—நாலாம்பாட்டு. (உண்டியேயுடையே யுகந்தோடும்) உபாஸநத்துக்கு ஶரீரம் வேண்டுகையாலே அது தரிக்கவேண்டுமளவன்றியிலே எல்லாவற்றையும் அழியமாறி உண்டியுமுடையுமாக்கும். (இம்மண்டலத்தொடுங் கூடுவதில்லையான்) "உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையு மெல்லாங் கண்ணன்" என்றிருந்த, ஒருவிபூதியுண்டானாப்போலே ப்ராக்ருத போகங்களை விரும்புகைக்கொரு விபூதியிறே யிதுவும். (அண்டவாணன்) அண்டாந்தர்வர்த்திகளுக்கு நிர்வாஹகன். (அரங்கன்) இதுக்கு நிர்வாஹகனாயிருக்கு மிருப்பொழிய இதினுள்ளே புகுந்து ஸுலபனாய்க்கோயிலிலே ஸந்நிஹிதனானவன். (வன்பேய் முலையுண்டவாயன் உன்மத்தன் காண்மினே) இங்கே வந்தவதரித்து ப்ரதிபந்தகங்களைத் தானே போக்குமவனுக்குப் பித்தன் நான். (தன் உன்மத்தன்காண்மினே) ஔஷதஸேவை பண்ணினாரையு மிழக்கவொண்ணாதாப்போலே அவனுடைய குணசேஷ்டிதங்களிலே யகப்பட்டுப் பித்தனானவென்னைக் கேவல ஶரீர பரவஶரோடே சேரவிடவொண்ணுமோ. (௪)

தீதில்நன்னெறிநிற்கவல்லாதுசெய்
நீதியாரொடுங்கூடுவதில்லையான்;
ஆதியாயனரங்கனந்தாமரைப்
பேதைமாமணவாளன்றன்பித்தனே. (௫)

ப-ரை.—தீதில் - குற்றமற்ற, நல்நெறி - ஸன்மார்க்கமானது, நிற்க-இருக்கச்செய்தே, அல்லாது செய் நீதியாரோடும் - க்ஷுத்ர புருஷார்த்தங்களை

விரும்புகையைத் தொழிலாக வுடையவர்களோடே, யான் கூடுவதில்லை—; ஆதி - ஜகத்காரணபூதராய், ஆயன் - க்ருஷ்ணனாய் வந்தவதரித்த ஸர்வஸுலபராய், அம் - அழகிய, தாமரை - செந்தாமரைமலரை இருப்பிடமாகவுடைய, பேதை - பெரியபிராட்டியாருக்கு, மா மணவாளன் - வல்லபரான, அரங்கன் தன் - அழகிய மணவாளன் விஷயத்திலே, பித்தன் - நான் பித்தனானேனென்கிறார்—.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (நீதில் நன்னெறிநிற்க) நீதியோடு பிறவாத நல்வழிநிற்க. இவனையொழிந்த பலங்களுக்கு ஸாதநாநுஷ்டானம்பண்ணிப் பெறும்பேற்றில் இழவே நன்றென்னும்படியிறே யிருப்பது. (அல்லாது செய் நீதியாரோடுங் கூடுவதில்லையான்) இதர புருஷார்த்தங்களை யாசைப்படுகையே யாத்ரையாயிருப்பாரோடும் கூடுவதில்லையான். (ஆதி) ப்ரமாணங்கள் உபாஸ்ய வஸ்துவென்று சொல்லப்படுகிறவன். (ஆயன்) உபாஸ்ய வஸ்துதான் அரிதென்ன வொண்ணாதபடி யவதரித்து ஸுலபனானவன். (அரங்கன்) அவதாரம்போலே தீர்த்தம் ப்ரஸாதித்து பிற்பாடரிழவாமே கோயிலிலே வந்து ஸந்நிஹிதரானவர். (அந் தாமரைப்பேதை மா மணவாளன் தன் பித்தனே) அழகிய தாமரைப்பூவைத் தனக் கிருப்பிடமாகவுடைய பெரிய பிராட்டியாருக்கு வல்லபரானவர்க்குப்பித்தனானேன் நான். ஓரடி இவன் புகுராநின்றால் அத்தைக்குவாலாக்கி அவன் னெஞ்சிலே புண்படும்படி இவன் பண்ணின அபராதத்தை அவன் காணாதபடியிருக்கிற புருஷகாரபூதை. (மாமணவாளன்) [ப்ருதிவ்யம்ஸமஸ்த்ரீ: — அப்ரமேயம் ஹிதத்தேஜ:] இவளுக்கு வல்லபனானவனாகையாலேவந்த பெருமையையுடையவன். பித்தன் நான். ... (௫)

எம்பரத்தரல்லாரொடுங்கூடலன்;
உம்பர்வாழ்வையொன்றாகக்கருதிலன்;
தம்பிரானமரர்க்கரங்கநகர்
எம்பிரானுக்கெழுமையும்பித்தனே. (௬)

ப-ரை.—எம்பரத்தரல்லாரொடும் - என்னைப்போலே அடிமைசெய்ய விராதவர்களோடே, கூடலன் - யான் கூடமாட்டேன்; உம்பர்வாழ்வை - ஸ்வர்க்காதிலோக ஸுகங்களை, ஒன்றாக - ஒருபொருளாக, கருதிலன் - நினைக்கமாட்டேன்; தம்பிரான் - * அமரர் வர்க்கமாக ஸ்வாமியாய், அரங்கநகர் - கோயிலிலே வந்து, எம்பிரானுக்கு - எனக்கு உபகாரகரான பெரியபெருமாள் விஷயத்திலே, எழுமையும் - காலமுள்ளதனையும், பித்தன் - பித்தனாய்த் திரியுமவன் என்கிறார்.

வ்யா.—ஆறாம்பாட்டு. (எம்பரத்தரல்லாரொடுங் கூடலன்) என் யாத்ரையே யாத்ரையா யிராதாரை நாக்கு வளைத்திருப்பன். "இந்நின்ற நீர்மை யினியாமுறாமை" என்றும், "வழுவிலாவடிமை செய்யவேண்டுநாம்" என்றும் இராதாரோடு ஸம்பந்தமில்லை. (உம்பர் வாழ்வை யொன்றாகக் கருதிலன்) ஸம்ஸாரத்தில் அருசியும்

கைங்கர்யத்தில் ருசியுமில்லையாகில், ப்ரஹ்மாதிகள் ஸம்பத்தே யாகிலும த்ர்ணவத்கரிப்பன். (தம்பிரானமரர்க்கு) * அயர்வறு மமரர்களதிபதி. (அரங்கநகரெம்பிரானுக்கு) நித்ய ஸூரிகளெல்லாம் அநுபவிக்குமாப்போலே ஸம்ஸாரிகளெல்லா மிழவாதபடி கோயிலிலே வந்து ஸுலபரானவர். (எழுமையும் பித்தனே) இச் செயலுக்கென்னும் பித்தனாய்த் திரியுமவன்.... ... ... ... ... ௬

அ.—எழாம்பாட்டு. இதரரோடு கூடாத நன்மை உமக்கு வந்தபடியென்னென்ன; நானடியாக வந்ததல்ல, ஸர்வேஶ்வரனடியாக வந்ததென்கிறார்.

எத்திறத்திலும்யாரொடுங்கூடுமச்
சித்தந்தன்னைத்தவிர்த்தனன்செங்கண்மால்
அத்தனேயரங்காவென்றழைக்கின்றேன்
பித்தனாயொழிந்தேனெம்பிரானுக்கே. (எ)

ப-ரா.—எத்திறத்திலும் - எப்படிப்பட்ட பொருள்கள் கிடைக்குமென்னிலும், யாரொடும் - அபாங்க்தரோடே, கூடும் - பொருந்தாநிற்கிற, அச்சித்தந் தன்னை - அப்படிப்பட்ட மநஸ்ஸை, செங்கண்மால் - புண்டரீகாக்ஷனான ஸர்வேச்வரன், தவிர்த்தனன் - நீக்கினன்; அத்தனே என்று - ஸ்வாமியே என்றும், அரங்கா என்று - அழகியமணவாளனே யென்றும், அழைக்கின்றேன் - கூப்பிடாநின்றேன்; எம்பிரானுக்கு - இதரவிஷயப்ரவணமாய் பொருந்தாதபடி பண்ணி உபகரித்த பெரியபெருமாளுக்கு, பித்தனாய் ஒழிந்தேன்—.

வ்யா.—(எத்திறத்திலும்) அபாங்க்தரோடு சம்பாஷிக்க அபிமத புருஷார்த்தங்களை யெல்லாம் லபிக்கலாமென்னிலும் அத்தையுங் காற்கடைக்கொள்ளும்படியானேன். (அச்சித்தந் தன்னைத்தவிர்த்தனன செங்கண்மால்) கண்ணாலே குளிரநோக்கி தன் வ்யாமோகத்தைக்காட்டி பிறரோடு மநஸ்ஸு பொருந்தாதபடி பண்ணினான். (அத்தனே) எனக்கு ஸ்வாமியானவனே. (அரங்காவென்றழைக்கின்றேன்) அந்தஸ்வாமித்வத்தை நிர்வஹித்துக்கொடுக்கைக்காக கோயிலிலேவந்து ஸுலபனானவனென்று கூப்பிடாநின்றேன். (பித்தனாயொழிந்தேனெம்பிரானுக்கே) இதரவிஷய ப்ராவண்யத்தோடு பொருந்தபடி பண்ணின வுபகாரகனுக்குப் பித்தனானேன்.

அ.—எட்டாம்பாட்டு. எல்லாரும் விட்டாலும் ஒருவரல்லா ஒருவர் பற்றுவர்களிறே, அவர்களெல்லாரும் விடும்படியானேனென்கிறார்.

பேயரேயெனக்கியாவரும்யானுமோர்
பேயனேயெவர்க்குமிதுபேசியென்;
ஆயனேயரங்காவென்றழைக்கின்றேன்
பேயனாயொழிந்தேனெம்பிரானுக்கே. (அ)

ப-ரை.—யாவரும்-அஸ்திரமான புருஷார்த்தங்களை விரும்புமவர்களெல்லாம், எனக்கு - பரமபுருஷார்த்தத்தை விரும்பிப் போருமெனக்கு, பேயர்-பேயரா யிராகின்றார்கள்; யானும் - அவர்கள் நிலையில் நில்லாதயானும், எவர்க்கும்-எவர்களுக்கும்,ஓர்பேயன்-ஒப்பற்றபேயனாயிராநின்றேன்;இது-இவ்விஷயத்தை, பேசி - விஸ்தரிப்பேசுவதினால், என் - என்னப்ரயோஜநம்; ஆயனே என்றும் - க்ர்ஷ்ணனாயவதரித்து ஸுலபனானவனே என்றும், அரங்கா என்று - பெரியபெருமாளே எனறும், அழைக்கின்றேன் - கூப்பிடாநின்றேன்; எம்பிரானுக்கு-எனக்குபகாரகனான அழகியமணவாளன் விஷயத்திலே, பேயனாயொழிந்தேன் - பித்தேறாநின்றேன் என்கிறார்.

வ்யா.—(பேயரே யெனக்கு யாவரும்) நிலைநின்ற புருஷார்த்தத்தைவிட்டு அஸ்திரமான ப்ராக்ர்த போகங்களை விரும்புவதே! பேயராயிருந்தார்களென்று விட்டேன் நான். (யானு மோர் பேயனே யெவர்க்கும்) கண்ணால் காண்கிற தொழிய வேறே யொன்றுண்டென்று ப்ரமியாநின்றான், பித்தனாயிருந்தானென்று விட்டார்கள் இவர்களும் என்னை. (இது பேசியென்) இத்தைப்பரக்கச் சொல்லுகிறதென். (ஆயனே) கண்ணாற் காண்கிறது பொய்யென்றிராதபடி வந்தவதரித்தான் பகுத்தினபடிகளை எனக்குக் காட்டினவன். (அரங்காவென் றழைக்கின்றேன்) அவதாரத்துக்குப் பிற்பாடரிழவோடே தலைக்கட்டாதபடி கோயிலிலே கண்வளர்ந்தருளின பெரியபெருமாள் திருநாமத்தைச் சொல்லி அடைவுகெடக் கூப்பிடாநின்றேன். (பேயனாயொழிந்தே னெம்பிரானுக்கே) ஒரு விஷயத்திலே பித்தேறினவன் நமக் கினியாகான் காண், விடாய்என்று இதரர் என்னை உபேக்ஷிக்கும்படி யானேன். ... ... ... ... அ

அங்கையாழியரங்கனடியிணைத்
தங்குசிந்தைத்தனிப்பெரும்பித்தனாய்
கொங்கர்கோன்குலசேகரன்சொன்னசொல்
இங்குவல்லவர்க்கேதமொன்றில்லையே. (௯)

ப-ரை.—அம் - அழகிய, கை - வலத்திருக்கையிலே, ஆழி-திருவாழியாழ்வானை யுடையரான, அரங்கன் - அழகியமணவாளப் பெருமாளுடைய, அடியிணை-திருவடிகளிலே, தங்கு - பொருந்திய, சிந்தை - மநஸ்ஸையுடையராய், தனிப்பெரும் பித்தனாய் - மிகவும் பித்தேறினவராய்க்கொண்டு, கொங்கர்-மேற்றிசையிலுள்ளார்க்கு, கோன் - தலைவரான, குலசேகரன் - ஸ்ரீகுலசேகரப்பெருமாள், சொன்ன - அருளிச்செய்த, சொல் - இவ்வொன்பதுபாட்டுகளையும், வல்லவர்க்கு - அப்யஸிக்கவல்லவர்களுக்கு, இங்கு - இந்தலோகத்திலே, ஏதம் ஒன்று - அபாகவத ஸ்பர்சத்தால்வரும் துக்கம், இல்லை - உண்டாகாது.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (அங்கையாழி யரங்க னடியிணை) அழகிய மணவாளப் பெருமாள் திருவடிகளிலே. (தங்குசிந்தை) பெருமாள் திருவடிகளுக் கவ்வருகு கந்தவ்யபூமியில்லாமையாலே

அங்கே தங்கு சிந்தையையுடைய. (தனிப்பெரும்பித்தனாய்) பகவத் விஷயத்தில் இவர்களோ பாதிபித்தேறினார் வேறொருவரில்லாமையும், சிலவரால் மீட்க வொண்ணாமையுமானபித்தனாய். (கொங்கர்கோன்-குலசேகரன் சொன்னசொல்) மேலைத்திக்குக்கு நிர்வாஹகரான ஸ்ரீகுலசேகரப்பெருமா ளருளிச்செய்தது. (இங்கு வல்லவர்க் கேதமொன்றில்லையே) இவற்றை வல்லவர்களுக்கு இங்கேத மொன்றில்லையே. ஏதமாவது – அபாகவத ஸ்பர்ஶமாதல், பகவத் ப்ராவண்யத்தில் குறையாதல்வரும் துக்கம்போமென்றும், இஸ்ஸம்ஸாரத்திலிருக்கும் நாளல்லை, இத்துக்க ப்ரஸங்கமுள்ள திவ்விடத்தேயிறே. இவை கற்றவர்களுக்கு இப்ரஸங்கமுள்ள தேஶத்திலே யில்லை. ௧௰

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

அடி வரவு-மெய் நூல் மாறன் உண்டி தீதில் எம்பரத்தர் எத்திறம் பேய் அங்கை ஊன்.

---

## நாலாந்திருமொழி - ஊனேறுசெல்வ ப்ரவேசம்.

அ.—பகவத் ஜ்ஞாநமும் பிறந்து, இதரவிஷயத்யாகமும் பிறந்து, குணவிஷயத்தை யநுபவிக்கவேணுமென்னும்ருசியும் பிறந்து, அந்த குணம் பூர்ணமாக அநுபவிக்கலாமிடத்தே யநுபவிக்க வேணுமென்று மாசையும்பிறந்து, "அடியார்கள் குழாங்களையுடன் கூடுவதென்று கொலோ" என்னுமாப்போலே "அடியார்கள் தம் மீட்டங் கண்டிக்கூடுமேல்" என்னுமதுவும் பிறந்து; இப்படி பகவத்விஷயத்திலும் பாகவதவிஷயத்திலும் ஆநுகூல்யமும் இதர விஷயத்யாக பூர்வகமாகக் கண்ணழிவறப் பிறக்கச்செய்தே விரோதியும்போய் அநந்தரம் பகவல்லாபமாகவும் காணாமையாலே, "ஸ்வயம் ..." "யதிவாராவணஸ்ஸ்வயம்" என்றும், "ஆள்பார்த்துழி தருவாய்" என்றும் மேல்விழக்கடவ வவன் பக்கல் குறையில்லை, இதுக்கு வேறேயொரு ஹேதுவுண்டாகவேணுமென்று பார்த்து, ஶரீர ஸமநந்தரம் பகவல்லாபமாகில் பரிக்ரஹித்த ஶரீரம் க்ஷத்ரியஶரீரமாய் போகங்களில் குறைவற்றிருந்த பின்பு ஶரீராவஸாநத்தளவும் போகங்களை புஜித்து, பின்னை க்ரமத்தாலே பகவத்ப்ராப்தி பண்ணுகிறோமென்று நினைத்திருக்கிறேனென்று நினைத்து ஆறியிருந்தானாக வேணுமென்னுமத்தைத் திருவுள்ளத்திலே கொண்டு, தமக்குக்ரம ப்ராப்தி பொறாமை தோன்ற "ஒன்றியாக்கைப் புகாமலுய்யக்கொள்வான் நின்ற வேங்கடம்" என்றும், "மந்திபாய் வடவேங்கடமாமலை வானவர்கள் சந்திசெய்ய நின்றான்" என்றும் - கீழநுபவித்த

பெரியபெருமாள் தாமே ஸம்ஸார ஸம்பந்தமறுத்துக் கொடுக்கைக்கும் கைங்கர்யம் கொள்ளுகைக்கும் திருமலையிலே நிற்கிறாராகையாலே திருவேங்கடமுடையான் திருவடிகளிலே விழுந்து விரோதியில் அருசியும் கைங்கர்யத்தில் ருசியும் பிறந்த த்வரையை யுமாவிஷ்கரிக்கிறார். ... ... ... ... *

அ.—முதற்பாட்டு. (ஊனேறித்யாதி) ப்ரக்ருதி புருஷவிவேகம் பண்ணுகைக்கு யோக்யதையுள்ள மநுஷ்யஜந்மமாய், அதிலே பாரக்ஷணத்துக் குறுப்பான க்ஷத்ரியஜந்மம் வேண்டா, கைங்கர்யத்தில் எல்லைநிலத்துக் குறுப்பான திர்யக்காய்ப் பிறக்கவமையும் நானென்கிறார்.

ஊனேறுசெல்வத்துடற்பிறவியான்வேண்டேன்
ஆனேறேழ்வென்றானடிமைத்திறமல்லால்;
கூனேறுசங்கமிடத்தான்றன்வேங்கடத்துக்
கோனேரிவாழுங்குருகாய்ப்பிறப்பேனே. (க)

ப-ரை.—யான - அவனை சேஷியென்றறிந்த யான், நம்பின்னைப்பிராட்டிக்காக, ஆன் ஏறு ஏழ் - ரிஷபங்களேழையும், வென்றான் - நிரஸித்த திருவேங்கடமுடையான் விஷயத்திலே. அடிமைத்திறம் அல்லால் - கைங்கர்யம் பண்ணுகையொழிய, ஊன் ஏறு - நாள்செல்ல நாள் செல்ல மாம்ஸம்வளர்ந்து வருமதாய், செல்வம் - அதிசயமான செல்வத்தோடுகூடின, உடல்பிறவி - மநுஷ்யஜந்மத்தை, வேண்டேன் - இச்சியேன் என்ன; பின்னை நீர் விரும்பியிருப்பது என்னென்ன, கூன் ஏறு - சேஷத்வத்தால் வளைந்திருக்கிற, சங்கம் - ஸ்ரீபாஞ்சஜன்யத்தை, இடத்தான் தன் - இடத்திருக்கையிலே யுடையவனுடைய, வேங்கடத்து - திருமலையிலே, கோனேரி - திருக்கோனேரியிலே, வாழும் - வர்த்திக்கிற, குருகு ஆய் பிறப்பேன் - நாரையாகவாகிலும் பிறப்பேன் என்கிறார்.

வ்யா.—(ஊனேறுசெல்வத்துடல் பிறவி யான்வேண்டேன்) இந்த ஶரீரத்துக்குச் சொல்லுகிற குற்றமென்னென்ன; நாள்செல்ல நாள்செல்ல மாம்ஸப்ரசுரமாய் வருகையாலே ஶரீரந்தடிக்கு † ஆத்மாதிகளுக்கு இத்தனை; அத்தாலே வேண்டேனென்கிறார். நம்முடைய ஸ்வரூபமும் நித்யமாயிருக்கச்செய்தே "ஶஸந்நேவ" "அஸந்நேவ" என்கிறது ஜ்ஞாநஸங்கோசத்தைப் பற்றவிறே; அப்படியே ஜ்ஞாந ஸங்கோசத்தைப் பிறப்பிக்குமதுவாகையாலே வேண்டேனென்கிறார். (யான்வேண்டேன்) தலையறுத்துக்கொள்ளுமவர்கள் சந்தநம் பூசித்திரியுமாப்போலே விழுக்காடறியாதான் வேணுமேயென்றிருந்தாலுமத்தனை; விவேகஜ்ஞாநமுடையநான்வேண்டேன். ஶரீரத்தினுடைய ஹேயத்தையும், ஆத்மாவினுடைய வைலக்ஷண்யத்தையும், இதுதான் தனக்கே ஶேஷமென்னுமிடத்தையும் அவன்றானே யறிவிக்கவறிந்தநான் வேண்டேன். (ஆனேறேழ்வென்றானடிமைத் திறமல்லால்) அவன்தானே விரோதியைப்போக்கி

† இவ்விடத்துக்குச் சரியான பாடத்தை கோசாந்தரங்களில் கண்டுகொள்க.

கைங்கர்யத்திலே அந்வயிப்பிக்குமவனுனன். (ஆனேறேழ்வென்று ன்) நப்பின்னைப்பிராட்டியோட்டைஸம் ஶ்லேஷத்துக்குஇடைச்சுவ ரானரிஷபங்களேழையும் வென்றவன். மாதாவின் பக்கலிலே ஸ்நே ஹத்தைப்பண்ணின பிதாவை யநுவர்த்திக்கும் புத்ரனைப்போலே (அடிமைத்திறமல்லால்) அடிமை யிடையாட்டமென்னுதல்; "அஹம் ஸர்வம்" "அஹம்ஸர்வம்" என்றும், "வழுவிலாவடிமை" என்றுஞ் சொல்லுகிறபடியே அடிமைத்திறமென்னுதல். (கூனேறுசங்கமிடத் தான்) கைங்கர்யருசியுடையாரை நித்யகைங்கர்யங்கொள்ளுமவன். (கூனேறுசங்கமிடத்தான்) "ப்ராஞ்ஜலிம் ப்ரஹ்வமாஸீநம்" "ப்ராஞ்ஜலிம் ப்ரஹ்வமாஸீநம்"என்னுமாப்போலே பகவதநுபவச்செருக்காலே இளையபெருமாளைப்போலே காட்சிக்கு நோக்காயிருக்கிற ஸ்ரீபாஞ் சஜந்யாழ்வான். (சங்கமிடத்தான்) இடக்கையிலேகாணில் "சங்க மிடத்தான்" என்கிறார்; வலக்கையிலே திருவாழியாழ்வானைக் கண் டவிரகையாலே "வலக்கையாழி" என்கிறார்; திருமார்விலே பிராட் டியைக்கண்டவாறே "தின்வலமார்பினில் வாழ்கின்றமங்கை" என் கிறார். இவர்படியிதிறே. (தண்வேங்கடத்து) அங்கேயடிமை கொள் ளுகைக்குப் பாங்கானதேஶமாகையாலே யென்னதென்று இவன் விரும்பின திருமலையில். (கோனேரிவாழுங் குருகாய்ப்பிறப்பேனே) விரஜையைப்பற்றி அமாநவ வஶத்திலே வர்த்திக்குமாப்போலே, கோனேரியைப்பற்றி வர்த்திக்குங் குருகாய்ப் பிறப்பேனென்கிறார். (வாழும்) கோயில் வாஸம்போலேகாணும் திருக்கோனேரியில். வர் த்திக்குமென்கிற விடத்துக்குவெறே வாசகஶப்தங்களுண்டாயிருக் கச்செய்தே "வாழும்" என்கிற ஶப்தத்தை யிட்டபடியாலே அங் குத்தை வாஸந்தானேபோக ரூபமாயிருக்குமென்கை. (குருகாய்ப் பிறப்பேனே) ப்ரக்ருதி புருஷவிவேகம்பண்ணுகைக் குறுப்பான மநு ஷ்ய ஜந்மமுமாய் அதிலே பாரதக்ஷணத்துக் குறுப்புமாகையாலே புண்யஶரீரமான க்ஷத்ரியஜந்மம் வேண்டாவென்கிறார். அது துர் மாநஹேதுவாகையாலே ப்ரக்ருதி புருஷவிவேகம் பண்ணவும்மாட் டாதே பாரக்ஷணத்துக் குறுப்புமின்றிக்கே பாபயோநியுமாயிருக்கிற திர்யக்காய்ப்பிறக்கவமையுந்திருமலை யெல்லைக்குள்ளே பிறக்கப்பெறி லென்கிறார். "உடல்பிறவியான்வேண்டேன்" என்கிறார், குரு காய்ப்பிறப்பேனே" என்கிறார். பிறவியன்றுபோலே காணும் அங் கேபிறக்கை. ... ... ... ... ... ... (க)

அ.—இரண்டாம்பாட்டு. இந்தத்தை போகங்களிற் காட் டில் நிலைநின்றபோகங்களுமாய் இதுபோலே ஸாவதியன்றியே நிர வதியுமா யிருக்குமிறே ஸ்வர்க்கத்தில் போகம்; அவைபெற்றால் செய்வதென்னென்னை; அவையும் கீழில் கழித்த பூமியில் போக மும் இரண்டுங் கூடக்கிடக்கிலும் வேண்டாவென்கிறார்.

ஆனாதசெல்வத்தரம்பையர்கள்தற்சூழ
வானாளுஞ்செல்வமுமண்ணரசும்யான்வேண்டேன்;
தேனார்பூஞ்சோலைத்திருவேங்கடச்சுனையில்
மீனாய்ப்பிறக்கும்விதியுடையேனாவேனே. (௨)

ப-ரை.—ஆனாத - அழியாத, செல்வத்து - யௌவநமாகிற ஸம்பத்தை யுடையரான, அரம்பையர்கள் - ரம்பைமுதலான அப்ஸரஸ்ஸுக்கள், தனைத் தன்னை, சூழ - சூழ்ந்து நிற்க, வான் ஆளும் செல்வமும் - ஸ்வர்க்கத்தை ஆளுகையாகிற செல்வத்தையும், மண்ணரசும் - பூலோகத்தை ஆளுகையையும், யான் வேண்டேன்—; தேன் ஆர் - தேன் மிக்கிருந்துள்ள, பூ - புஷ்பங்களையுடைய, சோலை - சோலைசூழ்ந்த, திருவேங்கடம் - திருமலையிலுண்டான, சுனையில் - சுனைகளிலே, மீனாய்ப்பிறக்கும் விதியுடையன் ஆவேனே - மீனாகவாவது பிறக்கத்தக்க விதியையுடையவனாக ஆவேனென்கிறார்.

வ்யா.—(ஆனாதசெல்வத் தரம்பையர்கள்) கெடாதஸம்பத்து. அதாவது – அழியாதயௌவந ஸ்ரீயையுடைய அப்ஸரஸ்ஸுக்கள். (தற்சூழ)இவன்தான் தப்ப நினைத்தாலும் தப்பவொண்ணாதபடி அவர்கள்மேல்விழ. (வானாளுஞ் செல்வமும் மண்ணரசும் யான்வேண்டேன்) ஸ்வர்க்காதிகளநுபவிக்கும் ஸம்பத்தோடேகூட கீழில்கழிந்த ராஜ்யஸ்ரீயையும் கூட்டிலும் வேண்டேன். வேண்டேனென்கிறது-இவற்றுக்குக் குறையுண்டாயன்று, நான்நினைத்த புருஷார்த்தமல்லாமையாலே வேண்டேனென்கிறார். நீர்வேண்டியிருப்பதென்னென்ன (தேனார்பூஞ்சோலை திருவேங்கடச்சுனையில்) தேன்மிக்கிருந்துள்ள பொழிலென்னுதல்; வண்டுகள்மிக்க பொழிலென்னுதல். பொழில் சூழப்பட்டிருக்கிற திருமலையில் சுனைகளிலே. (மீனாய்ப்பிறக்கும் விதியுடையேனாவேனே) கீழ்ச்சொன்ன குருகாய்ப்பிறக்கில் அதுக்குச் சிறகுண்டாகையாலே திருமலையிலே நல்லனாய்க் கழியப் பறக்கைக்கு யோக்யதையுண்டிறே; அப்படியு மொன்றன்றியே உத்பத்தி ஸ்திதிலயங்களுக்கு திருமலையிலேயாய் மீனாய்ப்பிறப்பேன் என்கிறார். (பிறக்கும் விதியுடையேன் ஆவேனே)இப்போது மீனாய் பிறக்கவும்வேண்டா, ஒருஸங்கல்பத்தாலே அந்த ஜன்மம் மேல்வரு மென்று திண்மைபெறவு மமையுமென்கிறார். ... ... (௨)

அ.—மூன்றாம்பாட்டு. பாரதந்த்ர்யத்துக் குறுப்பாகப்பெறில் கீழில்கழிந்த மநுஷ்யஜந்மமே யாகிலு மமையுமென்கிறார்.

பின்னிட்டசடையானும்பிரமனுமிந்திரனும்
துன்னிட்டுப்புகலரியவைகுந்தநீள்வாசல்
மின்வட்டச்சுடராழிவேங்கடக்கோன்றானுமிழும்
பொன்வட்டிற்பிடித்துடனேபுகப்பெறுவேனாவேனே. (௩)

ப-ரை.—பின்னிட்ட - பின்னப்பட்ட, சடையானும் - ஜடையையுடைய ருத்ரனும், பிரமனும் - ப்ரஹ்மாவும், இந்திரனும் - இந்த்ரனும், முன்னேபோக வேணுமென்கிற இச்சையாலே, துன்னிட்டு - ஒருவர்க்கொருவர் நெருக்கி, புகல் அரிய - ப்ரவேசிக்கவொண்ணாதிருக்கிற, வைகுந்தம் - பரமபதத்துக்கொப்பான, நீள் - பெருமை தங்கிய, வாசல் - திருவாசலிலே, மின் - மின்னலை, வட்டம் - வளைத்தாப்போலிருக்கிற, சுடர் - ஜ்யோதிஸ்ஸை யுடைத்தான, ஆழி - திருவாழி யாழ்வானையுடைய, வேங்கடக்கோன்றான் - திருவேங்கட முடையான், உமிழும் - திருப்பவளமாற்றுகிற, பொன் - பொன்னாற்செய்த, வட்டில் - வட்டிலை, பிடித்து - கையிலே பிடித்துக்கொண்டு, உடனே புகப்பெறுவேனாவேனே - கர்ப்பக்ர்ஹத்திலேபுக்கு அருகு நிற்கத்தக்க பாக்யத்தைப் பெறவேணுகவேணு மென்கிறார்.

வ்யா.—(பின்னிட்ட சடையானும்) பின்னப்பட்ட சடையானென்னுதல்; பின்னே நாலப்பட்ட சடையானென்னுதல். பின்னே வர்த்திக்கக் கடவனிறே புத்ரன்; அப்படியே ப்ரஹ்மாவின்பின்னே நிற்கும் சடையா னென்னுதல். (பிரமனும்) இவனுக்கு ஜநகனான ப்ரஹ்மாவும். (இந்திரனும்) "ஸப்ரஹ்மஸஶிவঃ" "ஸப்ரஹ்மாஸஶிவঃ" என்றால்இவர்களோடொக்க, "ஸேந்த்ரঃ" "ஸேந்த்ரঃ" என்னும்படியானஇந்த்ரனும். (துன்னிட்டுப்புகலரிய வைகுந்தநீள்வாசல்) ஒருவர்க்கொருவர் முன்புபோகவேண்டி யிருக்கையாலேபுகவரிதாயிருக்கிற வைகுந்தநீள்வாசலிலே. (மின்வட்டச்சுடராழி) மின்னைவளைத்தாப்போலே ஜ்யோதிஸ்ஸையு முடைத்தாய்ச் சுற்றும் வாயையுமுடைத்தாயிருக்கிற திருவாழியாழ்வானையுடைய. (வேங்கடக்கோன்றானுமிழும் பொன்வட்டில் பிடித்துடனே புகப்பெறுவேனாவேனே) ப்ரஹ்மருத்ராதிகள் நெருக்கிப்புகப்பெறாதே நிற்க, பணிக்குக் கடவன் "இவனைப்புகுரவிடு" என்று உள்ளே அந்தரங்க வ்ர்த்திக்குக் கடவவர்களோடே நானும் ஸஜாதீயனாய்ப் புகவேணும். (ரு)

அ.—நாலாம்பாட்டு. மநுஷ்யஶரீரம் ராஜாவாகைக்கும் பொதுவாகையாலே அது வேண்டா, திருவேங்கட முடையானுக் குறுப்பாம்படி திருமலையிலே நிற்பதொரு ஸ்தாவரமாக வமையும் நானென்கிறார்.

ஒண்பவளவேலையுலவுதண்பாற்கடலுள்
கண்டுயிலுமாயோன்கழலிணைகள்காண்பதற்குப்
பண்பகரும்வண்டினங்கள்பண்பாடும்வேங்கடத்துச்
செண்பகமாய்நிற்குந்திருவுடையேனாவேனே. (ச)

ப-ரை.—ஒண் - ஒள்ளிய, பவளம் - பவளங்களை, வேலை-கரையிலேகொடுவந்து, உலவு - கொழிக்கிற, தண் - குளிர்ந்த, பாற்கடலுள் - திருப்பாற் கடலிலே, கண் துயிலும் - கண்வளர்ந்தருளுகிற, மாயோன் - ஆச்சர்யபூதனான

திருவேங்கடமுடையானுடைய, கழலிணைகள் - திருவடிகளை, காண்பதற்கு- ஸேவிக்கைக்காக, பசரும் - தாங்கள் பாடுகிற, பண் - இசைக்கு அநுகுண மாக, வண்டுகளானவை, பண்பாடும் - பண்களைப்பாடாநின்றுள்ள, வேங்கட த்து-திருமலையிலே, செண்பகமாய்நிற்கும்-செண்பகமரமாய் நிற்கத்தக்க, திரு வுடையேனாவேனே-ஸம்பத்துடையவனாக வாகிலும் ஆவேனேனென்கிறார்.

வ்யா.—(ஒண்பவளவேலை யுலவுதண்பாற் கடலுள்) ஒள்ளிய பவளத்தைக் கரையிலே கொடுவந்து கொழிக்கிற பாற்கடலென்னு தல்;ஒள்ளிய பவளங்களைக் கொண்டுஉலாவுகிற திரைகளையுடையஶ்ர மஹரமான திருப்பாற்கடலிலே யென்னுதல். (கண்துயிலுமாயோ ன்) திருப்பாற் கடலிலே, "கிடந்ததோர் கிடக்கை" என்று சொல் லும்படி கண்வளர்ந்தருளுகிற ஆஶ்சர்யபூதனானவன். (கழலிணைகள் காண்பதற்கு) அங்குச்சென்றுகிட்டிக் காணவொண்ணாத அருமைநீர க்காணலாந் தேசத்திலே காண்கைக்காக. (பண்பசரும்) இயலைக் கற்று ஶிக்ஷாபலத்தாலே இசைவருந்தனையை வார்த்தை சொல்லும் போதும்பண்ணாயிருக்கை.(வண்டினங்கள்பண்பாடும்வேங்கடத்து) தாங்கள்பாடுகிற பாட்டுக்குஇசைந்து வண்டினங்களானவை பண் பாடுகிற திருமலையிலே. (செண்பகமாய்நிற்கும் திருவுடையேனாவே னே) திருமலையிலே செண்பகமாய் நிற்கும் ஸம்பத்துண்டாகவே ணும். அதாவது - பகவத்ப்ரத்யாஸத்தியிறேப்ராப்யம்; அது கிட்டு மானபின்பு ஸ்தாவரமாய்நிற்கவும் அமையும்; மேலேஏறினசைதந்ய த்தாலே கார்யகரமில்லை யென்கிறார். ... ... ... (ச)

அ.—அஞ்சாம்பாட்டு. செண்பகமானால் பரிமளத்துக்காகஉள் ளேகொண்டு புகுவர்களென்று ஒரு ப்ரயோஜநத்தைக் கணிசித்ததா யிறே;அப்படியுமொன்றுமில்லாத தம்பகமாகவுமமையுமென்கிறார்.

கம்பமதயானைக்கழுத்தகத்தின்மேலிருந்து
இன்பமருஞ்செல்வமுமிவ்வரசும்யான்வேண்டேன்;
எம்பெருமானீசனெழில்வேங்கடமலைமேல்
தம்பகமாய்நிற்குந்தவமுடையேனாவேனே. (ரு)

ப-ரை.—கம்பம் - கண்டவர்களெல்லாரும் நடுங்கும்படியான, மதம் - மத த்தையடைய, யானை - யானையுடைய, கழுத்தகத்தின்மேல் - கழுத்தின்மேலே, இருந்து - ராஜாதிராஜன் என்னும் பெருமைதோன்றவிருந்த, இன்பு அமரும்- ஸகலபோகங்களையும் புஜிக்கத்தக்க, செல்வமும் - ஸம்பத்தையும், இவ்வரசும்- இந்த்ராஜ்யமாளுகையையும், யான் - என்னை அத்தலைக்கு சேஷபூதனென்றறி ந்த நான், வேண்டேன் - விரும்பமாட்டேன்; எம்பெருமான் - எனக்கு உபகார கனாய், ஈசன் - ஸர்வஸ்வாமியானவனுடைய, எழில் - அழகிய, வேங்கடமலை மேல் - திருமலையிலே, தம்பகமாய்நிற்கும் - தம்பகமரமாய்நிற்கும் ;தவமுடை யேனாவேன் - தபஸ்ஸையுடையவனாக ஆவேன்.

வ்யா.—(கம்பமதயானைக்கழுத் தகத்தின்மேலிருந்து) கண்டா ரெல்லாம்நடுங்கும்படி மதிப்பையுடையவானை யென்னுதல்; மதத் தாலே கம்பத்தினின்றும் விடவொண்ணாதபடி நிற்கும் யானையென் னுதல். ஒருவராலும் மேற்கொள்ளவொண்ணாதாகிலும் ராஜாக்களை மேற்கொள்ள வொட்டுமிறே யானைகள். எல்லார்க்கும் பயாவஹ மான யானையைமேற்கொண்டு தன் கருத்திலே நடத்தி. (இன்பமரு ஞ்செல்வமும் இவ்வரசும் யான்வேண்டேன்) அங்கேயிருந்து எல் லா போகங்களும் புஜிக்கும் ஸம்பத்தும் அதுக்கடியான ராஜதர்ம மும் யான் வேண்டேன். நீர் வேண்டுவதென்னென்னில் (எம்பெ ருமானீசன்) * अखिलजगत्स्वाम्यस्मत्स्वामी-அகிலஜகத்ஸ்வாமிஅஸ்மத்ஸ் வாமி. (எழில்வேங்கடமலைமேல்) எல்லார்க்கும் ஸ்வாமியாயிருந்து வைத்து என்பக்கலிலே விசேஷ கடாக்ஷத்தைப்பண்ணின என்னு டையதான எழிலுடைய திருமலையிலே. (தம்பகமாய் நிற்கும் தவமுடையேனாவேனே) தம்பகமாய் நிற்கும் தவமுடையேனாவே னே. ஒரு ப்ரயோஜநத்துக் காகாதே அங்கே மூத்தற்றுத் தேய்ந்து போவதொரு ஸ்தாவரமாம் தவமுடையேனாவேனே. அநேக ஜந்ம தபஃபலமென் றிருக்கிறார்காணும் இது தன்னை. ... ... (ரு)

அ.—ஆறும்பாட்டு. ஸ்தாவரமானால் ஒருநாள் உண்டாய் ஒரு நாள் இன்றியே போமிறே; அங்ஙனன்றியே என்றுமொக்க வுண்டா யிருந்த திருமலையில் ஏகதேசமாக வேணும் நானென்கிறார்.

மின்னனைய நுண்ணிடையாருருப்பசியும்மேநகையும்
அன்னவர்தம்பாடலொடுமாடலவையாதரியேன்;
தென்னவெனவண்டினங்கள்பண்பாடும்வேங்கடத்துள்
அன்னனையபொற்குவடாமருந்தவத்தனாவேனே. (சு)

ப-ரை.—மின் அனைய - மின்போலே, நுண் - நுண்ணிய, இடையார்-இடை யை யுடையரான, உருப்பசியும் - ஊர்வசியையும், மேநகையும் அன்னவர்தம்- மேநகையையுமொத்த ஸ்த்ரீகளுடைய, ஆடலொடு- நர்த்தநமும், பாடலவை- பாட்டுமாகிற வவைகளை, ஆதரியேன் - விரும்பமாட்டேன்; வண்டினங்கள்- வண்டுக்கூட்டங்களானவை, தென்னவென - தெனதெனவென்று ஆளத்திவை த்து, பண்பாடும் - பண்களை பாடுகிற, வேங்கடத்துள் - திருமலையிலே, அன் னனைய - உபமானரஹிதமான, பொற்குவடாம் - பொன்மலையாயிருக்கத்தக்க, அருந்தவத்தனாவேனே - அரியதபஸ்ஸையுடையவனாக ஆவேனென்கிறார்.

வ்யா.—(மின்னனைய நுண்ணிடையா ரித்யாதி) மின்போலே நுண்ணிய இடையையுடையரான தேவஸ்த்ரீகளைப்போலே அழகிய ராயிருக்கிற ஸ்த்ரீகளுடைய ஆடல்பாடல்களில் எனக்கு ஆதரமில்லை. (தென்னவென வண்டினங்கள்பண்பாடும் வேங்கடத்துள்).“தென தென” என்று ஆளத்திவைத்து வண்டினங்கள் பண்பாடுகிற

திருமலையிலே. (அன்னனைய பொற்குவடாம் அருந்தவத்தனுவே னே) அப்படிப்பட்ட பொற்குவடென்னுமத்தனை, வேறு உபமான மில்லை. (அருந்தவத்த னுவேனே) திருவேங்கட முடையானுக் கவ் வருகிருக்கிலிறே; ஆகையாலே, "அருந்தவத்தன்" என்னக் குறை யில்லையிறே. ... ... ... ... ... ... (௬)

அ.—ஏழாம்பாட்டு. திருமலையில் அதிகாரமானுல் ஏறவல்லார் அநுபவித்து, மாட்டாதார்இழக்குமதா யிருக்குமிறே; அப்படியின் றியே, எல்லார்க்கும் அநுபவ யோக்யமாயிருக்குங்கானுறாக வேணும் நானென்கிறார்.

> வானாளும்மாமதிபோல்வெண்குடைக்கீழ்மன்னவர்தம்
> கோனுகிவீற்றிருந்துகொண்டாடுஞ்செல்வறியேன்;
> தேனார்பூஞ்சோலைத்திருவேங்கடமலைமேல்
> கானாறாய்ப்பாயுங்கருத்துடையனுவேனே. (௭)

ப-ரை.—வான் - ஆகாசப்பரப்பையெல்லாம், ஆளும் - ஆளுகிற, மா - பெருமைதங்கிய, மதிபோல் - சந்த்ரனையொத்த, வெண்குடைக்கீழ் - வெண்கொற்றக்குடைநிழலிலே, மன்னவர்தம்கோனுகி - ராஜாதிராஜனுய், வீற்றிருந்து - பெருமைதோன்ற விருந்து, கொண்டாடும் - எல்லாஜநங்களும் கொண்டாடத்தக்க, செல்வு - ஸம்பத்தை, அறியேன் - மநஸ்ஸாலும் ஒருபொருளாக நினைத்தறியேன்; தேன்ஆர் - தேன்மிக்கு, பூ - பூத்திருந்துள்ள, சோலை - சோலையையுடைய, திருவேங்கடமலைமேல் - திருமலையிலே, கானாறாய் - காட்டாறாய், பாயும் - நிலத்தில் சுவறவேணுமென்கிற, கருத்துடையனுவேன் - கருத்தையுடையவனு யிராநின்றேன்.

வ்யா.—(வானாளும் மாமதிபோல் வெண்குடைக்கீழ்)ஆகாசப் பரப்புக்கெல்லாம் சந்த்ரன் ஒருவனுமே யானுப்போலே, லோக மெல்லாம் தன் வெண்கொற்றக் குடைக்கீழே யொதுங்கும்படியாக. (மன்னவர்தம்கோனுகி) நக்ஷத்ரதாராகணங்கள் சந்த்ரனை ஸேவித் திருக்குமாப்போலே, ராஜாக்களெல்லாம் வந்து ஸேவித்திருக்கும் படி ராஜராஜனுய். (வீற்றிருந்து கொண்டாடுஞ் செல்வறியேன்) வேறுபட விருந்து கொண்டாடும் ஸம்பத்து எனக்கு ப்ரதிபத்தி விஷயமாயிருக்கிறதில்லை. (தேனார் பூஞ்சோலைத் திருவேங்கடமலை மேல்) தேன்மிக்கிருந்துள்ள சோலையையுடைய திருமலைமேல். (கானாறாய்ப்பாயுங் கருத்துடைய னுவேனே) ஸஹ்யம் பற்றின தாகில் கீழே போமிறே; அங்கே சுவறிப்போம் காட்டாறுக ளபிஸந் தியை யுடையே னுகவேணும். ... ... ... ... (௭)

> பிறையேறுசடையானும்பிரமனுமிந்திரனும்
> முறையாயபெருவேள்விக்குறைமுடிப்பான்மறையானுன்;
> வெறியார்தண்சோலைத்திருவேங்கடமலைமேல்
> நெறியாய்க்கிடக்கும்நிலையுடையேனுவேனே. (அ)

ப-ரை.—பிறையேறு - மூன்றாம்பிறையைதரித்த, சடையானும் - ஜடையை யுடைய ருத்ரனும், பிரமனும் - அவனுக்குத் தமப்பனான ப்ரஹ்மாவும், இந்திர னும் - இந்த்ரனும், முறையாய - தந்தாமுடைய அதிகாராநுகுணமாகப் பண் ணும், பெரு - ச்லாக்யமான, வேள்வி - யாகங்களினுடைய, குறைமுடிப்பான் - குறையைத்தீர்க்குமவனாய், மறையானான் - வேதப்ரதிபாத்யனான ஸர்வேச்வர னெழுந்தருளியிருக்கிற; வெறியார் - பரிமளம்மிக்கு, தண் - குளிர்ந்திருந்து ள்ள, சோலை - சோலைசூழ்ந்த, திருவேங்கடமலைமேல் - திருமலைமேலே, எப் போதும் ஸ்ரீவைஷ்ணவர்கள் பாதரேணுபடும்படி, நெறியாய்க்கிடக்கும் - வழி யாய்க்கிடக்கும், நிலையுடையனாவேனே - துணிவுடையனாவேனென்கிறார்.

வ்யா.—எட்டாம்பாட்டு. (பிறையேறுசடையானும்) ஸாதக வேஷம் தோற்றும்படி ஜடையோடே யிருக்கச்செய்தே ஸுகப்ர தாநனென்று தோற்றும்படி பிறையை தரித்துக்கொண்டிருக்கிறஹர னும். (பிரமனும்) அவனுக்குஜநகனானப்ரஹ்மாவும், "ஸ்ரஷ்டா:" "ஸே ந்த்ரா:" என்னும்படியான இந்த்ரனும். (முறையாயபெருவேள்விக் குறைமுடிப்பான்) தந்தாமுடைய அதிகாராநுகுணமாகப்பண்ணும் யஜ்ஞபலமான அதிகாரங்களைக் கொடுக்குமவன். (மறையானான்) ப்ர ஹ்மாதிகளுக்கு ஆஸ்ரயணீயமென்னும் வேதைகஸமதிகம்யனான வன். (வெறியார்தண்சோலைத்திருவேங்கடமலைமேல் நெறியாய்க் கிடக்கும்நிலையுடையனாவேனே) பரிமளம் மிக்குக் குளிர்த்தியையு டைய திருமலைமேலே; ஆறானால் ஒருக்கால் பெருகினால் விநியோக ப்பட்டு, வற்றினால் விநியோகப்படாதிறே; அங்ஙனன்றியே, எப் போது மொக்க வைஷ்ணவர்கள் ஸஞ்சரிக்கையாலே அவர்கள் பாதரேணு படும்படி வழியாய்க்கிடக்கும்துணிவுடையனாவேனே. "தொண்டரடிப்பொடியாடநாம்பெறில்" என்றிருக்குமவரிறே.(அ)

செடியாயவல்வினைகள்தீர்க்குந்திருமாலே!
நெடியானே!வேங்கடவா!நின்கோயிலின்வாசல்
அடியாரும்வானவருமரம்பையருங்கிடந்தியங்கும்
படியாய்க்கிடந்துன்பவளவாய்காண்பேனே. (௯)

ப-ரை.—செடியாய - பாபபலமான, வல்வினைகள் - ஸம்ஸாரஸம்பந்தத் தை, தீர்க்கும் - அறுக்குமவனாய், திருமாலே - ச்ரியஃபதியாய், நெடியானே- ஸர்வாதிகனாய், வேங்கடவா - திருமலையிலெழுந்தருளி யிருப்பவனே, நின்- தேவரீருடைய, கோயிலின் - கோயிலினுடைய, வாசல் - திருவாசலிலே, அடி யாரும் - சேஷபூதரும், வானவரும் - தேவதைகளும், அரம்பையரும் - ரம்பா ஸ்த்ரீகளும், கிடந்து - கூடி, இயங்கும் - ஸஞ்சரிக்கிற, படியாய்க்கிடந்து-படி யாகக்கிடந்து, உன் - தேவரீருடைய, பவளம் - பவளம்போன்ற, வாய் - திரு வதரத்தை, காண்பேன் - காணவேணுமென்கிறார்.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (செடியாயவல்வினைகள்தீர்க்கும்) தன்திருவடிகளிலே தலைசாய்த்தாருடைய பாபபலமான ஸம்ஸார

ஸம்பந்தத்தை அறுத்துக்கொடுக்குமவனுய்த்து. செடி-பாபம். (திருமாலே) அதுக்கு நிபந்தநம் கூடவிருந்து செய்விப்பாருண்டாகை. (நெடியானே) அவளாலும் "என்றும்பொறுக்கப்போகாது" என்ற போது "என்னடியாரதுசெய்யார்" என்று - ஆஶ்ரிதவிஷயத்திலோரம் எல்லைகாண வொண்ணாதவன். (வேங்கடவாநின்கோயிலின்வாசல்) தேவரீருடைய திருவாசலிலே. (அடியாரும்வானவரு மரம்பையரும்கிடந்தியங்கும் படியாய்க்கிடந்து) அநந்யப்ரயோஜநரும் ப்ரயோஜநாந்தரபரரும் அந்யபரருங்கிடந்து ஸஞ்சரியாநின்றால் ஒருநினைவற்று அசேதநவத் கிடக்கவேணும். (உன்பவளவாய் காண்பேனே) பாரதந்த்ர்யத்துக்கு அசேதநஸமாதியாகவும் வேணும், அதுபுருஷார்த்தமாகைக்குக் காணவும்வேணும். (கூ)

அ.—பத்தாம்பாட்டு. கிட்டுமளவும் வேண்டாவென்கிறீர், கிட்டினவாறே அநுபவிக்கிறீரென்ன; அவைகிட்டினும் வேண்டாவென்கிறார்.

உம்பருலகாண்டொருகுடைக்கீழுற்பசிதன்
அம்பொற்கலையல்குல்பெற்றாலுமாதரியேன்;
செம்பவளவாயான்றிருவேங்கடமென்னும்
எம்பெருமான்பொன்மலைமேலேதேனுமாவேனே. (கo)

ப-ரை.—உம்பர் உலகு - மேலுலகங்களையெல்லாம், ஒருகுடைக்கீழ் - தன்னுடைய ஓர்முத்துக்குடை நிழலின்கீழ, ஆண்டு - அரசுசெலுத்தி, உற்பசிதன் - ஊர்வசியுடைய, அம் - அழகிதாய், பொன்கலை - மேகலாபரணமணிந்த, அல்குல் - அல்குலை, பெற்றாலும் - லபித்தாலும், ஆதரியேன் - அவற்றை விரும்பமாட்டேன்; செம் - சிவந்த, பவளவாயான் - பவளம்போன்ற வாயையுடையனாய், எம்பெருமான் - என்நாதனுடைய, பொன் - ச்லாக்யமான, வேங்கடமென்னும் மலைமேல் - திருமலையிலே, ஏதேனும் ஆவேன் - யாதேனுமொரு பதார்த்தமாக ஆவேனென்கிறார்.

வ்யா.—(உம்பருலகாண் டொருகுடைக்கீழ்) உபரிதநலோகங்களெல்லாம் தன்னொருமுத்தின் குடைக்கீழே செலுத்தி. (உற்பசிதன் அம்பொற்கலையல்குல்பெற்றாலு மாதரியேன்) அவற்றைகிட்டுவித்தாலும் எனக்குஆதரம் பிறவாது. (செம்பவளவாயான்) உற்பசியைக்கண்டால் அநாதரிக்கும்படியாய்த்து உள்ளுநிற்கிற விஷயத்தின்படி. (திருவேங்கடமென்னும் எம்பெருமான்பொன்மலைமேல்) என்னையனுடைய மலைமேல். என்னையனுடைய ஶ்லாக்யமான திருமலையிலே. (ஏதேனுமாவேனே) அநந்தாழ்வான் இவ்விடத்துக்கு "திருவேங்கடமுடையான் றனகவுமமையும்" என்னும்; அதுக்கு பயமென்னென்னில்; ஶேஷபூதர் திரளுக்குப் புறம்பான ஶேஷியாகிலுமமையுமென்கை. அங்ஙனன்றிக்கே பட்டரருளிச்செய்யும்படி;-

"நாமறியவேண்டா, திருவேங்கடமுடையானு மறியவேண்டா, கண்டாருமறிந்து ஶ்லாகிக்கவும் வேண்டா, திருமலைமேலே யுள்ள தொரு பதார்த்தமாக வமையும்" என்பர். ... ... (க0)

மன்னியதண்சாரல்வடவேங்கடத்தான்றன்
பொன்னியலுஞ்சேவடிகள்காண்பான்புரிந்திறைஞ்சிக்
கொன்னவிலுங்கூர்வேல்குலசேகரன்சொன்ன
பன்னியநூல்தமிழ்வல்லார்பாங்காயபத்தர்களே. (கக)

ப-ரை.—கொல்நவிலும்-சத்ருக்களை நிரஸிக்கையையே தொழிலாகவுடைய, கூர் - கூரிய, வேல - வேலையுடையாரான, குலசேகரன் - ஸ்ரீகுலசேகரப்பெருமாள்; மன்னிய-மாறாத, தண் - குளிர்த்தி பொருந்திய, சாரல் - தாழ்வரையை யுடைய, வடவேங்கடத்தான்றன் - வடக்கத்திருமலையை யுடையவனுடைய, பொன் இயலும் - ஶ்லாக்யமாய், சேவடிகள் - செந்தாமரைமலரையொத்த திருவடிகளை, காண்பான் - ஸேவிக்கைக்காக, புரிந்து - ஆசைப்பட்டு, இறைஞ்சி - தலையாலேவணங்கி, சொன்ன - அருளிச்செய்ததாய், பன்னிய - பரம்பின, நூல் - லக்ஷணோபேதமான, தமிழ் - தமிழ்த்தொடையை, வல்லார் - வல்லவர்கள், பாங்காய - அவன்றிருவுள்ளத்துக்குப் பாங்கான, பத்தர்கள் - பக்தர்களாவரென்கிறார்.

வ்யா.—பதினோராம்பாட்டு. (மன்னியதண்சாரல்வடவேங்கடத்தான்றன் பொன்னியலுஞ்சேவடிகள் காண்பான்) கண்டால் கால் வாங்கமாட்டாதே பிணிப்படும்படி ஶ்ரமஹரமான பர்யந்தத்தை யுடைய தமிழுக்கெல்லையான திருமலையை யுடையவனுடைய ஶ்லாக்யமான திருவடிகளைக் காண்கைக்காக. (புரிந்திறைஞ்சி) காணவேண்டும்படி பக்தியையுடையராய்த் தலையாலே வணங்கிக் கவிபாடினராய்த்து. (கொன்னவிலுங்கூர்வேல் குலசேகரன்சொன்ன) ப்ரதிபக்ஷத்தைவெல்லவல்லர்போலேயாய்த்துக் கவிபாடிருக்கும்படியும். (பன்னியநூல்தமிழ்வல்லார்) பரம்பின லக்ஷணோபேதமான தமிழ்த்தொடையை வல்லவர்கள். (பாங்காயபத்தர்களே) இங்கேயிருந்து "அதுவரவேணும், இதுவரவேணும்" என்னாதே அவனுக்கு இஷ்டவிநியோகார்ஹமாவர்கள். ... ... ... ... (சக)

குலசேகராழ்வார் திருவடிகளே சரணம்.

---

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

ஊன் ஆனாத பின் ஒண் கம்பம் மின் வான் பிறை செடி உம்பர் மன்னிய தரு.

ஆ திருமொழி ச-க்கு பாட்டு-சக.

---

## அஞ்சாந்திருமொழி - தருதுயரம் - பரவேஶம்.

அ.—(தருதுயரம்) திருமந்த்ரத்தால் சொல்லிற்றாய்த்து அநந்யார்ஹஶேஷத்வமிறே;இந்த அநந்யார்ஹ ஶேஷத்வப்ரதிபத்திக்கு விரோதிதான் "நான் என்னது" என்றிருக்கும் அஹங்கார மமகாரமிறே; * அநாத்மந்யாத்மபுத்தியும் அஸ்வேஸ்வத்வ புத்தியுமிறே ஸம்ஸாரமாகிற வ்ருக்ஷத்துக்கு பீஜமென்று ப்ரமாணங்கள் சொல்லுகிறது; அது சேதநர்க்குப் பொதுவானதிறே. அப்படியன்றியே, ராஜாக்களாகையாலே அஹங்கார மமகார வஶ்யராயிறே யிருப்பது. "நிலா, தென்றல், சந்தநம்" என்று சொல்லுகிற இவை பரார்த்தமாகாதபோது ஸ்வரூபஸித்தியில்லை யாமிறே. அப்படியேயிறே பரார்த்தமானவஸ்துவுக்கும் அஹங்காரமமகாரத்தாலே ஸ்வரூபஸித்தி யழியுமிறே. இப்படி பரார்த்தமென்னும்படிக்கு ப்ரமாணமுண்டோவென்னில்; இவனை "[illegible]" "யஸ்யாஸ்மி" என்றும் ஓதி, "[illegible]" "பதிம்விஶ்வஸ்ய" என்றும் அவனை ஓதுகையாலே இவனொன்றுக்கும் கடவனல்லன்; உடையவனானவவன் எல்லாவற்றுக்கும் கடவனென்றதிறே. அப்படி ப்ரமாணங்களால் சொன்ன ஶேஷத்வப்ரதிபத்தியாவது - ததீயஶேஷத்வ பர்யந்தமான அநந்யார்ஹ ஶேஷத்வமிறே. அப்படி தமக்குப் பிறந்திருக்கச்செய்தே அது பலப்ரதமாகக்கண்டிலர்; தான் தன்கருமம் செய்கிறானென்றுதல்; நாம் க்ரமத்தால் செய்கிறோமென் றாறியிருந்தானாதல்; நம்முடையத்வரைக்கடியான ருசியுமறியு மவனாகையாலே ருசிபாகமானால் செய்கிறோமென்றுஆறியிருந்தானா மித்தனை. நம்மைப்போலன்றியே, செய்தது அறிந்திருக்கும் ஸர்வஜ்ஞனாகையும், நினைத்தது தலைக்கட்டவல்ல ஸர்வஶக்தியா யிருந்துவைத்து ஆறியிருக்கும்போது சிலஹேதுக்களுண்டாக வேணுமிறே என்று பார்த்து, எனக்கு நானுமில்லை,பிறருமில்லை,பேற்றில்த்வரையாலே துடிக்கிறேனித்தனையல்லது ஸாதநாநுஷ்டாந க்ஷமனுமல்லேனென்னுமிடத்தை அநந்யகதிகளா யிருக்கும் பதார்த்தங்களைநிதர்ஶநமாஇவிட்டுத் தம்முடைய அநந்யகதித்வத்தை திருவித்துவக்கோட்டுநாயனார் திருவடிகளிலே விண்ணப்பஞ்செய்கிறார். ... ... ...

தருதுயரந்தடாயேலுன்சரணல்லால்சரணில்லை;
விரைகுழுவுமலர்ப்பொழில்சூழ்வித்துவக்கோட்டம்மானே!;
அரிசினத்தாலீன்றதாயகற்றிடினும்மற்றவள்தன்
அருள்நினைந்தேயழுங்குழவியதுவேபோன்றிருந்தேனே.(க)

ப-ரை.—விரைகுழவு - பரிமளம்மிக்க, மலர் - மலர்களையுடைய, பொழில் சூழ் - பொழிலாலே சூழப்பட்ட, வித்துவக்கோடு - திருவித்துவக்கோட்டி

லெழுந்தருளியிருக்கிற, அம்மானே-ஸர்வேச்வரனே, தரு-நீயேதருகிற, துய ரம் - துக்கத்தை, தடாயேல் - நீயேபோக்காயாகில், உன்சரணல்லால் - தேவ ரீர்திருவடிகளே உபாயமல்லது, சரண் இல்லை-வேறேஉபாயமில்லை; ஈன்றதாய்- பெற்றதாயாரானவள், அரி-அரிந்து பொகடவேண்டும், சினத்தால்- கோபத்தா லே, அகற்றிடினும் - தள்ளிவிட்டாலும், அவள் தன் - அந்தத்தாயாருடைய, அருள் - அருளையே, நினைந்து - நினைத்துக்கொண்டு, அழும் - அவன்காலைக்கட் டிக்கொண்டழுகிற, குழவியதுவேபோன்று இருந்தேன் - குழந்தையையொத் திருந்தேனென்கிறார்.

வ்யா.—முதற்பாட்டு. (தருதுயரந் தடாயேல்) நீயே தருகிற துக்கத்தை நீயே மாற்றாயாகில். தன்னாலே தனக்கு விரோதிவந்த தென்றும் தானே ஸாதநாநுஷ்டாநத்தாலே அதுபோக்கிக்கொள்வா னென்றும் ஶாஸ்த்ரங்கள் சொல்லிக் கிடக்கச்செய்தே, இவர் அவ னே துயர்தந்தானென்பானென்னென்னில்; ப்ராப்தா ப்ராப்த விவே கம்பண்ணி யிருப்பாரொருவ ராகையாலே சொல்லுகிறார். தானே கர்மம் பண்ணினவன் தானே ஸாதநாநுஷ்டாநம்பண்ணித் தவிர்த் துக் கொள்ளுகிறானென்று நம்மைப் பழியிட்டுத் தள்ள நினைத்தா னாகிலும் நானும் தன்னைக் குறித்து பரதந்த்ரன், நான்செய்த கர்ம மும் பரதந்த்ரம், நான் பண்ணும் ஸாதநாநுஷ்டாநத்துக்கு பல ப்ரதன் தானாகையாலே அதுவுந் தன்னைக் குறித்துப் பரதந்த்ரமா கையாலே (தருதுயரம்) என்கிறார். முதலிகளெல்லாருங் கூடப் பெரிய திருமண்டபத்துக்குக் கிழாகவிருந்து ரஹஸ்யார்த்தங்கள் விசாரித்து எழுந்திருப்பார்களாய்த்து; ஒருநாள், நித்யஸம்ஸாரியாய்ப் போந்தவனுக்கு பகவத்விஷயத்தில் ருசி பிறக்கைக் கடியென்னென் று விசாரிக்கச்செய்தே, யாத்ர்ச்சிக ஸுக்ர்தமென்ன, அஜ்ஞாத ஸுக்ர்தமென்னப் பிறந்தது; அவ்வளவில் கிடாம்பிப் பெருமா ளிருந்தவன் நமக்கு பகவத்ஸமாஶ்ரயணம்போலே ஸுக்ர்ததேவ தையொன்றொருவருண்டோ ஆஶ்ரயணீயன் என்றான்; பிள்ளை திருநறை யூரரையர், ஸுக்ர்தமென்று சொல்லுகிற நீர் தாம் நினைத்திருக்கிறது எத்தைக்காணென்றார். அதாவது—ஒன்றை ஆராயப்புக்கால் அதுக் கவ்வருகு வேறொன்றின்றியிருப்பதிறே - அடியாவது; யாதொன்று பல ப்ரதமானதிறே உபாயமாவது; அல்லது நடுவே அநேகாவ ஸ்தை பிறந்தால் அவற்றினளவில் பர்யவஸியாதிறே. இளைப்பாறு வது இதிலே சென்றிறே; நடுவு இளைப்பாறுதிறே; * தருதுயரமென் னலாமிறே.

(தடாயேல்) நீ விளைத்த துக்கம் நீயே போக்காயாகில். "𑌮𑌮 𑌮𑌾𑌯𑌾 𑌦𑍁𑌰𑌤𑍍𑌯𑌯𑌾" "மமமாயாதுரத்யயா" என்றும், "𑌮𑌾𑌮𑍇𑌵 𑌯𑍇 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌮𑌾𑌯𑌾𑌮𑍇𑌤𑌾𑌂 𑌤𑌰𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇" "மாமேவயேப்ரபத்யந்தே மாயாமேதாந் தரந்திதே" என்றும் - நம்முடைய மாயை யொருவரால் கடக்க

வொண்ணாதுகாணென்றும், இது கடக்கவேண்டியிருந்தவன் நம்மை ப்பற்றிக் கழித்துக் கொள்வானென்றும் நீயே சொல்லி வைக்கையா லே நீயே துயர்தந்தா யென்னும்படி தோற்றப்படுகிறதிறே. துக்க த்தை விளைப்பானொருவனும் போக்குவானொருவனு மாயன்றிறே யிருப்பது. பண்ணினவன்றானே போக்கு மித்தனையிறே. பிள்ளை திருநறையூரரையர், "ஒரு குருவி பிணைத்த பிணையல் ஒருவரால் அவிழ்க்க வொண்கிறதில்லை; ஒரு ஸர்வஶக்தி பிணைத்த பிணையை எலியெலும்பனானவிவன் அவிழ்க்கவென்று ஒருகார்ய மில்லையிறே; அவன் றன்னையே கால்கட்டிப் போக்கு மித்தனையிறே" என்றார். (உன் சரணல்லால் சரணில்லை) இவ்வளவாக விளைத்துக்கொண்ட நான் எனக்கில்லை; பிறர் ரக்ஷகருண்டாகிலும் நான் அவர்களை ரக்ஷக ராகக்கொள்ள மாட்டாமையாலே அவர்களுமில்லை; நான் பண்ணும் ஸாதநாநுஷ்டாநமும் எனக்குக் கழுத்துக் கட்டியாகையாலே தேவ ரீர்திருவடிகளல்லது வேறுபாயமில்லை.

(விரைகுழுவு மலர்ப்பொழில்சூழ் வித்துவக்கோட் டம்மானே) பரிமளப்ரசுரமான சோலையை யுடைத்தான திருவித்துவக்கோட் டிலே எழுந்தருளியிருக்கிற ஸர்வேஶ்வரனே. (விரைகுழுவுமலர்ப் பொழில்சூழ்) "ஸர்வகந்தஃ" "ஸர்வகந்தஃ" என்கிற ப்ராப்யவஸ்து வந்துகிட்டின விடமென்று தோற்றியிருக்குமாய்த்து. (வித்துவக் கோட்டம்மானே) உபாயமாம்போது ஸுலபமாக வேணுமிறே. (அம்மானே) ப்ரஜை உறங்குகிறதொட்டிற்கீழே கிடக்கும்தாயைப் போலே இங்கேவந்து கிட்டினவனே. தம்முடைய பாரதந்த்ர்யத் தாலே தம்முடைய ரக்ஷணத்துக்கு தமக்கு ஆனவையும் சொன் ஞர்; ஶேஷியாகையாலே தம்முடைய ரக்ஷணத்துக்கு ப்ராப்தன் அவனென்கிறார் - இப்போது; ஒருவன்பேற்றுக்கு ஒருவன் ஸாதந மாம்போது இத்தனைப்ராப்தி யுண்டானாலல்லது ஆகாதிறே. ப்ரஜை யுடைய நோய்க்குத்தாயிறே குடிநீர்குடிப்பாள். மேல் தாயை நிதர் ஶநமாகச்சொல்லப் புகுகிறவராகையாலே இப்போது "அம்மானே" என்று ப்ராப்திதோன்றச் சொல்லுகிறார்.

(அரிசினத்தாலீத்யாதி) அவனே ரக்ஷகனென்னும் அத்ய வஸாய முண்டானாலும் பேறுதாழ்த்தால் அவனைவெறுக்கவேண்டும் ப்ராப்தியுண்டிறே சேதநனாகையாலே. "தனக்கேயாகவெனைக்கொ ள்ளுமீதே" என்று-அசித்ஸமாநமாக பாரதந்த்ர்யத்தைச் சொல்லி வைத்து, "எனக்கேகண்ணனை யான்கொள்சிறப்பு" என்கிறது புரு ஷார்த்தஸித்தி சேதநனுக்கு ஆகவேண்டியிறே. அவனைக்குறித்து சேதநாசேதநங்க ளிரண்டுக்கும் பாரதந்த்ர்யம் அவிஶிஷ்டமாயி ருக்கச்செய்தே புருஷார்த்தஸித்தி இவனுக்குண்டாகிறது சேதந

ளுகையாலே யிறே. (அரிசினத்தால்) அரிந்துபோகவேண்டுஞ் சின த்தையுடையளாய்க் கொண்டு. (ஈன்றதாய்) "வளர்த்ததாய்" என் ளுதே "ஈன்றதாய்" என்றத்தாலே-ப்ராப்தம்சொல்லிற்று. (அகற் றிடினும்) "அகற்றிடினும்" என்கையாலே - அகற்றுகை அஸம்பா விதமென்கிறது. "ஈன்றதாய்"என்கையாலே-பெறுகைக்குநோன்பு நோற்கையும் பத்துமாஸம் சுமக்கையும் ப்ரஸவவேதனை படுகை யுமென்கிற இவையெல்லா முடையவளென்கை. (அகற்றிடினும்) இப்படி பெறுவதுக்குமுன்புள்ள வெல்லாதுக்கமும் பட்டவளாகை யாலே வருகிறத்தை நினைக்குமதொழிய அகற்ற நினையாளிறே; அவள்தானே அகலவிடிலும்.'இத்தால்சொல்லிற்றாய்த்து-திருபாதிக தேவரீர் கைவிடிலும் வேறெனக்குப் புகலில்லை யென்கிறார் (மற்ற வள்தன் அருள் நினைந்தேயழுங்குழவி) இவள் கோபித்து விட்டா லும் வேறொருவருடைய அருளை அபேக்ஷியாதிறே ப்ரஜை. அதுக்க டியானப்ரேமத்துக்கவதியுண்டாகிலிறேகோபத்துக் கவதியுள்ளது; ஸ்நேஹமில்லாமையாலேகோபமில்லையிறே பிறர்க்கு;-நம்பிதிருவழு தி வளநாடுதாஸரை முதலியாண்டான் கோபித்து,கையாலுங்காலா லுந்துகைத்து இழுத்தவாறேதிண்ணையிலே பட்டினியே யொரு நாள் போகாதே கிடந்தார்; ஆண்டான் மற்றைநாள் அமுதுசெய் யப்புகுகிறார்;"அவன் செய்ததென்" என்று கேட்டவாறே, "பட் டினியே வாசலிலே கிடந்தான்" என்று கேட்டு அழைத்து, "நீ போகாதே கிடந்ததென்" என்ன; "ஒருநாள் ஒருபிடி சோறிட்ட வன் எல்லாப்படியாலும் நிந்தித்தாலும் வாசல்விட்டுப்போகிறதில் லை, நாத!நானெங்கேபோவது"என்றார்.(அழுங்குழவியதுவேபோ ன்றிருந்தேனே) வேறுசிலரால்ஆற்றவொண்ணாதிறே; முன்னாள்மு லைகொடுத்தவுபகாரத்தைநினைத்திருக்குமதாகையாலேஅவள்தானே ஆற்றவேணுமே. "ஶிஶுஸ்ஸ்தந்யஃ" "ஶிஶு-ஸ்ஸ்தநந்தயஃ", "அளவில் பிள்ளைமை" என்று சொல்லுகிறபடியே. அதாவது - ரக்தஸ்பர்ஶ முடையாரெல்லாரையு மறியாதே மாதா வொருத்தியையு மறியு மளவேயாய்த்து அதிபால்யம்; அப்படியே எம்பெருமானைக்குறித்து இவ்வாத்மவஸ்து நித்ய ஸ்தநந்தயமாயாய்த்திருப்பது. ஆகையா லிறே இவன் பேற்றுக்கு அவன் உபாயமாகிறது. ... ...

கண்டாரிகழ்வனவேகாதலன்றான்செய்திடினும்
கொண்டானையல்லாலறியாக்குலமகள்போல்;
விண்டோய்மதிள்புடைசூழ்வித்துவக்கோட்டம்மாநீ
கொண்டாளாயாகிலுமுன்குரைகழலேகூறுவனே. (உ)

ப-ரை.—கண்டார் - பார்த்தவர்களெல்லாரும், இகழ்வனவே-இகழத்தக்க கார்யங்களையே, காதலன்றான் - தன்கணவனானவன், செய்திடினும் - செய்

தாலும், கொண்டானையல்லால் - தன்னைக்கல்யாணம் செய்துகொண்ட புருஷனையொழிய, அறியா - வேறொருபுருஷனை மநஸ்ஸாலும் நினைத்தறியாத, குலமகள்போல் - பதிவ்ரதையைப்போலே; விண் - ஆகாசத்தை, தோய்-அளாவிய, மதிள் - திருமதிள்கள், புடைசூழ் - நாற்புறமும் சூழப்பட்டிருப்பதான, வித்துவக்கோட்டம்மா—, நீ - தேவரீர், கொண்டு - அடியேனை சேஷபூதனாகக் கொண்டு, ஆளாயாகிலும் - அடிமைகொள்ளாவிட்டாலும், உன்-உன்னுடைய, குரைசப்தியாநின்றுள்ள, கழலே-வீரக்கழலணிந்த திருவடிகளையே, கூறுவன் ஸ்துதிப்பேனென்கிறார்.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (கண்டாரிகழ்வனவே காதலன் றான்செய்திடினும்) தானும் அவனுமறிந்ததாகப்பிறக்கும் ப்ரணய கலஹங்களுக்கும் பரிஹாரங்களுக்கும் ஓரவதியில்லையிறே. அப்படியன்றியே, இவர்கள் கார்யங்கொண்டுகார்யமில்லாத உதாஸீநரும் இகழும்படிக்கீடான அஸஹ்யங்களை அவன்பண்ணினாலும். (காதலன்) ப்ரேமத்தை யிட்டு நிரூபிக்கவேண்டி யிருக்குமவன். (கொண்டானையல்லாலறியாக்குலமகள்போல்) இவ்வருகு அவன்பண்ணும் அபகாரங்களைக் காற்கடைக்கொண்டு ஸம்பந்தத்தில் முதலடியிலே நினைத்திருக்குமவளைப்போலே. (கொண்டானையல்லா லறியாக் குலமகள்போல்)அக்நிக்கு அந்தர்யாமியான ஸர்வேஶ்வரனைஸாக்ஷியாகக்கொண்டவனையல்ல தறியாதவளைப்போலே. “கொண்டானை யல்லாலறியா” என்கையாலே - பாதிவ்ரத்யஞ் சொல்லிற்று; “குலமகள்” என்கையாலே - ஆபிஜாத்யம் சொல்லிற்று. (விண்டோய்மதிள் புடைசூழ் வித்துவக்கோட்டம்மா) பிராட்டிஸ்வயம்வரத்துக்கு ஸ்ரீமிதிலையில் புறச்சோலையிலே விட்டிருந்தாப்போலே, இவரை ஸ்வயம்வரிக்கைக்காகவிறே திருவித்துவக் கோட்டிலே நிற்கிறது. (நீகொண்டாளாயாகிலும்) இவ்வளவாக உபகாரகனான நீ குறையுந் தலைக்கட்டாதே உபேக்ஷித்தாலும். (உன்குரைகழலே கூறுவனே) உன்திருவடிகளல்லது எனக்கு வேறு புகலில்லை. உபகாரகனான நீ உபேக்ஷித்தாயென்று கைவாங்குமவனன்றுநான்; “எனதாவியார்? யானார்?” என்று-நீபண்ணின உபகாரத்துக்குத் தலைசீய்க்குமவன் நானென்கிறார். ... ... ... ... உ

மீனோக்குநீள்வயல்சூழ்வித்துவக்கோட்டம்மா!என்
பால்நோக்காயாகிலுமுன்பற்றல்லால்பற்றிலேன்;
தானோக்காதெத்துயரஞ்செய்திடினுந்தார்வேந்தன்
கோல்நோக்கிவாழுங்குடிபோன்றிருந்தேனே. (௩)

ப-ரை.—மீன் - பலவகைப்பட்ட மத்ஸ்யங்களும், நோக்கும்-நித்யவாஸம் பண்ணத்தேடுகிற, நீள் - ஜலஸம்ருத்தியையுடைய, வயல்சூழ் - வயலாலே சூழப்பட்ட, வித்துவக்கோட்டம்மா—, என்பால் - என்விஷயத்தில், நோக்காயாகிலும் - கடாக்ஷியாதிருந்தாயேயாகிலும், உன்பற்றல்லால்-உன்னைத்தஞ்சமாகப்

பற்றுகையொழிய, பற்றிலேன்-வேறொருவரைத் துணையாகப் பற்றமாட்டேன்; தார் - ரக்ஷணத்திலே தீக்ஷித்துத் தனிமாலையிட்டிருக்கிற, வேந்தன்றன் - ராஜாவானவன், நோக்காது - ப்ரஜைகளை ரக்ஷியாமல், எத்துயரம் செய்திடினும்-எவ்வகைப்பட்ட துன்பங்களைச் செய்தாலும், கோல்நோக்கி - அவனுடைய ஆஜ்ஞையைப் பின்சென்று, வாழும் - வர்த்திக்கிற, குடிபோன்றிருந்தேன்-குடிகளைப்போ லிருந்தேனென்கிறார்.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (மீன்நோக்கும்நீள்வயல்சூழ்) மத்ஸ்யமென்று பேர்பெற்றவையடையக் கடாக்ஷிக்கும் தேசமாய்த்து. கடலில்மத்ஸ்யம், "கடல்வற்றினால் நமக்குப்புகலிடம்" என்றுநினைத்திருக்கும்தேசமாய்த்து. (வித்துவக்கோட்டம்மா) பரமபதத்திலுள்ளாரும்ஶீலகுணமநுபவிக்கும் தேசமாய்த்து. உத்கர்ஷம் தர்மிப்ரயுக்தமென்று ப்ரமாணத்தாலே நாம் கேட்டறியுமாப்போலே ஶீலாதிகள் தர்மிப்ரயுக்தமென்றிருக்கு மித்தனையிறே பரமபதத்தில்; கண்டநுபவிக்கலாவது இங்கேயிறே. (வித்துவக்கோட்டம்மாஎன்பால் நோக்காயாகிலும்) பரமபதமாகிற வொருநாடாக நீ நோக்குகிற நோக்கை என்னையொருவனையுமேநோக்கிவந்து இப்போது என்னைக் கடாக்ஷியாதிருந்தாயாகிலும். (உன்பற்றல்லால் பற்றிலேன்) என்னுடையரக்ஷையி லுத்யுக்தனானவுன்னைவிட்டு பாதகராகஸம்ப்ரதிபந்நரானாரைப் பற்றுவேனோ. நித்யஸம்ஸாரியாய் இவ்வளவாகச் சூழ்த்துக்கொண்ட வென்னைப்பற்றவோ; என்னுடைய ரக்ஷணத்தில் என்னோபாதியும் ப்ராப்தியில்லாத பிறரைப்பற்றவோ. (தான் நோக்காதெத்துயரஞ் செய்திடினும்தார்வேந்தன்) ப்ரஜைகளுடைய ரக்ஷணத்திலே தீக்ஷித்துத் தனிமாலையிட்டிருக்கிற ராஜாவானவன், ரக்ஷணத்திலே நெகிழநிற்குமளவன்றிக்கே, எல்லா துக்கங்களையும் விளைக்கிலும். (தார்வேந்தன்கோல்நோக்கி வாழுங்குடிபோன்றிருந்தேனே) ரக்ஷகனாயிருந்துவைத்து பாதகனானாலும் அவனுடைய ஆஜ்ஞாநுவர்த்தநம் பண்ணுங்குடிபோலே யிருந்தேன். சிறியத்தைப்பெரியதுதின்னாமல் காக்கத்தான்மாட்டான்; செங்கற்சீரைகட்டி ரக்ஷிப்பித்துக்கொள்ளும் முறை அவனுக்குண்டு; என்ரக்ஷணத்தில் எனக்குஅந்வய மில்லாதாப்போலே, ஸம்பந்தமுடைய நீயே ரக்ஷிக்குமித்தனை. நான் செய்யலாவதுமில்லை, நீ மாட்டாததுமில்லை. (ங)

அ.—நாலாம்பாட்டு. "ஒருவனாலேஹிதம்" என்றும், "பலத்திலே அந்வயம் ஒருதலைக்கே" என்றும் அத்யவஸித்தால், ஹிதங்களையே ப்ரவர்த்தியா நின்றானென்று தோற்றினாலும், அவனே ரக்ஷகனென்று கிடக்கவிறே கடவது. பிள்ளை திருநறையூரரையரை, பிள்ளைகள் "புகைசூழ்ந்தபடி ஸஹிக்கப்போகிறதில்லை" என்ன; "சற்றுப்போதன்றோ வ்யஸநப்படுவது, ஸ்ரீவைகுண்டநாதன் திருவடிகளிலே ஸுகமேயிருக்கவன்றோ புகுகிறது" என்றாரிறே. தான் தஞ்சமாக

ப் பற்றினவிஷயத்துக்கு அந்யதாஸித்தி பிறந்ததோவென்று மீளு ம்படி யிருக்கிற தசையிலே,ஹேத்வந்தரமது அவ்வருகில் பேற்றில் குறையில்லையென்னும் அத்யவஸாய மிருந்தபடியிறே; இதிலே மஹாவிச்வாஸமாகிறது - தோற்றுகிற ஆபாதப்ரதீதியைக்கண்டு மீளாதே யிருக்குமதிறே.

வாளாலறுத்துச்சுடினும்மருத்துவன்பால்
மாளாதகாதல்நோயாளன்போல்;மாயத்தால்
மீளாத்துயர்தரினும்வித்துவக்கோட்டம்மா!நீ
ஆளாவுனதருளேபார்ப்பனடியேனே. (ச)

ப-ரை.—வாளால்-கத்தியாலே, அறுத்து—, சுடினும்-ஊசியைக்காய்ச்சி ச்சுட்டாலும், மருத்துவன்பால் - வைத்யனிடத்தில், மாளாதகாதல் - நீங் காத ப்ரேமத்தையுடைய, நோயாளன்போல் - நோயாளியைப்போலே; வித் துவக்கோடு-திருவித்துவக்கோட்டிலெழுந்தருளியிருக்கிற,அம்மா-ஸர்வஸ்வாமி யான, நீ—, மாயத்தால் - உன்மாயையாலே, மீளா - ஒருக்காலும் நீங்காத, துயர்தரினும்- துக்கத்தைவிளைத்தாலும், அடியேன் - சேஷபூதனான நான், ஆளா - அடிமைசெய்கைக்காக, உனதருளே - உன்னுடைய க்ருபையையே, பா ர்ப்பன் - புத்திபண்ணியிருப்பேனென்கிறார்.

வ்யா.—(வாளாலறுத்துச்சுடினும்) ஹிம்ஸகர், ஸாதநத்தைக் கொண்டு அறுப்பது சுடுவதானாலும். (மருத்துவன்பால்மாளாத காதல்நோயாளன்போல்) அஹிதங்களை மேல்மேலனை ப்ரவர்த்திப் பிக்கச்செய்தேயும் பிஷக்கு, "அவன் நமக்கு ஹிதகாமன்" என்று அவனுக்குத் தன் ஸர்வஸ்வத்தையுங் கொடுத்து அவன்பக்கலி லே ஸ்நேஹத்தைப்பண்ணும் வ்யாதியாளனைப்போலே. (மாயத் தால் மீளாத்துயர்தரினும்) "மமமாயா" "மமமாயா" என்னும் படியே உன்னுடையதான ப்ரக்ருதி ஸம்பந்தத்தாலே அபுநராவ ர்த்தி லக்ஷணமே துக்கத்தை விளைக்கினும். (வித்துவக்கோட்டம் மாநீ - மீளாத்துயர்தரினும்) எனக்கு த்யாஜ்யமான ஸம்ஸாரத்தி லே என்னுடைய ரக்ஷணத்துக்காகக் குடியேறியிருக்கிற நீ நித்ய துக்கத்தை விளைக்கினும். பெற்றதாய் ப்ரஜைக்கு அஹிதஞ்செய்யா ளிறே நீசெய்வது; அப்படியிருக்கிற நீ செய்யினும். (ஆளா) ஸ்வ ரூபாநுரூபமான வ்ருத்தியைப் பெறுகைக்காக. (உனதருளேபார்ப் பன்) இப்போது தோற்றுகிற வ்யஸநங்களை புத்திபண்ணாதே உன் க்ருபையையே புத்திபண்ணியிருப்பன். இப்படியிருக்கைக்குநிபந்தந மென்னென்னில்; அடியேனாகையாலே. என்ஸ்வரூபத்தையும் உன் ஸ்வரூபத்தையும் நேராக வறிந்தவனாகையாலே. அன்றுகண்டாப் போலே கையும்வில்லுமாய் நிற்பன்; அவனுக்குஅச்சத்தாலே, தன க்குஉருவுவெளிப்பாட்டாலே முன்னேநிற்பர்;தீரக்கழிய அபராதஞ்

செய்த வெனக்கு அவர் க்ர்பைபண்ணுவரோ வென்று அவனுக்கு நினைவாகக்கொண்டு; [புருஷர்ஷப:-புருஷர்ஷப:] நீ அநுகூலனாய் ஓரடி வரநின்றால் அத்தையே நினைத்து நீ பண்ணின அப்காரமெல்லாம் புத்திபண்ணுவரோ. அவர் புருஷோத்தமன்காண். [முன்பூழிகாணுன்] குற்றத்தைமறக்கும்; அன்றியே, "குற்றம்செய்தநாளைநினைக்கில் குற்றந்தோற்றுமென்று அந்நாளையும்மறக்குமவர்காண்" என்றுபிராட்டி ராவணனுக் கருளிச்செய்தபடியே இனி நீரல்லாது புகலில்லையென்கிறார். ... ... ... ... ... ... ... (௪)

வெங்கட்டிண்களிறடர்த்தாய்!வித்துவக்கோட்டம்மானே!
எங்குப்போயுய்கேனுன்னிணையடியேயடையலலால் ;
எங்கும்போய்க்கரைகாணுதெறிகடல்வாய்மீண்டேயும்
வங்கத்தின்கூம்பேறுமாப்பறவைபோன்றேனே. (௫)

ப.ரை.—வெம் - வெவ்விய, கண் - கண்ணையும், திண் - திண்ணியநெஞ்சையுமுடைத்தான, களிறு - குவலயாபீடத்தை, அடர்த்தாய் - கொன்றவனே, வித்துவக்கோட்டம்மானே—, உன் - உன்னுடைய, இணையடியே - திருவடிகளை, அடையலலால் - தஞ்சமாமதொழிய, எங்குப்போய் - வேறுயாரிடத்திலேபோய், உய்கேன் - உஜ்ஜீவிக்கப்போகிறேன்; எங்கும்போய் - நாலுதிக்கிலும் போய்ப்பார்த்து, கரைகாணுத - கரைகாணுமையாலே, எறி - அலையெறிகிற, கடல்வாய் - ஸமுத்ரத்திலே, மீண்டு - திரும்பிவந்து, ஏயும் - அங்குவாத்தக்கிற, வங்கத்தின - கப்பலினுடைய, கூம்பஏறு - சம்பத்தில் ஏறியிற்கிற, மா - பெரிய, பறவைபோன்றேன - பக்ஷியை யொத்திருந்தே னென்கிறார்.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (வெங்கட்டிண்களிறடர்த்தாய்) வெவ்வியகண்ணையும் திண்ணியநெஞ்சையு முடைத்தான குவலயாபீடத்தைக் கொன்றவனே. ப்ரபலப்ரதிபந்தகங்களுண்டென் றிருக்கவேணுமோ தேவரீருள்ளீராயிருக்க. (வித்துவக்கோட்டம்மானே) ப்ரதிபந்தகம் போக்கிற்று அவதாரகாலத்திலேயிறே; அது தீர்த்தம் ப்ரஸாதித்ததிறேயென்று பிற்பாடர்க்கு இழக்கவேண்டாதபடி திருவித்துவக்கோட்டிலே வந்து ஸந்நிஹிதனானவனே. பரமபதம் கலவிருக்கையாக ஸ்வாம்யத்வத்தை நிர்வஹிக்கைக்காகவன்றோ இங்கு வந் தெழுந்தருளியிருக்கிறது. (வித்துவக்கோட்டம்மானே எங்குப்போயுய்கேன்) ப்ராப்தனுமாய்ப் பசியனுமானவன் வாசலிலேவந்து "சோறுசோறு" என்னுநிற்க, அந்யராய் நிரபேக்ஷரானவர்களை யுண்ண .வழைப்பாரைப்போலே, உன்னைவிட்டு பரமபதத்திலேயிருக்கிற அவாப்த ஸமஸ்த காமனைப்பற்றவோ. (எங்குப்போயுய்கேன்) உஜ்ஜீவநஹேதுவாகப் போமிடமில்லை, விநாஶஹேதுவாகப் போகில் போமித்தனையிறே. உகந்தருளின தேஶங்களைவிட்டு தேவதாந்தரங்களைப் பற்றுகையாவது - விநாஶபர்யாயமிறே. (உன்னிணையடியே

அடையலலால்) அத்யவஸாயமாவது-புத்யர்த்தமிறே. அவன் றானே வந்து கிட்டச்செய்தே, இழக்கிறார் இழக்கிறதும் பெறுகிறார் பெறுகிறதும்-அப்ரதிபத்தியாலும் விப்ரதிபத்தியாலுமிறே. (எறிகடலித்யாதி) பெரிய க்ஷோபத்தையுடைய கடலிலே ஒரு மரக்கலமாவது, அதின்கொம்பிலே யிருந்ததொருபக்ஷி நாலுதிக்கிலும் போக்கிடந்தேடிப்பறந்தாலும் கரைகாணவொண்ணாதிறே; மீண்டுவந்துகால்பாவலாவதுஇம்மரக்கலத்திலேயிறே. அப்படியேஸம்ஸாரஸாகரத்தைக் கடக்கும்போது உகந்தருளினதேஶமான திருவித்துவக்கோட்டைப்பற்றிக் கடக்கலா மத்தனையல்லது வேறுபாயமில்லையிறே. கடக்கைக்கு உகந்தருளின தேஶத்தை யொழிந்ததெல்லாம் அக்கடல் போலேயிறே. (மாப்பறவைபோன்றேனே) தானேவிட்டுக்கொண்ட அகலமெல்லாம் நீரிலே ஆழுகைக்குடலா மித்தனையிறே; அவன் கை நெகிழ்ந்தானென்றுதோற்ற அடிமட்டையை யுரக்கப்பற்று மித்தனையிறே. ... ... ... ... ... ... (௫)

செந்தழலேவந்தழலைச்செய்திடினுஞ்செங்கமலம்
அந்தரஞ்சேர்வெங்கதிரோற்கல்லாலலராவால்;
வெந்துயர்வீட்டாவிடினும்வித்துவக்கோட்டம்மா!உன்
அந்தமில்சீர்க்கல்லாலகங்குழையமாட்டேனே. (௬)

ப-ரை.—செம் - சிவந்த, தழல் - நெருப்பானது, வந்து - கிட்டி, அழலைச் செய்திடினும் - உஷ்ணத்தைப் பண்ணினாலும், செம் - அழகிய, கமலம் - தாமரைகளானவை, அந்தரஞ்சேர் - ஆகாசத்திலே வர்த்திக்கிற வெங்கதிரோற்கல்லால் - ஸூர்யனுடைய உஷ்ணத்துக்கல்லது, அலரா - மலராவாம்; வித்துவக்கோட்டம்மா—, வெந்துயர் - என்னுடைய க்ரூரமான துஃகத்தை, வீட்டாவிடினும்-நீபோக்காவிட்டாலும், உன் - உன்னுடைய, அந்தமில்-அளவில்லாத, சீர்க்கல்லால் - கல்யாணகுணங்களுக்கல்லது, அகம்குழையமாட்டேன் - என்னெஞ்சு களிப்புறா தென்கிறார்.

வ்யா.—ஆறாம்பாட்டு. (செந்தழலேவந்தழலைச்செய்திடினும்) தாஹகமான அக்நிகிட்டி உஷ்ணத்தைப் பண்ணினாலும். (செங்கமலமித்யாதி) தாமரையானது ஆதித்யன் தூரஸ்தனானானே யாகிலும் அவனுடைய கிரணத்துக்கு அலருமத்தனையல்லது அக்நிகிட்டிற்றென்று அதினுடையஉஷ்ணத்துக்கு அலராது. (வெந்துயர்வீட்டாவிடினும் வித்துவக்கோட்டம்மா) அநுபவவிநாஶ்யமானபாபங்களைப்போக்கி அதுக்கு விகாஸத்தை விளைப்பிக்க வந்திருக்கிற நீ உபேக்ஷித்தாயாகிலும். (உன்னந்தமில் சீர்க்கல்லால்) கல்யாணயுக்தமான வுன்குணங்களுக்கல்லது. (அகங்குழையமாட்டேனே) என்னெஞ்சு நெகிழாது. ... ... ... ... ... (௬)

எத்தனையும்வான்மறந்தகாலத்தும்பைங்கூழ்கள்
மைத்தெழுந்தமாமுகிலேபார்த்திருக்கும்;மற்றவைபோல்,
மெய்த்துயர்வீட்டாவிடினும்வித்துவக்கோட்டம்மா!என்
சித்தமிகவுன்பாலேவைப்பனடியேனே. (எ)

ப-ரை.—பை - இளமைதங்கிய, கூழ்கள் - பயிர்களானவை, வான் - மேகமானது, எத்தனைமறந்தகாலத்தும் – பெய்யாதேமிகவும் மறந்தகாலத்திலும், மைத்து - கறுத்து, எழுந்த - ஆகாசத்திலேயெழுகிற, மாமுகிலே - பெரியமேகங்களையே, பார்த்திருக்கும் - பார்த்தவண்ணமாயிருக்கும், அவைபோல் - அப்பயிர்களைப்போலே; வித்துவக்கோட்டம்மா—, மெய்த்துயர் - அநுபவித்தேகழியவேண்டும் மெய்யான துக்கத்தை, வீட்டாவிடினும் - போக்காவிட்டாலும், அடியேன்—, என்சித்தம் - என்னுடைய மநஸ்ஸை, உன்பால் - உன்விஷயத்திலே, மிகவைப்பன் - மிகவும் வைப்பேனென்கிறார்.

வ்யா.—ஏழாம்பாட்டு. (எத்தனையும் வான்மறந்தகாலத்தும்) கார்காலத்தில் வர்ஷியாதே மேகங்கள் மறுத்தகாலத்திலும், பைங்கூழ்களுண்டு - பயிர்கள். (மைத்தெழுந்தவித்யாதி) ஆகாஶத்திலே கறுத்தமேகங்களைப்பார்த்திருக்கு மத்தனையல்லது நீர் நிலந்தேடிப் போகவறியாதாப்போலே. (மெய்த்துயர் வீட்டாவிடினும் வித்துவக்கோட்டம்மா) "அவஶ்யமநுபோக்தவ்யம்" "அவஶ்யமநுபோக்தவ்யம்" என்கிற பாபத்தைப்போக்கி ஸம்ஸாரஸம்பந்த மறுத்துக் கொடுக்கவந்திருக்கிற நீ அதுசெய்திலையாகிலும். (என்சித்தமிகவுன் பாலே வைப்பனடியேனே) என்ரக்ஷணத்திலே நெகிழ்ந்தாயென்று தோற்ற ஒருக்காலுக்கொருக்கால் உன்பக்கலிலே நெஞ்சுப்ரவணமாகாநின்றது. ... ... .. ... ... ... எ

தொக்கிலங்கியாறெல்லாம்பரந்தோடித்தொடுகடலே
புக்கன்றிப்புறம்நிற்கமாட்டாத;மற்றவைபோல்;
மிக்கிலங்குமுகில்நிறத்தாய்!வித்துவக்கோட்டம்மா!உன்
புக்கிலங்குசீரல்லால்புக்கிலன்காண்புண்ணியனே!. (அ)

ப-ரை.—ஆறெல்லாம் - நதிகளெல்லாம், தொக்கு- திரண்டு, இலங்கி-ஒளியையுடைத்தாய், பரந்து - பார்த்தவிடமெங்கும்பரந்து, ஓடி—, தொடு - ஆழமான, கடலே - கடலிலே, புக்கன்றி - சென்று புகலல்லது, புறம் - வேறோரிடத்தில், நிற்கமாட்டாத-நிற்கமாட்டாதவையா யிருக்கின்றன; அவைபோல்-அவ்வாறுகளைப்போலே; மிக்கு இலங்கு - மிகவும் விளங்காநின்றுள்ள, முகில்-மேகம்போன்ற, நிறத்தாய் - திருநிறத்தையுடையனாய், வித்துவக்கோடு - திருவித்துவக்கோட்டி லெழுந்தருளி யிருக்கிற, அம்மா - ஸர்வஸ்வாமியான, புண்ணியனே—, புக்கிலங்கு - உள்புக உள்புக உஜ்வலமாகிற, உனசீரல்லால் - உன்னுடைய கல்யாண குணங்களை யொழிய, புக்கிலன்காண் - வேறொருபுகலுடையே னல்லேன்காணென்கிறார்.

வ்யா.—எட்டாம்பாட்டு. (தொக்கிலங்கியாறெல்லாம்பரந்தோடி) ஜலராஶியெல்லாந் திரண்டு ஒளியையுடைத்தாய் பார்த்தவிட

மெங்கும் பரந்தோடி. (தொடுகடலித்யாதி) ஆழ்ந்தகடலிலேசென்றுபுக்கல்லது புறம்புகிம்சமாட்டாத ஆறுகள்போலே. "ஸமுத்ரமிவ ஸிந்தவ:" "ஸமுத்ர இவஸிந்துபி:" என்னுமாப்போலே, இவைபுக்கால் கடல்நிறையும், இல்லையாகில் குறைபடுகிறதுமன்றிறே; இவற்றுக்குப் புறம்புதரிப்பரிதாயிறே புகுகிறன. (மிக்கிலங்குமுகில் நிறத்தாய்) மிக்கு உஜ்வலமான காளமேகம்போலே யிருக்கிற நிறத்தை யுடையவனே. (வித்துவக்கோட்டம்மா) அம்மேகம் படிந்தமலே. (உன்புக்கிலங்கு சீரல்லால் புக்கிலன்காண்) உள்புக உள்புகஉஜ்வலமானகல்யாண குணங்களிலே யல்லது, உள்புக உள்புக மஸ்ருணமாயிருக்கும் குணங்களிலே அவகாஹித்திலேன்காண். இதுக்குநிபந்தநமென்னென்னில் (புண்ணியனே) ப்ரதமஸுக்ர்தம் நீயாகையாலே. ... ... ... ... ... அ

நின்னையேதான்வேண்டி,நீள்செல்வம்வேண்டாதான்
றன்னையேதான்வேண்டுஞ்செல்வம்போல்;மாயத்தால்,
மின்னையேசேர்திகிரிவித்துவக்கோட்டம்மா!
நின்னையேதான்வேண்டிநிற்பனடியேனே. (௯)

ப-ரை.—நின்னையேதான்வேண்டி - உன்னையேவேண்டி, நீள்செல்வம்-நிரவதிகமான ஸம்பத்தை, வேண்டாதான்றன்னையே - விரும்பாதவனையே, வேண்டும்-தான்மேல்விழுந்து கிட்டுகைக்கு அவஸரம்பார்க்கிற, செல்வம்போல்- ஐச்வர்யத்தைப்போலே; மின் - மின்போலே பளபளத்திருந்துள்ள, திகிரி- திருவாழியாழ்வானை, சேர்-இடைவிடாதேதரித்துக்கொண்டிருக்கிற, வித்துவக்கோட்டம்மா—, மாயத்தால் - உன்மாயையாலே, என்னை உபேக்ஷித்தாயாகிலும், அடியேன்- சேஷபூதனான, யான் - நான், நின்னையே-உன்னையே, வேண்டிநிற்பன் - விரும்பியிருப்பேனென்கிறார்.

வ்யா—ஒன்பதாம்பாட்டு. (நின்னையேதான்வேண்டி நீள்செல்வம் வேண்டாதான் றன்னையே தான்வேண்டும் செல்வம்போல்) உன்னையேவேண்டி நிரவதிகஸம்பத்தைக்காற்கடைக்கொண்டவன்றன்னையே அவஸரப்ரதீக்ஷமாய்ப்பார்த்துநிற்கும் ஐஶ்வர்யம்போலே யென்னுதல்; மோக்ஷலக்ஷ்மியைப்போலே யென்னுதல். (மாயத்தால் மின்னையே சேர்திகிரிவித்துவக் கோட்டம்மா) மின்போலே பளபளத்திருந்துள்ள திருவாழியை * எப்போதுங்கைகழலா நேமியான் ஆசிலேவைத்தகையும் நீயுமாய் என்னுடைய ரக்ஷணத்துக்காக இங்கே வந்திருந்துவைத்துக் காற்கடைக்கொண்டாயாகிலும். (நின்னையே யான் வேண்டிநிற்பனடியேனே) தன்னைக் காற்கடைக் கொண்டவனை ஐஶ்வர்யம் விடாதாப்போலே நீ என்னைஉபேக்ஷிக்க உபேக்ஷிக்க உன்னையே பற்றுகின்றேன். ... ... ... ௯

வித்துவக்கோட்டம்மா!"நீவேண்டாயேயாயிடினும்
மற்றாரும்பற்றிலேன்"என்றுஅவனைத்தாள்நயந்த
கொற்றவேல்தானைக்குலசேகரன்சொன்ன
நற்றமிழ்பத்தும்வல்லார்நண்ணார்நரகமே. (௧௦)

ப-ரை.—வித்துவக்கோடு- திருவித்துவக்கோட்டி லெழுந்தருளியிருக்கிற, அம்மா - ஸர்வேச்வரனே, நீ—, வேண்டாயே யாயிடினும் - என்னை உபேக்ஷித்தாயேயாகிலும், மற்றாரும் - வேறொருவரும், பற்றிலேனென்று - துணையாவாரில்லையென்று; அவனை - அவனுடைய, தாள் - திருவடிகளை, நயந்த - ஆசைப்பட்டவராய், கொற்றம்-ஜயப்ரசமான, வேல் - வேலையும், தானை-ஸைந்யத்தை யுமுடையாரான, குலசேகரன் - ஸ்ரீகுலசேகரப்பெருமாள், சொன்ன - அருளிச்செய்த, நல் - விலக்ஷணமாய், தமிழ் - த்ராவிடரூபமான, பத்தும்-பத்துப்பாட்டுக்களையும், வல்லார் - அப்யஸிக்கவல்லவர்கள், நரகம் - ஸம்ஸாரமாகிறநரகத்தை, நண்ணார் - கிட்டார்களென்கிறார்.

வ்யா.—பத்தாம்பாட்டு. (வித்துவக்கோட்டம்மா நீவேண்டாயேயாயிடினும்) இதுக்கென்று வந்திருக்கிறநீ என்னைஉபேக்ஷித்தாயாகிலும். (மற்றாரும்பற்றிலேனென்றவனைத்தாள்நயந்த)வேறொருபுகலில்லை நான் அநந்யகதியென்று அவன்திருவடிகளை யாசைப்பட்டு. (கொற்றவேல்தானைக்குலசேகரன்சொன்ன) ப்ரதிபக்ஷத்தைப்பக்கவேரோடே வாங்கவற்றான வென்றியையுடைய வேலையும் ஸேனையையுமுடையபெருமாள்சொன்னவை.ப்ரதிபக்ஷத்தைவெல்லுகைக்கீடான பரிகர முடையராருப்போலே யாய்த்து பகவத்ப்ராப்திக்கு பரிகரமாக இவருடைய அநந்யகதித்வமும். (நல்தமிழ்பத்தும்வல்லார்) கடல்போலாழமா யிருக்கச்செய்தே உள்ளுள்ள பதார்த்தங்கள் தோற்றும்படியா யிருக்குமாப்போலே அர்த்தம் மிக்கிருக்குமாய்த்து இத்திருமொழி; இவைவல்லவர்கள். (நண்ணார்நரகமே) ஸம்ஸாரஸம்பந்தத்துக் கடியான பாபத்தைப் பண்ணினார்களாகிலும் இஸ்ஸம்ஸாரத்திலே வந்து ப்ரவேசியார்கள். ... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

——:0:——

அடிவரவு—தரு கண்டார் மீன் வாளால் வெங்கட்டிண்செந்தழல் எத்தனை தொக்கு நின்னை வித்து ஏர்மலர்.

ஆக திருமொழி-௫-க்கு பாட்டு-௫௫.

———

## ஆறாந்திருமொழி-ஏர்மலர்-ப்ரவேசம்.

—————:0:—————

அ.—உகந்தருளின தேசத்தை அநுபவத்தார் - கீழ்; அவ்வநுபவம் அவதாரங்களில் அநுபவாபேக்ஷையைப் பிறப்பித்தது; அதில் தோள்நீண்டியான க்ர்ஷ்ணாவதாரத்தை அநுபவித்தவர்களுடைய பாசுரத்தாலே அநுபவிக்கிறார். இத்தலையால் வேறுசெய்யலாவ தில்லாமையாலே கிலாய்க்கத்தொடங்கினார். பகவத்விஷயத்தில் பாவபந்தத்தில் ஊற்றமிருந்தபடி பிராட்டிமார்தசையை ப்ராப்தராய்க்கூடுவது பிரிவது ஊடுவதாம்படியானார். நம்மாழ்வாருக்கு * மின்னிடை மடவாரும், திருமங்கையாழ்வார்க்கு * காதில்கடிப்பும்போலே யிருக்கிறதாய்த்துப் பெருமாளுக்கு இத்திருமொழி. நம்மாழ்வார் பகவத்விஷயத்தில் நின்ற வூற்றமெல்லாந் தோற்றவன்மையுடைத்தா யிருக்கும் * மின்னிடைமடவார்; திருமங்கையாழ்வார் தம்மார்த்தவமெல்லாந் தோற்றி மேன்மையையுடைத்தாயிருக்கும் * காதில்கடிப்பு. இவர்தம்முடைய ராஜகுலமெல்லாந் தோற்றியிருக்கும் இத்திருமொழி. க்ர்ஷ்ணாவதாரம் தோள்நீண்டி யாகையாலே "ஒரு செவ்வாய்க்கிழமை முற்படப்பெற்றிலோம், பல்லிலேபட்டுத் தெறித்தது" என்று பஞ்சலக்ஷம் குடியிற் பெண்களுக்கு க்ர்ஷ்ணன் பக்கலுள்ள விடாயெல்லாம் தமக்கொருவர்க்கு முண்டாகையாலே திருவாய்ப்பாடியில்பெண்கள்பேச்சாலே பேசுகிறார். ... ...

அ.—முதற்பாட்டு. ஒருபிராட்டி முனையில்மணலிலேபோய் நில்லு, நான் அங்கேவருகிறேனென்று சொல்லிவிட; அவள் அங்கேபோய் விடியுமளவும் நின்று அவன் வரக்காணாமையாலே அவனைக்கண்டபோது ஊடிச்சொல்லுகிற வார்த்தையா யிருக்கிறது.

ஏர்மலர்ப்பூங்குழலாயர்மாதரெனைப்பலருள்ளவிவ்வூரில்உன்றன், மார்வுதழுவுதற்காசையின்மை யறிந்தறிந்தே யுன்றன்பொய்யைக் கேட்டுக், கூர்மழைபோல்பனிக்கூதலெய்திக்கூசிநடுங்கியமுனையாற்றில், வார்மணற்குன்றிற்புலரநின்றேன் வாசுதேவா!உன்வரவுபார்த்தே. (௧)

ப-ரா.—ஏர்-அழகிய, மலர்-மலரையுடைத்தாய், பூ-இயற்கைவாஸனையையுடைத்தான, குழல் - மயிர்முடியையுடையரான, ஆயர்மாதர் - இடைப்பெண்கள், எனைப்பலருள்ள-என்னைப்போலே, பலபேருள்ள, இவ்வூரில் - இந்தத்திருவாய்ப்பாடியிலே, உன்றன் - உன்னுடைய, மார்வு - திருமார்வோடே, தழுவுதற்கு-அணைக்கைக்கு, ஆசையின்மை - ஆசையில்லாமையை, அறிந்தறிந்து-நன்றாக அறிந்துவைத்தும், உன்றன்-உன்னுடைய, பொய்யைக்கேட்டு-பொய்யான வார்த்தைகளை, கேட்டு—, வாசுதேவா - வஸுதேவபுத்ரனான, உன் - உன்னுடைய, வரவு - வருகையை, பார்த்து - எதிர்பார்த்துக்கொண்டு, கூர்மழைபோல்-அடைமழைபோலேபெய்கிற, பனிக்கு-பனியநூண்டான, கூதல்எய்தி-

குளிரிலேயகப்பட்டு, கூசி - ஆர்காண்கிறூர்களோ வென்று கூசி, நடுங்கி-அச்சத்தாலும் குளிராலும நடுங்கி, யமுனையாற்றில் - பலரும் காணுமிடமான யமுநாநதியிலே, வார் - பெரிய, மணற்குன்றில் - மணற்குன்றிலே, புலரநின்றேன் - விடியுமளவும் நின்றேன்.

வ்யா.—(ஏர்மலர்ப்பூங்குழலாயர்மாதர்) அழகியமலரையுடைத்தாய் மலருக்குங் கூட நாற்றத்தைக் கொடுக்கும் மயிர்முடியையுடைய இடைப்பெண்கள். (எனைப்பலருள்ள வில்வூரில்) அநேகம்போதிரளான வில்வூரில் - திருவாய்ப்பாடியில். (உன்றன்மார்வு தழுவுதற் காசையின்மை யறிந்தறிந்தே) அநேகம்பெண்களுள்ள வூருமாய் நீயும் ஸர்வஸாதாரணனுமானால் உன்மார்வை யாசைப்படக்கடவதன்று என்றறிந்துவைத்து. (உன்றன்பொய்யைக் கேட்டு)உன் ஸ்வரூபத்தை உணரவொட்டாதிறே உன்வார்த்தை.நீயல்லது புகலுண்டோ. "உன்னையல்லது நானறிவேனோ" என்று தாழ்ச்சிதோன, நீசொல்லும் வார்த்தையைக்கேட்டு. (கூர்மழைபோல் பனிக்கூதலெய்தி) மிக்க மழைபோலேபெய்கிற பனியால்வந்த குளிரிலே யகப்பட்டு. (கூசி) ஆர்காண்கிறூரென்று கூசி. (நடுங்கி) அச்சத்தாலும் குளிராலும் நடுங்கி. (யமுனையாற்றில்) அதுதான் ஏகாந்த ஸ்தலத்திலேயோ, ஸர்வஸாதாரணமான தேசத்திலே யன்றோ. (வார்மணல்குன்றில்புலரநின்றேன்) நின்றதுதான் தனியே நிற்கலாந் தேசத்திலே நின்றேனோ, போகத்துக் கேகாந்த ஸ்தலத்திலேயன்றோ. எல்லாரும்வந்து ஸஞ்சரித்துக் காணும்போது ஸர்வஸாதாரணமான தேசத்திலே வந்தாளென்றிராமே போகத்துக் கேகாந்தமான மணல்குன்றிலே விடியுமளவும் நின்றாளென்னும்படி தோற்ற நின்றேன். (வாசுதேவா) நீ அங்குநிற்கிறதென்னென்னில்; உன்னை விஶ்வஸித்தன்று, உன்பிதாவை விஶ்வஸித்து; - ஒருவார்த்தை யல்ல தறியாத ஸ்ரீவஸுதேவர்பிள்ளையென்னுமத்தை விஶ்வஸித்து நின்றேன். (உன் வரவு பார்த்தே) உன்னுடைய அழகு காணவேணுமென்னும் நசையாலே. ...

அ.—இரண்டாம்பாட்டு. வேறொரு பிராட்டி வார்த்தை.

கெண்டையொண்கண்மடவாளொருத்தி கீழையகத்துத்தயிர் கடையக், கண்டொல்லைநானுங்கடைவனென்று கள்ளவிழியைவிழித்துப்புக்கு, வண்டமர்பூங்குழல்தாழ்ந்துலாவவாண்முகம்வேர்ப்பச் செவ்வாய்துடிப்பத், தண்டயிர்நீகடைந்திட்டவண்ணந்தாமோதரா மெய்யறிவன்நானே. (௨)

ப-ரை.—தாமோதரா - கயிற்றின்தழும்புவயிற்றிலே காணலாம்படியான வடிவையுடையவனே, கீழையகத்து - என்னுடைய அகத்துக்குக் கிழண்டை அகத்திலே, கெண்டை - கெண்டைமத்ஸ்யத்தின்கண்போலே, ஒண்-ஒளியொரு

ந்திய, கண் - கண்களையும், மடவாள் - மடப்பத்தையுமுடையளான, ஒருத்தி- ஒருஸ்த்ரீயானவள், தயிர்கடைய - தனியேநின்று தயிர்கடையாநிற்க, கண்டு- அவளைப்பார்த்து, நானும்—,உன்னுடன்கூடவிருந்து, ஒல்லைகடையவனென்று- சீக்ரமாகக் கடைவேனென்று சொல்லி, கள்ளவிழியை விழித்து - திருட்டுவிழியைவிழித்து, புக்கு - அவளருகேசென்று புக்கு, வண்டு - வண்டுகள், அமர்-படிந்திருந்துள்ள, பூ - மலர்களணிந்த, குழல் - குழலானது, தாழ்ந்து உலாவ - கணுக்காலளவும் தாழ்ந்தசையவும், வாள் - ஒளியையுடைய, முகம்- முகமானது, வேர்ப்ப-வியர்க்கவும், செவ்வாய்-சிவந்த அதரமானது, துடிப்ப- துடிக்கவும், தண்டயிர் - உன்னெஞ்சுக்குப்பொருந்தின குளிர்ந்ததயிரை, நீ—, கடைந்திட்டவண்ணம் - கடைந்தபடியை, நான—, மெய் - மெய்யே, அறிவன் - அறிவேனென்கிறாள் ஒரு கோபஸ்த்ரீ.

வ்யா.—(கெண்டையொண்கண்மடவாளொருத்தி) முக்தமான நோக்கையுடையளாய், சொல்லிற்றெல்லாம் மெய்யென்றிருக்கும் பருவத்தையுடையாளொருத்தி. (கீழையகத்து) பாவநா ப்ரகர்ஷத்தாலே திருவாய்ப்பாடியில் ஒரு அகமுமுண்டாய் அதுக்குக் கீழையகமுமாய்ச் செல்லுகிறதுகாணும் இவர்க்கு. நீநான்மூலையடியேநடந்தது வேறோரிடத்தேயோ,என்னத்துக்குக்கீழையகத்தேயன்றோ. (தயிர்கடையக்கண்டு)ஊரெங்கும்அடியொத்துத்திரியுமிறேதனியே நின்று தயிர்கடைவாருண்டோவென்று; ஒருத்தி தனியே நின்று தயிர் கடையக்கண்டவாறே அலப்யலாபம் பெற்றானாய் ஓடிச்சென்றுபுக்கான். (ஒல்லைநானுங்கடைவனென்று) நீதனியே நின்று தயிர் கடையில் ஒருக்காலும் வெண்ணெய்பட்டதாக மாட்டாது, சடக்கென வெண்ணெய்படுவது நானும் ஒருதலைப்பற்றிக் கடையிலாய்த்தென்று. "அன்று தேவாசுரர் வாங்க" என்று பிறர் கைவிட்டால் கடைவது பிறர்கார்யமாகிலிறே; இங்கும் இவனும ஒருதலைப்பற்றிலிறே தன்ப்ரயோஜநமாவது. (கள்ளவிழியை விழித்துப்புக்கு) இவன் கள்ளவிழி, அவள் கெண்டையொண்கண்மடவாள். நோக்கும் நினைவும் செயலும் சொல்லும் ஒருபடிப் பட்டிருக்கும் அவளுக்கு; இவனுக்கு நோக்கொருபடியும் நினைவொருபடியும் சொல்லொருபடியும் செயல் வேறொருபடியுமாயிருக்கும். இவன் நோக்காலே எல்லாம் மெய்யென்று அவள் விஶ்வஸித்தாளாய்த்து. (வண்டமரித்யாதி) மேல்பண்ணின வ்யாபாரங்கள் ஒருமஹாபாரதமிறே. (வண்டமர் பூங்குழல் தாழ்ந்துலாவ) உன் குழலை விஶ்வஸித்த வண்டுகள் என்பட்டனவோ.(வாண்முகம் வேர்ப்ப) ஒளியையுடையமுகம் வேர்ப்ப. (செவ்வாய்துடிப்ப) அதரஸ்புரணம் பிறக்க. இவையெல்லாம் புணர்ச்சிக்குறியிறே. தமிழர் "சுனையாடல்" என்றுஒரு கலவியைச்சொல்லுமாப்போலே.(தண்டயிர் நீகடைந்திட்டவண்ணம்) உன்னெஞ்சுக்குப் பொருந்தின தயிர் கடைந்தபடி. இவன் சொன்னவாறே இங்ஙனே யிருப்பன சில எனக்குவேண்டா

வென்ன (தாமோதரா மெய்யறிவன் நானே) உன்னுடம்பில் தழு
ம்பை மறைக்கலாமாகிலன்றோ உன்செயல்களை மறைக்கலாவது. ௨

அ.—மூன்றாம்பாட்டு. வேறொருத்தி வார்த்தை.

கருமலர்க்கூந்தலொருத்திதன்னைக்கடைக்கணித்தாங்கேயொ
ருத்திதன்பால், மருவிமனம்வைத்து மற்றொருத்திக் குரைத்தொரு
பேதைக்குப் பொய்குறித்துப், புரிகுழல் மங்கையொருத்திதன்னைப்
புணர்தி; அவளுக்கும்மெய்யனல்லை; மருதிறுத்தாய்உன்வளர்த்தியூ
டே வளர்கின்றதாலுன்றன்மாயைதானே. (௩)

ப-ரை.—கரு - கறுத்த, மலர் - மலர்களணிந்த, கூந்தல் - மயிர்முடியை
யுடைய, ஒருத்திதன்னை - ஒருகோடஸ்த்ரீயை, கடைக்கணித்து - கடைக்கண்
ணாற்பார்த்து, ஆங்கே - அவள்பக்கல்கண் செல்லாநிற்கச்செய்தே, ஒருத்திதன்
பால் - மற்றொருத்தி பக்கலிலே, மநம் - மநஸ்ஸை, மருவிவைத்து - பொருந்த
வைத்து, மற்றொருத்திக்கு - மற்றொருகோடஸ்த்ரீக்கு, உரைத்து “உனக்கடியேன”
என்றுசொல்லி, ஒருபேதைக்கு - சொன்னவார்த்தையை நம்புமவளானவொரு
ஸ்த்ரீக்கு, இன்னவிடத்திலேபோய் நில்லு நான் அங்கே வருகிறேனென்று,
பொய் - பொய்யாக, குறித்து - இடத்தைக்குறித்து, புரி - ஆசைப்படத்தக்க,
குழல் - மயிர்முடியையுடையளாய், மங்கை - யௌவநவயஸ்ஸையுடையளான, ஒரு
த்திதன்னை - ஒருஸ்த்ரீயை, புணர்தி - ஸம்ச்லேஷித்து, அவளுக்கும்—, மெய்ய
னல்லை - பொய்யனாயிராநின்றாய்; மருது - யமளார்ஜுநமென்னும் மருதமரங்
களை, இறுத்தாய் - முறித்தவனே, உன்வளர்த்தியூடே - உன்வயஸ்ஸோடே,
உன்மாயை - உன்னுடைய வஞ்சநையானது, வளர்கின்றது - வளர்ந்து வாரா
நின்றதென்கிறாள் ஒருத்தி.

வ்யா.—(கருமலர்க் கூந்தலொருத்திதன்னைக் கடைக்கணித்து)
நெய்த்திருண்டு பூவையுடைத்தாயிருக்கிற மயிர்முடியையுடையா
ளொருத்தியை, தான் அவள்மயிர்முடியிலே தோற்றதோற்றச்
சிறுநகணித்துப்பார்த்து. நேரே பார்த்தானாகிலிறே பொதுநோக்கு
என்றிருக்கலாவது. (ஆங்கேயொருத்திதன்பால் மருவிமநம்வைத்
து) இவள்பக்கலிலே கண்செல்லாநிற்க வேறொருத்திபக்கலிலே
“அவளையல்ல தறியேன்” என்னும்படி மநஸ்ஸையங்கேவைத்து.
(மற்றொருத்திக்கு உரைத்து) மநஸ்ஸு அவள்பக்கலிலேயிருக்கச்
செய்தே வேறேயொருத்திக்கு “அடியேன்” என்றுசொல்லி. (ஒரு
பேதைக்குப் பொய்குறித்து)சொன்னவார்த்தையை விஸ்வஸித்து
அகவாயறியாதாளொரு முக்தைக்கு இன்னவிடத்திலே போய்நில்
லு, நான் அங்கேவருகிறேனென்று இடங்குறித்து. (புரிகுழல்மங்
கையொருத்திதன்னைப்புணர்தி) மயிர்முடி அலைதிகுலைதியாய்ப்பே
ணாதே போகயோக்யையாயிருப்பாளொருத்தியோடே ஸம்ஸ்லேஷி
த்து. (அவளுக்கும் மெய்யனல்லை) அதுவும் மித்யாபரிரம்பணம்.
அதாவது - பொய்யே தழுவுகை. (மருதிறுத்தாய்) பருவம் நிரம்பு

வதற்குமுன்னே திண்டினைக் கொல்லப்புக்காய். (உன்வளர்த்தி யித்யாதி) உன்னுடைய வஞ்சநமும் நீ பிராயம்புக அதுவும் ஒக்கப் பிராயம்புகா நின்றதிறே. ... ... ... ௩.

அ.—நாலாம்பாட்டு. உகந்தருளினதேசங்களையநுபவித்தார்கீழ்; அவ்வநுபவம் அவதாரங்களையநுபவிக்கவேணுமென்னுமபேக்ஷைபிறந்து அதில் தோள்தீண்டியான க்ர்ஷ்ணாவதாரத்தை அநுபவித்தவர்கள்பாசுரத்தாலே அநுபவிக்கிறார்.

தாய்முலைப்பாலிலமுதிருக்கத் தவழ்ந்துதளர்நடையிட்டுச்சென்று, பேய்முலைவாய்வைத்துநஞ்சையுண்டுபித்தனென்றேபிறரேசநின்றாய்; ஆய்மிகுகாதலோடியானிருப்பயான்விடவந்தவென்தூதியோடே, நீமிகுபோகத்தைநன்குகந்தாய்; அதுவுமுன்கோரம்புக்கேற்குமன்றே. (௪)

ப-ரை.—தாய் - தாயாரான யசோதைப்பிராட்டியுடைய, முலையில் - முலையிலே, அமுது - பரமபோக்யமான, பாலிருக்க - பாலிருக்கச்செய்தே, தவழ்ந்து—, தளர்நடையிட்டுச்சென்று - தள்ளம்பற்றிச்சென்று, பேய் - பூதனையுடைய, முலை - முலையிலே, வாய்வைத்து - திருப்பவளத்லைதவைத்து, நஞ்சை - விஷம்கலந்தபாலை, உண்டு - விரும்பி யமுதுசெய்து, பித்தனென்று - பிச்சம்பிடித்தவனென்று, பிறர் - அயலாரெல்லாம்; ஏசநின்றாய் - ஏசும்படி நின்றாய்; யான் - நான், உன்னையணைக்கைக்கு, ஆய்மிகுகாதலோடு இருப்ப - மிகவும் ஆசைப்பட்டுக்கொண்டிருக்க, யான் - நான், விட - அனுப்ப, வந்த - உன்னிடம்வந்த, என் தூதியோடே - என் தூதியோடே, நீ—, மிகுபோகத்தை - மிகுந்தஸுகத்தை, நன்குகந்தாய் - நன்றாக அநுபவித்தாய்; அதுவும் - அச்செய்கையும், உன்கோரம்புக்கு - உன்தீம்புக்கு, ஏற்கும் - ஏறிருக்குமெனகிறாள் ஒருகோபஸ்த்ரீ.

வ்யா.—(தாய்முலைப்பாலி லமுதிருக்க) உன்னைப் பெறுகைக்கு நோன்புநோற்றுப்பத்துமாஸம் சுமந்து நீ முலையுண்ணில் தரித்தும் முலையுண்ணாவிடில்நெறித்து ஆற்றாளாயிருக்கிறவளுடைய,உனக்கு தாரகமாயிருந்த முலைப்பாலிருக்க. (தவழ்ந்து தளர்நடையிட்டுச் சென்று) தவழ்ந்துநடக்கப்புக மாட்டாதே தள்ளம்பற்றிச்சென்று. (பேய்முலை வாய்வைத்து நஞ்சையுண்டு) உன்பக்கல் பாவபந்தமில்லாத பூதனையுடைய முலையிலே வாய்வைத்து, விநாஶத்தை விளைப்பதான நஞ்சையுண்டு. (பித்தனென்றே பிறரேசநின்றாய்) ராகத்வேஷங்களுக்கு விஷயபாகம் பண்ணமாட்டாத அடைவுகெட நின்று நாட்டாரேசும்படி நின்றாய். நான் இப்போது விழுக்காடறியாதே செய்ததென்னென்ன (ஆய்மிகுகாதலோடியானிருப்பயான் விடவந்த வென்தூதியோடே) என் தூதவாக்யங்கொண்டு வந்தவளோடே. (நீ மிகுபோகத்தை நன்குகந்தாய்.) ஆய் - ஆயபொன். உன்னை யாசைப்பட்டு வைவர்ண்யத்தையுடைய நானிருக்க. ஆய

என்று நடைக்குறைச்சலாய்க்கிடக்கிறது. என்னோடு பரிமாறும் பரி மாற்றத்துக்கு அவ்வருகே என்னினைவுங்கொண்டு பரிமாறநினைத் தாலும் அவளுக்கு அந்நினைவு இல்லாமையாலே மாந்துமவனிறே அவன். (அதுவுமுன் கோரம்புக்கேற்குமன்றே) கோரம்பமாவது- தீம்பு. அதாவது - உன் தீம்புக்கேற்கு மித்தனையிறே யென்கை. ௪

மின்னொத்த நுண்ணிடையாளைக்கொண்டுவீங்கிருள்வாயென்ற
ன்வீதியூடே, பொன்னொத்தவாடைகுக்கூடலிட்டுப்போகின்றபோ
து நான்கண்டுநின்றேன்; கண்ணுற்றவளைநீகண்ணாலிட்டுக்கைவிளிக்
கின்றதுங்கண்டேநின்றேன்; என்னுக்கவளைவிட்டிங்குவந்தாய்;
இன்னமங்கேநடநம்பிநீயே. (௫)

ப-ரை.—மின் ஒத்த - மின்போலே, நுண் - நுண்ணிய, இடையாளை - இடையையுடையா ளொருத்தியை, கொண்டு-அணைத்துக்கொண்டு, வீங்கிருள் வாய - மிக்கவிருளிலே, என்றன்வீதியூடே - என்னுடைய வீதியிலே, பொன் னொத்தவாடை - பீதாம்பரத்தை, குக்கூடலிட்டு - முட்டாக்கிட்டுக்கொண்டு, போகின்றபோது - அவளும்நீயுமாகப் போகிறபோது, நான்—, கண்டுநின்றே ன் - பார்த்துக்கொண்டிருந்தேன்; அன்றியும், நீ—, கண்ணுற்றவளை-கண்ணில் புலப்பட்டமற்றொரு ஸ்த்ரீயை, அவள் அநந்யார்ஹையாம்படி, கண்ணாலிட்டு- உறைக்கப்பார்த்து, கை-கையாலே இன்னவிடத்துக்கு வாவென்று, விளிக்கின் றதும் - அழைத்துக்கொண்டுபோவதையும், கண்டேநின்றேன் - பார்த்துக் கொண்டேயிருந்தேன்; அவளைவிட்டு - அந்த ஸ்த்ரீயைவிட்டு, இங்கு - என்னிட த்துக்கு, என்னுக்குவந்தாய் - எதுக்காகவந்தாய்; நம்பீ - ஸகலகுணபரிபூர்ண னே, இன்னம் - இனிமீதும், அங்கேநட - அவளிடத்திற்கே போவென்றாள் ஒருகோபஸ்த்ரீ.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (மின்னொத்த நுண்ணிடையாளைக் கொண்டு) மின்போலே நுண்ணிய இடையையுடையா ளொருத்தி யை அவ்விடை நுடங்காதபடி யணைத்துக்கொண்டு. (வீங்கிருள் வாய்) உன்னுடைய முன்னடிதோற்றாதே போகைக்கிடான மிக்க விருளுமுண்டாய்த்திறே. (என்றன்வீதியூடே) கொண்டு போகிற துதான் வேறொருதெருவேயன்றே கொண்டுபோவது. இது ஆர் தெருவென்றிருந்தாய்; இதென்ன அஞ்சாமைதான். (பொன்னொத்த வாடை குக்கூடலிட்டு) மறைத்துக்கொண்டு போகிறதுதான் இரு ளுக்கு ப்ரகாசத்தை யிட்டன்றோ தான். போகிறது போகிறாய்தா தான், இன்னாளைக் கொண்டுபோகாநின்றோம், இன்னாள்தெருவே போகாநின்றோம், இன்னகாலத்திலே போகாநின்றோ மென்னும் துணுக்குமின்றியிலே யன்றோபோய்த்து. (போகின்றபோது நான் கண்டுநின்றேன்) உன்னைப்போலே அந்யபரையன்றோநான், நீபோ னவிடமெங்கும் அடியொத்துமவளாகையாலே கண்டு நின்றேன். (கண்ணுற்றவளை) இவளையணைத்துக்கொண்டுபோகாநிற்கச்செய்தே

வேறொருத்தி கண்ணுக்கு இலக்கானாள். (நீ கண்ணாலிட்டு) கண்ணாலே அநங்கார்த்தையாம்படி நோக்கினாய். (கைவிளிக்கின்றதும் கண்டே நின்றேன்) இவளை ஒருகையாலேயணைத்து மற்றைக்கையாலே எதிர்ப்பட்டவளை இன்னவிடத்தே வாவென்று அழைத்துக்கொண்டு போகிறபடியையும் பார்த்துக்கொண்டுநின்றேன். (என்னுக்கவளைவிட் டிங்குவந்தாய்) அப்பாவி உன்னையறியாதவளாகையாலே மெய்யென் றிருக்கிறவள் வெறுக்கும்படி அவளை விட்டு இங்கு என்செய்யவந்தாய். அங்ஙனே சில வுண்டோ வெனக்கு, அநந்யகதியன்றோவென்று அவன்சொல்ல;(இன்னமங்கே நட நம்பிநீயே)குறைவாளரைப்போலே சிலவார்த்தை சொல்லக்கடவீரோ, நீர்பூர்ணரல்லீரோ, அங்கே நடவீர். ... ... ... ௫

மற்பொருதோளுடைவாசுதேவா! வல்வினையேன்துயில்கொண்டவாறே,இற்றையிரவிடையேமத்தென்னையின்னணைமேலிட்டகன்றுநீபோய், அற்றையிரவுமோர்பிற்றைநாளுமரிவையரோடுமணைந்துவந்தாய்; எற்றுக்குநீயென்மருங்கில்வந்தாய்;எம்பெருமான்! நீயெழுந்தருளே. (௬)

ப-ரை.—மல் - மல்லரோடே, பொரு - பொருத, தோளுடை - திருத்தோள்களையுடைய, வாசுதேவா - வஸுதேவபுத்ரனே, வல்வினையேன் - மஹாபாபத்தைப்பண்ணின நான், துயில்கொண்டவாறே - தூங்கத்தொடங்கின உடனே, இற்றையிரவிடை - அன்றிரவில், ஏமத்து-நடுராத்ரியிலே, இன்-கலவிக்குப் பாங்காயிருப்பதொரு, அணைமேல் - படுக்கையிலே, என்னை—, இட்டு - கிடக்கவிட்டு, நீ—, அகன்றுபோய - அகன்றுபோன, அற்றையிரவும் - அன்றிரவும்,ஓர் பிற்றைநாளும்-அதுக்குமறுநாளும், அரிவையரோடும்-பஞ்சலக்ஷம் குடியிற்பெண்களெல்லாரோடும், அணைந்துவந்தாய்-ஸம்ச்லேஷித்துவந்தாய்; நீ-இப்படிப்பட்ட நீ, என்மருங்கில் - என்னருகில், எற்றுக்குவந்தாய் - ஏதுக்காக வந்தாய்; எம்பெருமான் - என்னுடையஸ்வாமியே, நீ—, எழுந்தருள் - அப்பால் எழுந்தருளுமென்கிறாள் ஒரு கோபஸ்த்ரீ.

வ்யா.—ஆறாம்பாட்டு. (மற்பொரு தோளுடை வாசுதேவா) உன் செயல்கள், நீ மூலையடி நடந்தாயென்ன வொண்ணாதபடி நிவாரகரில்லாதபிறப்பு. (வல்வினையேன் துயில்கொண்டவாறே) அப்போதுஉறங்காதிருக்கப்பெற்றிலேன் உன்மிகைச்செயல்களெல்லாங் காணும்படி, நித்ரையும்என்னைப் பகைமீளும்படி பாபத்தைப் பண்ணினேன். (இற்றை யிரவிடையேமத்தென்னை) அற்றையிரவில் நடுச்சாமத்திலே போகயோக்யமான காலத்திலேயன்றோ என்னை விட்டுப்போய்த்து. (இன்னணைமேலிட் டகன்று நீபோய்) போகயோக்யமான காலத்திலே, படுக்கைவாய்ப்பாலே இவள்உறங்கும், உறங்கினவாறே போவோமென்று,அகன்றுநீபோய். (அற்றையிரவுமோர்பிற்றைநாளும்) இங்கு நின்று நினைத்துப் போனாப்போலே

செய்யவொண்ணுதிறேயங்கு; அகன்றஅன்றிரவும் பிற்றைநாளும். (அரிவையரோடு மணைந்துவந்தாய்) பஞ்சலக்ஷம் குடியில் பெண்க ளெல்லாரோடும் ஸம்ஶ்லேஷித்துவந்தாய். "அரிவையரோடு மணைந்துவந்தாய்" என்றவாறே "இவளை ஆற்றும்போது அணைத்து ஆற்ற வேணும்" என்று அவன் கிட்டப்புக (எற்றுக்கு நீஎன்மருங்கில் வந்தாய்) ஆரைத்தீண்டி வந்தாயென்று தெரியாது, என்னைத்தீண் டாதே கடக்கநில்லு. (எம்பெருமான் நீயெழுந்தருளே) பூர்வ வாஸ னையாலே வந்தாயென்றவிடம் தப்பச்சொன்னேன் - அத்தைப் பொறுத்து, நீர் முதலிகளன்றோ, நீர் எழுந்தருளும். ... ௯

பையரவினணைப்பள்ளியினாய்! பண்டையோமல்லோராம்; நீயு கக்கும், மையரியொண்கண்ணினருமல்லோம்வைகியென்சேரிவரா வொழிநீ; செய்யவுடையுந்திருமுகமுஞ்செங்கனிவாயுங்குழலுங்க ண்டு,பொய்யொருநாட்பட்டதேயமையும்;புள்ளுவம்பேசாதேபோ குநம்பீ!. (௭)

ப - ரை.—பை - படத்தையுடைய, அரவினணை - திருவநந்தாழ்வானாகிற படுக்கையை, பள்ளியினாய் - திருப்பள்ளியாகவுடையனாய், நம்பீ - பூர்ணனா னவனே, நாம் - நாங்கள், உனமாயையில் அகப்படுகைக்கு, பண்டையோமல் லோம் - பழையவர்களன்று; அன்றியும்; நீ உககும் - நீவிரும்பத்தக்கவர்களா ய், மை - மையணிந்து, அரி - செவ்வரிபடர்ந்து, ஒண் - ஒளிபொருந்திய, கண் ணினருமல்லோம் - கண்களை யுடையவர்களுமல்லோம்; நீ—, வைகி - தங்கி, என - என்னுடைய, சேரி - இருப்பிடத்தில், வரவொழி - வாராதேகொள்; செ ய்ய - சிவந்த, உடையும் - திருப்பரியட்டத்தையும், திருமுகமும் - திருமுக மண்டலத்தையும், செம் - சிவந்த, கனி-கோவைக்கனியையொத்த, வாயும் - திருப்பவளத்தையும், குழலும்கண்டு - திருக்குழலையும்கண்டு, பொய் - உனனு டைய பொய்யானவார்த்தைகளை மெய்யென்றுநம்பி, ஒருநாள்பட்டதே - ஒரு நாள் பட்டபாடே, அமையும் - போதும், புள்ளுவம்பேசாது - க்ருத்ரிமமான வார்த்தைகளைச் சொல்லாமல், போகு - இவ்விடம்விட்டுப் போவென்கிறாள்.

வ்யா.—ஏழாம்பாட்டு. (பையரவினணைப்பள்ளியினாய்) நீ என க்கு நல்லையல்லையாகிலும் நான் உனக்கு நல்லேன். ஆசைப்பட்டா ர்க்கு உடம்பு கொடுக்குமவன், எதிர்த்தலையினுடைய ரக்ஷண சிந் தை பண்ணுமவன் நான்என்று அவன்சொல்ல (பையரவினணைப் பள்ளியினாய்) என்கிறாள். (பண்டையோமல்லோம் நாம்) அகப்படு த்துகைக்காக நீமுன்புசெய்யுஞ் செயல்களறிந்தவர்க ளாகையாலே பழையவர்க ளல்லோங்காண் நாங்கள். "நாகணைமிசை நம்பிரான் சரணேசரண் நமக்கு" என்றிருக்கும் நிலைதவிர்ந்தோங்காண் நாங் கள். தஞ்சமாக நினைத்திருக்கு மதிலேயும் அதிஶங்கை பண்ணும் படி அவகாஹித்தார்காணும் இவர். நீங்கள் பண்டையவர்க ளன்றா கிலும் நான்றான் பழையவ னாகையாலே உகப்பேன் உங்களை

யென்று அவன்சொல்ல (நீயுகக்கும்மையரியோண் கண்ணிணுருமல்லோம்) நீ இப்போது உகக்கிறவர்களுமல்லோங்காண்நாங்கள். முன்னடி தோற்றாதே உன்னை மூலையடியே நடக்கப்பண்ணுகிற அவயவசோபையுடையவர்களல்லோங்காண்நாங்கள். ஆனால் என்னைச் செய்யச் சொல்லுகிற தென்னென்ன (என்சேரிவரவொழிநீ) எங்களுடைய இருப்பிடங்கள் எங்களுக்கேஆஜ்ஞைசெல்லுவது, எங்களிருப்பிடத்தில்வார்த்தைகள்கேள். எல்லாரும்பரிமாறுகிறஉங்களிடத்தில் நான் வாராதொழிகிற தென்னென்ன (என்சேரிவரவொழிநீ) எல்லாரும் வரும்போதில் வரவேண்டா வென்கிறோமென்று ஆளற்றபோதாகப் போகாநின்றான், இவனுக்கு ஒரு நினைவுண்டென்று ஶங்கிக்கும்போது வரவேண்டா வென்கிறோம் மத்தனை யல்லது ஸர்வஸாதாரணமானபோது வரவேண்டா என்றிலோமே யென்ன; இவர்கள் வரவேண்டா வென்னுதபடி ஆசிலே கைவைத்தான்; இவர்கள் வார்த்தையிலே தான் செயலற்றபடியாலே இவர்கள்வாய் மாளும்படி ப்ரஹ்மாஸ்த்ர ப்ரயோகம்பண்ணப் பார்த்தான் (செய்யவுடையும் திருமுகமும் செங்கனிவாயுங் குழலுங்கண்டு) திருப்பரியட்டத்தைப்பேணுவது, இவர்கள்முகங்களிலேமுகத்தைக் காட்டுவது, ஸ்மிதம்பண்ணுவது, திருக்குழலைப்பேணுவதானான்; இப்படி செய்தவாறே இறுய்த்தாள். அதாவது - கண்ணைச் செம்பளித்தாள். கண்படைத்த லாபங்காணாதே கண்ணைச் செம்பளிக்கிற தென்னென்று சொல்லக்கண்டு (பொய்யொரு நாள் பட்டதேயமையும்) உன்னுடைய செயல்களெல்லாம் மெய்யென்று ஒருநாள் பட்டதேயமையுங் காணென்கிறாள். "அடியேன் குடியேன்" என்று சிலவார்த்தைகளைச்சொல்ல (புள்ளுவம்பேசாதேபோகு) தாழ்ச்சிக்கு முன்னே காண் ஶ்ரவணமும், அதுவுமெல்லாம் பண்டேசெய்தற்றது காண், இனி நீ சொல்லுகிறவற்றுக்கு ஒரு ப்ரயோஜநமில்லை. புள்ளுவமாவது - வஞ்சநம். வஞ்சநங்களெல்லாமறிந்த வெங்கள்பக்கல் ப்ரயோகியாதேபோ. என்னை "போ" என்கிறதென், உங்களையொழியப் புகலிட முண்டோவென்ன (நம்பீ) பூர்ணராயிருக்கிறநீர் குறைவாளரைப்போலே சொல்லக்கடவீரோ. சொலவுக்கும் செயலுக்கும் அடியில்லை யென்னும்படி நிரபேக்ஷ ரென்றறிந்தபின்பு சில ஸாபேக்ஷரைப்போலே சொல்லக் கடவீரோ, நடவீர். ... எ

என்னைவருகவெனக்குறித்திட்டினமலர்முல்லையின்பந்தர்நீழல்
மன்னியவளைப்புணரப்புக்குமற்றென்னைக்கண்டு மூறாநெகிழ்ந்தாய்;
பொன்னிறவாடையைக்கையில்தாங்கிப்பொய்யச்சங்காட்டிநீபோதி
யேலும், இன்னமென்கையகத்தீங்கொருநாள்வருதியேலென்சினந்
தீர்வன்நானே. ... ... ... ... ... ... (அ)

ப-ரை.—என்னை—, வருகவென - இன்னவிடத்துக்கு வாவென்று, குறித்திட்டு - இடம் குறித்துவிட்டு, இனம் - குப்பல் குப்பலாக, மலர் - மலர்ந்திருந்துள்ள, முல்லையின்பந்தர்நீழல் - முல்லைப்பந்தலின் நிழலிலே, மன்னியவளை - குடில்கட்டிக் காத்துக்கிடந்தவளை, புணரப்புக்கு - ஸம்ச்லேஷிக்கப் புகுந்து, என்னைக்கண்டு - என்னைப்பார்த்து, உழறு - கலங்கி, நெகிழ்ந்தாய் - அப்பாலேநடந்தாய்; பொன்நிறவாடையை - திருப்பீதாம்பரத்தை, கையில் - கையிலே, தாங்கி - தாங்கிக்கொண்டு, பொய் - பொய்யே, அச்சங்காட்டி - பயப்பட்டதாக பாவித்துக்கொண்டு, நீ—, போதியேலும் - போவாயேயானாலும், இன்னம்-பின்பொருகாலத்திலாகிலும், நான் ஸம்ச்லேஷிக்கும்படி, ஈங்கு - இவ்விடத்து, என்கையகத்து - என்னிடத்தில், ஒருநாள் - ஒருநாளாகிலும், வருதியேல் - வருவாயேயானால், என்சினம் - என்கோபத்தை, நான்—, தீர்வன்- தீர்த்துக்கொள்வேனென்கிறாள்.

வ்யா.—எட்டாம்பாட்டு. (என்னை வருகவெனக் குறித்திட்டு) ப்ரணயித்வத்தாலே ஒருத்தியை அநந்யார்ஹை யாக்கினாய், அவளையின்னவிடத்திலே வாவென்று இடங்குறித்துவிட்டாய். (இனமலர் முல்லையின் பந்தர்நீழல்) பரபபுமாறப்பூத்த முல்லைப் பந்தலின் கீழே. (மன்னியவளைப் புணரப்புக்கு) எக் காலத்திலே இடங்குறித்துவிட்டானென்றுதெரியாது, அவள் அங்கேகுடில் கட்டிக்காத்துக் கிடக்கிறது; அவளோடே ஸம்ஶ்லேஷிக்கப்புக்கு. (மற்றென்னைக் கண்டுழறு நெகிழ்ந்தாய்) ஒரு மஹா பாரதத்தைப் பாரித்துக்கொண்டுபுக்கு இவளைக்கண்டவாறே கலங்கி எழுந்திருந்தான். (பொன்னிற வாடையைக்கையில் தாங்கி) திருப்பரியட்டத்தைக் கையிலே தாங்கி. (பொய்யச்சங்காட்டி நீ போதியேலும்) இவளைக்கைகழியப் போய், மெய்யச்சஞ் செய்தத்தைப்பொய்யாக்கிச் சிரித்தான் போய் நின்று;மெய்யே அஞ்சினானாகில்களவும்மெய்யாமிறே;களவுபொய்யாகைக்காகப்பொய்யே அஞ்சினானாகப்பாவித்தான். (போதியேலும்) அப்போதைக்கு இவளைத் தப்பப்போமதிறே உத்தேஶ்யம். அப்படியே கைகழலப்போனான். (இன்னமென் கையகத் தீங்கொருநாள் வருதியேல்) நீ நியதஸ்வபாவ னல்லாமையாலே என் கையிலேயும் ஒருநாள்வந்து அகப்படக் கூடுமிறே; அகப்பட்டாயாகில் (என் சினம் தீர்வன்நானே) உஞ்சப்பிள்ளை பாடாநிற்க எம்பார் பார்த்தெழுந்தருளியிருக்க இவ்விடத்துக்கு அபிநயிக்கிறார்; - காலாலே பாய்ந்து தள்ளுவதாகக்காட்ட; அது கைக்கொண்டருளி, "கெடுவாய்! அங்ஙனேசெய்தாளாகில்அவனுக்குப்பொல்லாதோ, அவனுக்கு அதன்றோதேட்டம், அங்ஙனன்றுகாணும் என்று,கையையிட்டுமுகத்தை மறைத்துத் திரியவைத்தருளிக் காட்டினார்". ... அ

அ.—ஒன்பதாம்பாட்டு. தோல்விதோற்றச் சொல்லுகிறார்கள்.

மங்கலநல்வநமாலைமார்விலிலங்கமயில்தழைப்பீலிசூடிப் [பெய்து
பொங்கிளவாடையரையிற்சாத்திப் பூங்கொத்துக் காதில்புணரப்
கொங்குநறுங்குழலார்களோடுகுழைந்துகுழலினிதூதிவந்தாய்;
எங்களுக்கேயொருநாள்வந்தூதவுன்குழலின்னிசைபோதராதே. ()

ப-ரை.—மங்கலம் - மங்களங்களுக் கெல்லாமிருப்பிடமாய், நல் - தர்சநீயமான, வநமாலை - வநமாலையானது, மார்வில் - திருமார்பிலே, இலங்க - ப்ரகாசிக்க, தழை - தழைத்த, மயில்பீலி - மயிலிறகுகளை, சூடி - திருமுடியிலே தரித்தும், பொங்கு இளவாடை - மிகவும் மெல்லிதான திருப்பரியட்டத்தை, அரையில் - திருவரையிலே, சாத்தி - சாத்திக்கொண்டும், காதில் - திருச்செவியிலே, பூங்கொத்து-பூங்கொத்துக்களை, புணரப்பெய்து-மிகவும் பொருந்தவிட்டு, கொங்கு - தேனையும், நறும் - நறுநாற்றத்தையுமுடைய, குழலார்களோடு - குழலையுடைய ஸ்த்ரீகளோடே, குழைந்து - ஸம்ச்லேஷித்து, அக்கலவியால் பிறந்த ஸந்தோஷத்தாலே, இனிது - இனிதாக, குழல் - வேய்ங்குழலை, ஊதிவந்தாய் - ஊதிக்கொண்டுவந்தாய்; எங்க[illegible] - எங்கள் விஷயத்திலே, ஒருநாள் - ஒருநாளிலே, வந்தூத - வந்து ஊதுகைக்கு, உன் - உன்னுடைய, குழலின்-வேய்ங்குழலினது, இசை - இசையானது,போதராதே-வாராதோவென்கிறாள்.

வ்யா.—(மங்கல நல்வநமாலை மார்விலிலங்க) மங்களமென்று சொல்லப்பட்டவை யெல்லாமுடைத்தாய் தர்ஶநீயமாயி[illegible]க்கிறவநமாலை. “மைபோல் நெடுவரைவாய் தாழுமருவிபோல் தார்கிடப்ப” என்னுமாப்போலே, திருமார்விலே விளங்க. ([illegible] தழைப்பீலி சூடி) தழைத்தபீலியைத் திருமுடியிலே சுற்றி. (பொங்கிள வாடை அரையில்சாத்தி)மிகவும்மெல்லியஆடையைத்திரு[illegible]யிலேசாத்தி. (பூங்கொத்துக்காதில்புணரப்பெய்துகொங்கு நறுங்குழலார்களோடு குழைந்து) பூங்கொத்தைக்காதிலே மிகவும்பொருந்தவிட்டுத்தேனையும் நறுநாற்றத்தையுமுடைய குழலையுடை யவர்களோடே,குழைந்து-கலந்து. (குழலினி தூதிவந்தாய்)நெகிழ்ந்தவர்களோடே ஒருநீராகக்கலந்து அக்கலவியால்பிறந்த ஹர்ஷமெல்லாந் தோற்றும்படியாக இனிதாகக் குழலூதி வந்தாய். (எங்களுக்கே ஒருநாள்வந்தூத உன் குழலின்னிசை போதராதே) நீ ஸர்வஸாதாரண னானபின்பு உன்குழலும் ஸர்வஸாதாரணமாயிருக்க, ஓரோ விடங்களிலேயாய் நாங்கள் கேட்க வூதவேணுமென்றால் நீயூதிலும் இசைபுறப்படாதபடியாய்த்திறே உன்குழலின் ஸ்வபாவம். குழலோசையென்றும் ஸம்ஶ்லேஷமென்றும் - பர்யாயமிறே. எங்களோடு ஸம்ஶ்லேஷம் உனக்குப் பொருந்ாதென்கிறார்கள். ... ... ... கூ

அல்லிமலர்த்திருமங்கைகேள்வன் றன்னைநயந்திளவாய்ச்சிமார்கள், எல்லிப்பொழுதினி லேமத்தூடியெள்கியுளாத்தவுரையதனைக்,

கொல்லிநகர்க்கிறைகூடற்கோமான் குலசேகரனின்னிசையின்மேவிச், சொல்லியவின்தமிழ்மாலைபத்துஞ் சொல்லவல்லார்க்கில்லை துன்பந்தானே. (கம)

ப-ரை.—இளவாய்ச்சிமார்கள் - சிறிய இடைப்பெண்களானவர்கள், அல்லி - அகவிதழையுடைய, மலர் - செந்தாமரைமலரைப்பிறப்பகமாகவுடையளான, திருமங்கை - பெரியபிராட்டியார்க்கு, கேள்வன்றன்னை - வல்லபனான க்ர்ஷ்ணனை, நயந்து - ஆசைப்பட்டு, ஏமம் எல்லிப்பொழுதினில் - மத்யராத்ரத்திலே, ஊடி - பிணங்கி, அத்தாலே, எள்கியுரைத்தவுரையதனை - ஈடுபட்டுச்சொன்ன பாசுரங்களை; கொல்லிநகர்க்கு - கொல்லிநகருக்கு, இறை - தலைவனாய், கூடல் - கூடலுக்கு, கோமான் - அரசனான, குலசேகரன் - ஸ்ரீ குலசேகரப்பெருமாள், இன் - இனிய, இசையில் - பண்ணிலே, மேவி - பொருந்தி, சொல்லிய - அருளிச்செய்த, இன் - பரமபோக்யமான, தமிழ் - தமிழாலாகிய, மாலை - மாலாரூபமான, பத்தும் - இப்பத்துப்பாட்டையும், சொல்லவல்லார்க்கு - சொல்லவல்லவர்களுக்கு, துன்பமில்லை - பகவதநுபவதத்துக்கு விச்சேதமாகிற துன்பம்வாராதென்கிறார்.

வ்யா.—நிகமத்தில்; (அல்லிமலர்த் திருமங்கை கேள்வன் றன்னை நயந்து) பரம ப்ரணயியான ஸ்ரீக்ர்ஷ்ணனை யாசைப்பட்டு. (இளவாய்ச்சிமார்கள்) அவனைப்போலே எறிமறிந்தபருவமன்றியே பாடாற்றமாட்டாத இளவாய்ச்சிமார்கள். (எல்லிப்பொழுதினிலேமத்து) விலக்குவா ரில்லாத மத்யராத்ரத்திலே. (ஊடியெள்கியுரைத்தஉரையதனை) ஊடி அத்தாலே ஈடுபட்டு அவ்வீடுபாடுதான் சொல்லாய் வழிந்து புறப்பட்ட தென்னலாம்படியான பாசுரத்தை. (கொல்லிநகர்க்கிறை கூடல்கோமான்) கொல்லியென்று - சோழன்படைவீடு; கூடலென்று-பாண்டியன் படைவீடு; "கோழிக்கோன்" என்று முன்பே சொல்லிவைத்தார். மூன்று ராஜ்யத்துக்கும் கடவரான ஸ்ரீகுலசேகரப்பெருமாள். ஸ்ரீகோபிமார் தங்கள்ஸ்த்ரீத்வாபிமாநமெல்லாமறுத்துச்சொன்னாப்போலே இவரும் பெரிய அபிமாநமெல்லாமறுத்தபடி. (இன்னிசையில் மேவிச் சொல்லிய இன்தமிழ்மாலை பத்தும்) "பாட்யேகேயேசமதுரம்" - "பாட்யேகேயேசமதுரம்" என்னும்படியான தமிழ்த்தொடைபத்தும். (சொல்ல வல்லார்க்கில்லை துன்பந்தானே) இவருடைய பாவபந்த மில்லையாகிலும் இவை கற்றவர்களுக்கு பகவதநுபவத்துக்கு விச்சேதசங்கை பிறவாதே நிரந்தராநுபவமாய்ச் செல்லப் பெறுவர்கள். ஸம்போக மத்யே பிறக்கு மதிறே - ஊடலாவது. உன்தலை பத்து என்தலை பத்து என்று முடிய உடலாய்ச்செல்லு மநுபவத்தைப் பெறுவர்கள். ... (கம)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

அடிவரவு.—ஏர் கெண்டை கரு தாய் மின் மற்பொரு பை என்னை மங்கல அல்லி ஆலை.

ஆடு திருமொழி - கூ-ஐ பாட்டு - கக.

## ஏழாந்திருமொழி-ஆலைநீள்கரும்புப்ரவேசம்.

அ.—பிராட்டி, திருவடியைக்கண்டவாறே "'ப்ரணயரோஷம் தலையெடுத்து,"பிதுர்வசநபரிபாலநம்பண்ணப்போந்தார்,என்றிறே பெருமாள் உங்கள்கோஷ்டியிலே ப்ரஸித்தராயிருப்பது; இப்போது அங்ஙனன்றுகாண்;-தம்மை விஶ்வஸித்துக் கைகொடுத்தவென்னை விடுகைக்காகக் காண். '𑌰𑌕𑍍𑌷𑌿𑌤𑌾𑌜𑍀𑌵𑌲𑍋𑌕𑌸𑍍𑌯' 'ரக்ஷிதாஜீவலோகஸ்ய' என்கிறத்தையும் விட்டாரிறே" யென்று கிலாய்த்தாப்போலேகிலாய்த்தார் இவரும் - கீழில் திருமொழியிலே; ஸர்வாத்மாக்களுக்கும் பிராட்டிமாரோபாதிப்ராப்தியுண்டென்னும்படி பகவத்விஷயத்திலே அவகாஹித்தவராகையாலே இவர் கிலாய்த்தார்; இப்படி கிலாய்த்தத்தைக்கு ப்ராப்தியுண்டாயிருக்கிறவிஷயத்தை அநாதிகாலம் இழந்தோமென்கிற இழவுவந்து தலையெடுத்து, முன் க்ர்ஷ்ணனைப்பெற்று வைத்து பால்யாவஸ்தையில் அவன்செயல்களை அநுபவிக்கப்பெறாதே இழந்திருந்து சம்ஸவதபர்யந்தமாக முன்புள்ள விரோதிகளையெல்லாம் போக்கி, தங்கள் முகத்திலே விழித்த க்ர்ஷ்ணனைக்கண்டபோது,கீழ்அநுபவிக்கப்பெறாத இழவுகளைச்சொல்லிக் கூப்பிட்ட தேவகியார்பாசுரத்தாலே அநாதிகாலம் தாம் இழந்த இழவைச்சொல்லுகிறார்-இத்திருமொழியிலே. ... ...

ஆலைநீள்கரும்பன்னவன்தாலேலோ! அம்புயத்தடங்கண்ணினன் தாலேலோ!, வேலைநீர்நிறத்தன்னவன்தாலேலோ! வேழப்போதகமன்னவன்தாலேலோ!,ஏலவார்குழலென்மகன்தாலேலோவென்றென்றுன்னையென் வாயிடைநிறையத்,தாலொலித்திடுந்திருவினையில்லாத்தாயரில்கடையாயினதாயே. (க)

ப-ரை.—நீள் - நன்றாகமுற்றி, ஆலை - ஆலையிலிட்டுப் பிழிதற்குத்தக்க, கரும்பன்னவன் - கரும்பையொத்தவனே, தாலேலா - தாலேலேலோ, அம்புயம் - தாமரையிதழையொத்த, தடம் - விசாலமாயிருந்துள்ள, கண்ணினன் - கண்களையுடையவனே, தாலோ - தாலேலேலோ, வேலைநீர்நிறத்தன்னவன் - கடலின் நிறத்தையொத்த திருமேனியை யுடையவனே, தாலோ - தாலேலேலோ, வேழப்போதகமன்னவன் - யானைக்கன்றையொத்த சரிதங்களை யுடையவனே, தாலோ - தாலேலேலோ, ஏலம் - பரிமளிதமாய், வார் - நீண்ட, குழல் - திருக்குழலையுடைய,என்மகன் - என்மகனே, தாலோ - தாலேலேலோ, என்றென்று - இப்படிப்பலகாலுஞ்சொல்லி, உன்னை—, என்வாயிடைநிறைய - என்வாயிலேநிறையும்படி, தாலொலித்திடும் திருவினையில்லா - தாலாட்டும் ஸம்பத்தில்லாத, தாயரில் - தாய்மார்களில், கடையாயின - கடையான, தாய் - தாயாயிராநின்றேனென் நானென்கிறாள்.

வ்யா.—முதற்பாட்டு.(ஆலைநீள்கரும்பன்னவன்தாலேலோ)சமையவளர்ந்தஆலைக்கரும்புபோலேரஸநேந்த்ரியத்துக்குஇனியனானவனே.

(அம்புயத்தடங் கண்ணினன்தாலோ) விகாஸம்செவ்வி குளிர்த்தி மென்மையுடைய தாமரைப்பூப்போலே யிருக்கிறதிருக்கண்களைக்கொண்டு என்னைக் குளிரநோக்குகிறவனேயென்று சக்ஷுரிந்த்ரியத்துக்குஇனிதாயிருக்கிறபடி சொல்லுகிறார்.(வேலைநீர்நிறத் தன்னவன்தாலோ) அவயவங்களைப் பிரித்துச் சொல்லவேணுமோ, அவயவியானமேனி ஸ்ரமஹரமான கடல்போலே யிருக்கிறவனே.(வேழப்போதகமன்னவன்தாலோ) ஆனைக்கன்றுபோலே வைத்தகண் வாங்காதே பார்த்தபடியே யிருக்கும்படியான சரிதங்களையுடையவனே. (ஏலவார்குழ லென்மகன்தாலே) இப்படி உபமாநங்களால் சொல்லவொண்ணாமையாலே "என்மகன்" என்னு மித்தனையல்லது (என்றென்றுன்னை யென்வாயிடைநிறையத் தாலொலித்திடுந் திருவினையில்லா) இப்படி பலகாலுஞ்சொல்லி வாயாரத் தாலாட்டும் ஸம்பத்தில்லாத. (தாயரில்கடையாயின தாயே) பெறுகைக்குநோன்புநோற்றுப் பெற்றுவைத்து அநுபவத்தில் குறையநிற்கையாலே பிள்ளைகளைப் பெற்று அநுபவிக்குந் தாய்மாரெல்லாரிலும் கடையானேனிறே நான். ... ... ... ... (க)

வடிக்கொளஞ்சநமெழுதுசெம்மலர்க்கண் மருவிமேலினிதொன்றினைநோக்கி, முடக்கிச்சேவடிமலர்ச்சிறுகருந்தாள்பொலியுநீர்முகிற்குழவியேபோல, அடக்கியாரச்செஞ்சிறுவிரலனைத்துமங்கையோடணைத்தானையிற்கிடந்த, கிடக்கைகண்டிடப்பெற்றிலேனந்தோ!கேசவா!கெடுவேன்கெடுவேனே. (உ)

ப-ரை.—வடிக்கொள் - வடிக்கப்பட்ட, அஞ்சநமெழுது - மையணிந்த, செம்மலர் - செந்தாமரைமலரையொத்த, கண் - கண்களாலே, மேல் - மேற்கட்டியில் தொங்கவிடப்பட்டிருக்கிற, ஒன்றினை - கிளிமுதலிய ரூபங்களில் ஒன்றை, இனிது - இனியனாய், மருவிநோக்கி - பொருந்திப பார்த்துக்கொண்டும், கரு-கறுத்த, தாள்-புறந்தாளையும், செம்மலர்-செந்தாமரை மலரையொத்து, சிறு - சிறுத்த, அடி - திருவடிகளையுடையனாய், நீர் - நீரையுண்டு, அத்தாலே-பொலியும் - கறுத்துவிளங்குகிற, முகில் குழவிபோல-மேகக்கன்றையொத்த, செம்-அழகிதாய், சிறு-சிறுத்திருக்குள்ள, விரலனைத்தும்-ஐந்துதிருவிரல்களையும்,அங்கையோடு-உள்ளங்கையிலே, அடக்கியார-யடங்கும்படி, அணைந்து - மடித்துப்பிடித்துக்கொண்டு, ஆனையில்கிடந்த கிடக்கை - ஆனைகிடக்குமாப்போலே பள்ளிகொண்டருளுமழகை, கண்டிட - கண்டுகளிக்கைக்கு, கெடுவேன் கெடுவேன் - மஹாபாபியான நான், பெற்றிலேன் - பாக்யம் பெறவில்லையே, அந்தோ - ஐயோ!என்று விஷண்ணையாகிறாள்.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (வடிக்கொளஞ்சநமெழுதுசெம்மலர்க்கண்) கூர்மையையுடைய செம்மலர்க் கண்ணென்னுதல்; திருக்கண்ணுக்கீடாக வடிக்கப்பட்டஅஞ்சநத்தையுடைய கண்ணென்னுதல். செம்மலர் - சிவந்ததாமரைபோலே யிருந்துள்ள. (மருவி

மேனினி தொன்றினைநோக்கி) பிள்ளையைத் தொட்டிலிலே வளர்த்தி, அநந்யபரனாய்ப் பார்த்துக்கிடக்கைக்காக மேலேயொன்றைத் தூக்கி வைப்பார்களிறே, அத்தை இனியனாய்க்கொண்டு ஸதாதர்ஶநம்பண்ணிக்கிடக்குமிறே. (முடக்கிச்சேவடி மலர்ச்சிறுகருந்தாள்) அங்குக் கிடக்கும்படி சொல்லுகிறதுமேல்; - புறவாய்கறுத்து அகவாய் சிவந்த திருவடிகளை முடக்கி. (பொலியும்நீர் முகிற்குழவியேபோல) கழுத்தே கட்டளையாக நீரைப் பருகிற்றொரு மேகக்கன்றுபோலே. (அடக்கியாரச்செஞ்சிறு விரலனைத்துமங்கையோடணைந்து) செறிந்து அழகிதானதிருவிரற்களை உள்ளங்கையிலேயடக்கும்படி மடித்துப்பிடித்து. (ஆனையில்கிடந்தகிடக்கைகண்டிடப் பெற்றிலேனந்தோ) ஆனை தன் அவயவங்களைப் பொகட்டுக்கொண்டு ஸ்வைரமாகக் கிடந்தாப்போலே தொட்டிலிலே கிடக்கும்போது அநுபவிக்கப் பெற்றிலேனென்று ஐயோ! என்கிறாள்.(கேசவாகெடுவேன் கெடுவேனே)அப்போதைத்திருக்குழலழகை அநுபவிக்கவும்பெற்றிலேன்; முன்புமலடு நின்று இழந்தேன்; பின்புபெற்றுவைத்தே அநுபவிக்கப் பெறாதொழிந்தேன். இரண்டாலும் மஹாபாபியிறேநான். ... ... ... ... ... (உ)

முந்தைநன்முறையன்புடைமகளிர் முறைமுறைதந்தங்குறங்கிடையிருத்தி, எந்தையே! என்றன்குலப்பெருஞ்சுடரே! எழுமுகிற்கணத்தெழில்கவரேறே!, உந்தையாவனென்றுரைப்பநின்செங்கேழ் விரலினுங்கடைக்கண்ணினுங்காட்ட, நந்தன்பெற்றனன்; நல்வினையில்லா நங்கள்கோன்வசுதேவன்பெற்றிலனே. (௩)

ப-ரை.—அன்புடை - மிக்க அன்புடையராய், முந்தை - தொன்றுதொட்டுவருகிற,நன்முறையுடைமகளிர்-தாயார் பாட்டியார் கொள்பாட்டியார் என்கிற நல்லமுறையையுடைய ஸ்த்ரீகளெல்லாரும், தந்தம்-தங்கள்தங்களுடைய,குறங்கிடை-துடைகளிலே, முறைமுறை - முறைமுறையாக, இருத்தி - வைத்துக்கொண்டு, எந்தையே - என்னுடைய தமப்பனே, என்றன்குலம் - எங்கள்குலத்துக்கு, பெருஞ்சுடரே - உஜ்வலமான விளக்கானவனே, எழு - எழுவகைப்பட்ட, முகில்கணத்து - மேகஸமூஹங்களினுடைய, எழில்-அழகை, கவர் - கவர்ந்த, ஏறே - ஆண்சிங்கத்தையொத்தவனே என்று ஸ்தோத்ரம்பண்ணி, உந்தை - உங்கள்தமப்பனார், யாவன் என்றுரைப்ப - யாரென்றுகேட்க; நின் - உன்னுடைய, செம்கேழ் - சிவந்தநிறமுள்ள, விரலினும் - விரலாலும், கடைக்கண்ணினும் - கடைக்கண்ணாலும், காட்ட - காண்பிக்க, நந்தன் - ஸ்ரீநந்தகோபர், பெற்றனன் - பெற்றார், நல்வினையில்லா நங்கள் - பாக்யஹீனையான வென்னுடைய, கோன்-பர்த்தாவான, வசுதேவன்-ஸ்ரீவஸுதேவர், பெற்றிலன் - பெறாரில்லையென்கிறாள்.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (முந்தைநன்முறை அன்புடைமகளிர்) தாய்மார், அவர்களுடைய தாய்மார், பாட்டிமாரெல்லாரும். (முறைமுறைதந்தங்குறங்கிடையிருத்தி) அவ்வோஅடைவுகளிலே

குறங்குகளிலே வைத்துக்கொண்டு. (எந்தையேயென்றன் குல ப்பெருஞ்சுடரே எழுமுகில் கணத்தெழில்கவரேறே) என்றன்தமப் பனே! எங்கள்குலத்துக்கு விளக்கானவனே! ஏழுவகைப்பட்ட மேகஸமூஹங்களினுடைய அழகைக்கவர்ந்த ஸிம்ஹம்போலேயிரு க்கிறவனே. (உந்தையாவனென்றுரைப்ப) இப்படி ஸ்தோத்ரங்க ளைப் பண்ணி உங்கள் தமப்பனார் ஆரென்று கேட்க. (நின்செங் கேழ் விரலினுங் கடைக்கண்ணினுங் காட்ட நந்தன்பெற்றனன்)சிவ ந்தவிரலாலும் கண்ணாலுங் காட்ட ஸ்ரீநந்தகோபர்பெற்றார். (நல்வி னையில்லாநங்கள்கோன் வசுதேவன்பெற்றிலனே) பாக்யஹீநையான வென்னைக் கைப்பிடிக்கையாலே ஸ்ரீவஸுதேவரும் இழந்தாரே. (௩)

† களிநிலாவெழில்மதிபுரைமுகமுங்கண்ணனே திண்கைமார்வுந் திண்டோளும், தளிர்மலர்க்கருங்குழற்பிறையதுவுந்தடங்கொள்தா மரைக்கண்களும்பொலிந்த, இளமையின்பத்தையின்றென்றன்கண் ணாற்பருகுவேற்கவள்தாயெனநினைந்த, வளவில்பிள்ளைமையின்பத் தையிழந்தபாவியேனெனதாவிநில்லாதே. (௪)

ப.உ.—கண்ணனை - கண்ணனேசொல்லுகிற, களி - ஆஹ்லாதகரமான, நிலா - நிலாவையுடைத்தான, எழில்மதிபுரை - பூர்ணசந்த்ரனையொத்த, முகமும் - திருமுகமும், திண்மை - திண்ணியதான, கையும் - திருக்கைகளும், மார்வும் - திருமார்பும், தோளும் - திருத்தோள்களும், தளிர் - தளிரையும், மலர் - மலரையுமுடைத்தாய், கரு - கறுத்த, குழல் - திருக்குழலின்கீழ், பிறையதுவும் - மூன்றாம்பிறையையொத்த திருநெற்றியும், தடங்கொள் - விசாலமாய், தாமரை - தாமரையிதழ்போன்ற, கண்களும் - திருக்கண்களுமாய்க்கொண்டு, பொலிந்த - விளங்குகிற, க்ருஷ்ணனுடைய, இளமையின்பத்தை - யௌவநாவஸ்தையினழகை, இன்று - இப்போது, என்றன் - என்னுடைய, கண்ணால் - கண்களாலே, பருகுவேற்கு - அநுபவிக்கிறவெனக்கு, இவள் தாயெனநினைந்த அவ்வளவில் - தாயாரையொழிய வேறொருத்தரையறியாத தசையிலே, பிள்ளைமையின்பத்தை - இப்பிள்ளைப்பருவத்தின ஸுகத்தை, இழந்த - இழந்துவிட்ட, பாவியேனனது - மஹாபாபியான வென்னுடைய, ஆவி - ப்ராணனானது, நில்லாது - தரியாதென்கிறாள்.

வ்யா.—நாலாம்பாட்டு. (களிநிலாவெழில் மதிபுரைமுகமும்) செறிந்தநிலாவையுடைய பூர்ணசந்த்ரனைப்போலேயிருக்கிறதிருமுக மும். (கண்ணனே திண்கை மார்வுந்திண்டோளும்) க்ர்ஷ்ணனே சொல்லுகிற விலக்ஷணமான திண்ணிதாயிருக்கிற திருக்கையுந் திரு மார்வும் திருத்தோளும். (தளிர்மலர்க்கருங்குழல்பிறையதுவும்)தளி ரையும் மலரையுமுடைத்தாய் இருண்டிருக்கிற திருக்குழலின் கீழே உந்நேயமான பிறைபோலே விளங்குகிற திருநெற்றியும். (தடங் கொள்தாமரைக்கண்களும்) ஒருதாமரைப்பூவே தடாகமெல்லாம் விழுங்கும்படி அலர்ந்தாப்போலே, திருமேனியெல்லாம் பரப்புமா றும்படி யலர்ந்த திருக்கண்களும். (பொலிந்தஇளமையின் பத்தை

† "தளிநிலா" என்று பாடீகம் காண்கிறது.

இன்றென்றன் கண்ணால்பருகுவேற்கு) இவ்வவயவஶோபைகளால் விளங்கா நின்றுள்ள யௌவநாவஸ்தையி லழகை என்கண்ணாலே அநுபவிக்கிறவெனக்கு. (இவள்தாயெனநினைந்தவளவில் பிள்ளைமை இன்பத்தை யிழந்தபாவியேன்) தாயொருத்தியையு மல்லது வேறொருத்தியையு மறியாத அதிஶைஶவமாயிருக்கிற பருவத்தையநுபவிக்கப்பெறாமையாலே, இப்போது கிட்டியநுபவிக்கச் செய்தேயும் இழவே தலையெடுக்கும்படியான மஹாபாபத்தைப் பண்ணினேன். (எனதாவிநில்லாதே) என்ப்ராணந் தரிக்கிறதில்லை. ... (௪)

மருவுநின்திருநெற்றியில்சுட்டியசைதரமணிவாயிடைமுத்தம்,
தருதலுமுன்றன் தாதையைப்போலும்வடிவு கண்டுகொண்டுள்ள
முள்குளிர,விரலைச்செஞ்சிறுவாயிடைச்சேர்த்துவெகுளியாய்நின்று
ரைக்குமவ்வுரையும்,திருவிலேனொன்றும்பெற்றிலேன்;எல்லாம்தெய்
வநங்கையசோதைபெற்றாளே. (௫)

ப-ரை.—நின் திருநெற்றியில்மருவ - உன் திருநெற்றியில் பிறந்தாப்போலிருக்கிற, சுட்டி - திருச்சுட்டியானது, அசைதர - அசையும்படி, மணி - அழகிய, வாயிடை முத்தம்தருதலும் - வாயில் முத்தங்கொடுக்கையும், உன்றன்தாதையைப்போலும் - உன்தமப்பனைப்போலே, வடிவு - திருவடிவழகை, கண்டுகொண்டு - கண்டு, உள்ளம் - மநஸ்ஸானது, உள்குளிர - உள்ளேகுளிரும்படி, செம் - சிவந்த, சிறு - குவிந்திருந்துள்ள, வாயிடை - திருப்பவளத்திலே, விரலை - திருவிரற்களை, சேர்த்து—, வெகுளியாய்நின்று - சீற்றத்தோடேநின்று, உரைக்கும் - சொல்லுகிற, அவ்வுரையும் - மழலைச்சொற்களுமாகிய லீலைகளில், ஒன்றும் - ஒன்றையும், திருவிலேன் - பாக்யஹீநையான நான், பெற்றிலேன் - அநுபவிக்கப் பெறவில்லை; தெய்வநங்கை - தேவஸ்த்ரீக்கு ஸத்ருஶையான, யசோதை - யசோதைப்பிராட்டியானவள், எல்லாம் - அவனுடைய பாலசேஷ்டிதங்களை யெல்லாம், பெற்றாள - அநுபவிக்கப்பெற்றாளென்கிறாள்.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (மருவுநின்திருநெற்றியில் சுட்டி அசைதர) திருநெற்றியிலே கூடப்பிறந்தாப்போலேயிருக்கும் திருச்சுட்டியானது அசையும்படி. (மணிவாயிடைமுத்தந்தருதலும்) அழகியவாயில் முத்தம். அதரமுத்தங்கொடுத்தாலும். (உன்றன் தாதையைப்போலும்) உன்தமப்பனைப்போலே. (வடிவுகண்டுகொண்டுள்ளமுள்குளிர) வடிவழகைக்கண்டு நெஞ்சமானதுகுளிர. (விரலைச்செஞ்சிறுவாயிடைச்சேர்த்து வெகுளியாய் நின்றுரைக்குமவ்வுரையும்) சிவந்துகுவிந்திருந்துள்ளதிருப்பவளத்திலே திருவிரலைச்சேர்த்துச் சீற்றத்தோடேநின்று சொல்லுகிற மழலைச்சொல்களும். (திருவிலேனித்யாதி) பால்யாவஸ்தையில் அநுபவங்களை யநுபவிக்க பாக்யஹீநையானநான்இழந்தேன். இழக்கைக்கு நானொருத்தி புண்டானாப்போலே அநுபவிக்கைக்கு இட்டுப்பிறந்த யசோதைப்பிராட்டி எல்லாம் பெற்றாளிறே. ... ... ...(௫)

தண்ணந்தாமரைக்கண்ணனே கண்ணுதவழ்ந்தெழுந்து தளர்ந்த
தோர் நடையால், மண்ணிற்செம்பொடி யாடிவந்தென்றன்மார்பில்
மன்னிடப்பெற்றிலேனந்தோ; வண்ணச்செஞ்சிறுகைவிரலனைத்தும்
வாரிவாய்க்கொண்ட வடிசிலின்மிச்சில், உண்ணப்பெற்றிலேன!
ஓ! கொடுவினையேன்; என்னையென்செய்யப்பெற்றதெம்மோயே. (சு)

ப-ரை.—தண் - குளிர்ந்த, அம் - அழகிதான, தாமரைக்கண்ணனே - தாமரைப்பூப்போலே அலர்ந்த திருக்கண்களையுடையனனே, கண்ணு!- க்ர்ஷ்ணனே, தவழ்ந்து-தவழ்ந்துகொண்டு, எழுந்து - எழுந்திருந்து, தளர்ந்ததோர் நடையால் - தளர்நடையாலே, செம்மண்ணின் பொடி - சிவந்தபுழுதியிலே, ஆடி - விளையாடி, வந்து - அக்கோலத்தோடேவந்து, என்றன்மார்பில்-என்னுடையமார்பிலே, மன்னிட - கட்டிக்கொண்டுகிடக்க, பெற்றிலேன் - பெறவில்லையே, அந்தோ - ஐயோ!; வண்ணம் - அழகிதாய், செம் - சிவந்த, சிறு-சிறிய, கைவிரலனைத்தும் - கையில் ஐந்துவிரலாலும், வாரி—, வாய்க்கொண்ட-அமுதுசெய்த, அடிசிலின்மிச்சில்-ப்ரஸாதசேஷத்தை, உண்ணப்பெற்றிலேன்-உண்ணப்பெறாத, ஓ! கொடுவினையேன்-மஹாபாபியான, என்னை—, எம்மோய்-என் தாயாரானவள், என்செய்ய - ஏதுக்காக, பெற்றது - பெற்றாளென்கிறாள்.

வ்யா.—ஆறாம்பாட்டு. (தண்ணந்தாமரைக்கண்ணனே) குளிர்ந்து அழகிதான தாமரைப்பூப்போலே அலர்ந்த திருக்கண்களையுடைய க்ர்ஷ்ணனே. (தவழ்ந்தெழுந்து தளர்ந்ததோர்நடையால்) தவழ்ந்தெழுந்திருந்து நடக்கப்புகுவது தள்ளம்பாறுவதான தளர்நடையாலே. (மண்ணிற்செம்பொடியித்யாதி) நிலப்பண்பாலே சிவந்த புழுதியை யாடிவந்து அக்கோலத்தோடே என்மார்விலே வந்து கட்டிக்கொண்டுகிடக்கப்பெற்றிலேன். (வண்ணச்செஞ்சிறு இத்யாதி) அழகிதாய்ச் சிவந்த திருமார்வி லனைத்தாலும் வாரியமுதுசெய்த ஸேஷத்தை யுண்ணப்பெறாத மஹாபாபத்தைப் பண்ணினேன். (என்னையென்செய்யப்பெற்றதெம்மோயே) ராஜமஹிஷியாய்,பிள்ளைகள் அளைந்த எச்சிலுண்ணுமைக்கோஎங்கள்தாயாரென்னைப் பெற்றது. "அமுதினுமாற்றவினிதேதமக்கள் சிறுகையளாவியகூழ்" "மக்கள் மெய்தீண்ட லுடற்கின்பம் மற்றவர்தம்சொற்கேட்ட லின்பஞ்செவிக்கு." .. ... .. ... சு

குழகனே! என்றன் கோமளப்பிள்ளாய்! கோவிந்தா! என்குடங்
கையில்மன்னி, ஒழுகுபேரெழி லிளஞ்சிறுதளிர்போ லொருகையா
லொருமுலைமுகம்நெருடா, மழலைமென்னகையிடையிடையருளா
வாயிலேமுலையிருக்கவென்முகத்தே, எழில்கொள்நின்திருக்கண்ணி
ணைநோக்கந் தன்னையுமிழந்தே னிழந்தேனே. (எ)

ப-ரை.—குழகனே-எல்லாரோடும்கலந்திருப்பவனாய்,என்கோமளப்பிள்ளாய்-ஸௌகுமார்யத்தையுடையஎன்மகனாய், கோவிந்தா-கோஸம்ருத்தியையுடை

யவனே, என்குடங்கையில் - என் உள்ளங்கையிலே, மன்னி - இருந்து, பேரொழில் - அழகுவெள்ளம், ஒழுகு - பரந்தோடும்படியான, இளம்சிறு - மிகவும் இளையதான, தளிர்போல் - தளிரையொத்த, ஒருகையால் - ஒரு திருக்கையாலே, ஒருமுலைமுகம் - ஒருமுலைக்கண்ணை, நெருடா - நெருடிக்கொண்டு, வாயிலேமுலையிருக்க - வாயிலே முலையிருக்கச்செய்தே, முலைசுரக்கும்படியாக, என்முகத்து - என் முகத்திலே, இடையிடை - இடையிடையே, மழலைமென்னகை அருளா - மழலைச்சிரிப்பாகச் சிரித்து, எழில்கொள் - அழகிய, நின் - உன்னுடைய, திருக்கண்ணிணை நோக்கந்தன்னையும் - திருக்கண்களால் பார்க்கிற பார்வையையும், அநுபவிக்கப்பெறாமல், இழந்தேன் - பெற்றவன்றே போகவிட்ட நான், இழந்தேன் - இப்போதும் இழந்தேனென்கிறாள்.

வ்யா.—ஏழாம்பாட்டு. (குழகனேயென்றன்கோமளப்பிள்ளாய்) லோகயாத்ரையிலே அந்யபரையாய்த் தனக்குமுகங்கொடுத்திருந்தால்லோகயாத்ரையைக் கைவிட்டு உன்னையே பார்க்கவல்லேனும்படி கலக்கவல்லையாய்த்து. காணப்பெறாதஸௌகுமார்யத்தை யுடையவனே. (கோவிந்தாவென்குடங்கையில்மன்னி) கோஸம்ரக்ஷணத்தையுடையவனே! என்கையிலே யிருந்து. (ஒழுகுபேரொழிலிளஞ்சிறுதளிர்போல் ஒருகையா லொருமுலைமுகநெருடா) அழகுவெள்ளம்பரந்தோடும்படியான தளிர்போலே யிருக்கிற ஒருதிருக்கையாலே இவள் இரங்கி முலைகொடுக்கும்படி ஒருமுலைக்கண்ணை நெருடிக்கொண்டு. (மழலைமென்னகை யிடையிடையருளா வாயிலேமுலையிருக்கவென்முகத்தே) வாயிலே முலையிருக்கச்செய்தே முலைசுரக்கும்படியாகத் தன்முகத்தாலே யிடையிடையே மழலைச்சிரிப்பாகச்சிரியா. (எழில்கொள்நின்திருக் கண்ணிணைநோக்கந் - தன்னையுமிழந்தேனிழந்தேனே) அதுக்கும் இரங்காரும் இரங்கும்படி அழகிய திருக்கண்களாலே பார்க்கிறபார்வையும், பெற்றவன்றே போகவிட்டதுக்குமேலே இவ்வவஸ்தையில் சேஷ்டிதங்களையு மநுபவிக்கப்பெற்றிலேன். எ

அ.—எட்டாம்பாட்டு. (முழுதுமித்யாதி) நானிழந்த இழவெல்லாம் யஸோதைப்பிராட்டி பெற்றாளென்கிறாள்.

முழுதும்வெண்ணெ யளைந்துதொட்டுண்ணும் முகிழிளஞ்சிறுத்தாமரைக்கையும், எழில்கொள்தாம்புகொண் டடிப்பதற்கெள்கு நிலையும்வெண்டயிர் தோய்ந்தசெவ்வாயும், அழுகையுமஞ்சிநோக்குமந்நோக்கு மணிகொள்செஞ்சிறுவாய்நெளிப்பதுவும், தொழுகையுமிவை கண்டவசோதை தொல்லையின்பத் திறுதிகண்டாளே. (அ)

ப-ரை.—வெண்ணெய் - வெண்ணெய்க்குடத்திலே, முழுதும் - உள்ளளவும், அளைந்து—, "மாளும்" என்று, தொட்டுஉண்ணும் - தொட்டுத்தொட்டு உண்ணுகிற, இளம்முகிழ் - இளந்தளிர்போலேமிருதுவாய், தாமரை - செந்தாமரை மலர்போன்ற, சிறுக்கையும் - சிறிய திருக்கைகளும், எழில்கொள் - அழகையுடை

த்தான, தாம்புகொண்டு - தாம்பாலே, அடிப்பதற்கு - அடிக்க, எள்குநிலேயும்-அதுக்குப் பையாந்துநிற்கும் நிலேயும், வெண்தயிர்தோய்ந்த - வெளுத்த தயிர் பூசிய, செவ்வாயும் - சிவந்த திருப்பவளமும், அழுகையும்—, அஞ்சிநோக்கும்-பயந்து பார்க்கிற, அந்நோக்கும் - அந்தப்பார்வையும், அணிகொள் - அழகிய, செஞ்சிறுவாய் - சிவந்த சிறியதிருப்பவளத்தை, நெளிப்பதுவும் - நெளிக்குமதையும், தொழுகையுமிவை - அஞ்சலிபண்ணுகையுமாகிற இவைகளை, கண்ட-அநுபவித்த, அசோதை - யசோதைப்பிராட்டியானவள், தொல்லை - அநாதிஸித்தமான, இன்பத்து - பேரின்பத்தினுடைய, இறுதிகண்டாள் - முடிவை யநுபவித்தாளென்கிறுள்.

வ்யா.—(முழுதும்வெண்ணெயளைந்து)வெண்ணெயிலுண்டான ஆதராதிஶயத்தாலே திருக்கண்களை வெண்ணெய்க்குடத்திலேயிட்டு அளேயுமாய்த்து.(தொட்டுஉண்ணும்)அதிசாபலத்தாலே ''மாளும்'' என்று ''விரலொடுவாய்தோய்ந்த'' என்னுமாப்போலே தொட்டுண்ணுமாய்த்து. (முகிழிளஞ்சிறுத்தாமரைக்கையும்) இளந்தளிர் போலேயும் நிறத்துக்கு, விகாஸம் செவ்விக்குத் தாமரைப்பூப்போலே யிருக்கிற திருக்கைகளும். (எழில்கொள்தாம்பு)ஸ்பர்ஶிக்கைக்கு ஆசைப்பட்டிருக்கும் திருமேனியை ஸ்பர்ஶித்ததிறே யென்று''எழில்கொள்தாம்பு'' என்கிறுர். ராஜஜந்மம்வேண்டா, அசேதநமாகவமையும் அங்குத்தை ஸ்பர்ஶம்பெறில் என்றிருக்குமவரிறே. (கொண்டடிப்பதற்கு எள்குநிலேயும்) இவர் அங்குத்தை ஸ்பர்ஶத்தை நினைத்து ''எழில்கொள்தாம்பு'' என்றுர்; ஆகிலும் கைக்கெட்டிற்றென்றையிட்டு அவள் அடிக்க; அதுக்கு ஈடுபட்டுப் பையாந்துநிற்கும் நிலேயும். (வெண்தயிர்தோய்ந்தசெவ்வாயும்) ''தயிர்களவுகண்டாய்'' என்று அடிக்கப் புக்கவாறே இல்லை செய்கைக்காக முகத்திலே பூசிக்கொள்ளுமே. வெளுத்ததயிரும் சிவந்த திருப்பவளமுமான பரபாகமிருக்கிறபடி. (அழுகையும்) ''இல்லை'' என்றிருக்கச்செய்தே களவை நாடுவதே நம்மழுகையும்; அழப்புக்கவாறே ''வாய்வாய்'' என்னுமிறே; அத்தாலேபயப்பட்டு அச்சமெல்லாம் தன்னோக்கிலே தோற்றும்படி பார்த்துக்கொடுநிற்கும் நிலேயும்.(அணிகொள் செஞ்சிறுவாய்நெளிப்பதுவும்)பின்னேயும் அழாதிருக்கவுமாட்டான், அழவும்மாட்டான், அழகியதிருப்பவளத்தை நெளிக்குமித்தனையிறே. (தொழுகையும்) போக்கற்றுர் செய்யும்செயலிறே. ஸாபராதராளுர்க்கு அபராதம்பொறுக்குமது அஞ்சலியென்னுமிடம் தானறிந்திருக்குமதாகையாலே அஞ்சலியைப் பண்ணுமாய்த்து. (இவைகண்டவசோதை) இவற்றை யிங்கே ஸாக்ஷாத்கரிக்கக்கண்ட வசோதைப்பிராட்டி. (தொல்லையின்பத்திறுதிகண்டாளே) பரமபதத்தில் நிரவதியான அநுபவத்தைஸாவதியாக்கினவளிறே, அங்கேசென்று எல்லாருந்தொழ இருக்குமவன் தான் தொழுகையாலே அபரிச்சிந்நமானவநுபவம் பரிச்சிந்நமாய்த்திறே. ... ... ... அ

குன்றினாற்குடை கவித்ததுங்கோலக் குரவைகோத்ததுங்குட மாட்டும், கன்றினால்விள வெறிந்ததுங்காலாற் காளியன்றலை மிதித்ததுமுதலா, வென்றிசேர்பிள்ளை நல்விளையாட்ட மனைத்திலுமங் கென் னுள்ளமுள்குளிர, ஒன்றுங்கண்டிடப் பெற்றிலேனடியேன் காணுமாறினி யுண்டெனிலருளே. (௯)

ப-ரை.—இந்த்ரன்பெய்வித்த கல்வர்ஷத்தைத் தடுக்கைக்காக, குன்றினால்-கோவர்த்தனபர்வதத்தை, குடை-குடையாக, கவித்ததும் - தரித்துநின்றதும், கோலம் - அழகிய, குரவைகோத்ததும் - குரவைக்கூத்தாடினதும், குடமாட்டும் - குடக்கூத்தாடினதும், கன்றினால் - தேநுகாஸுரனாகிற கன்றாலே, விளவு - கபித்தாஸுரனை, எறிந்ததும - எறிந்துமுறித்ததும், காலால் - திருவடிகளாலே, காளியன் - காளியனுடைய, தலை - தலையை, மிதித்ததுமுதலா - மிதித்ததுமுதலாக; வென்றி - வீரப்பாட்டுக்கும், பிள்ளை-மௌக்த்யத்துக்கும், சேர்-சேர்ந்திருக்கிற, நல் - அதிமநோஹரமான, விளையாட்டனைத்திலும் - எல்லாவிளையாட்டுகளுள்ளும், என்னுள்ளம் - என்மநஸ்ஸானது, உள்குளிர - உள்ளேகுளிரும்படி, அடியேன் - இவைகாண்கையே ப்ரயோஜநமாயிருக்கிற நான், ஒன்றும் - இந்த சேஷ்டிதங்களில் ஒன்றையும், கண்டிடப்பெற்றிலேன் - காணப்பெறவில்லை; இனி-இப்போது, காணுமாறு-நான் இவைகளைக் காணும்வழி, உண்டெனில் - உண்டானால், அருள் - க்ருபைசெய்தருளவேணும்.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (குன்றினால் குடைகவித்ததும்) இடையரும் பசுக்களும் தொலையும்படியாக இந்த்ரன் கல்வர்ஷம் வர்ஷித்தபடியாலே மலையையெடுத்துக் குடையாகதரித்ததும். (கோலக்குரவைகோத்ததும்) தர்ஸநீயமான குரவைக்கூத்திலே கோபிமாரோடொக்கத் தன்னையுங் கோத்ததும். (குடமாட்டும் கன்றினால் விளவெறிந்ததும்) ஒருவன் கன்றாய் ஒருவன் விளாவாய்வந்த இருவரையும் சேரமுடித்ததுவும். (காலால்காளியன்றலை மிதித்ததுமுதலா) நான் ஆசைப்பட்டுப் பெறாததிருவடிகளைக்கொண்டு ஆஸுரப்ரக்ருதியான காளியன்றலையிலே மிதித்ததுமுதலாக. (வென்றிசேர் பிள்ளை நல்விளையாட்டம்) வீரப்பாட்டுக்கும் மௌக்த்யத்துக்கும் சேர்ந்திருக்கிற அதிமநோஹரமான. (அனைத்திலும் அங்கென்னுள்ள முள்குளிரவொன்றுங் கண்டிடப்பெற்றிலே னடியேன்) இவைகாண்கையே ப்ரயோஜநமா யிருக்கிறநான் ஒன்றுங் காணப்பெற்றிலேன். (காணுமாறினியுண்டெனிலருளே) நீ நினைத்தக்கால் செய்யவொண்ணாததில்லை, நான் இவைகாணும்படி யருளவேணும். ௯.

வஞ்சமேவியநெஞ்சுடைப்பேய்ச்சி வரண்டுநார்நரம்பெழக்கரிந்துக்க,நஞ்சமார்தருசுழிமுலையந்தோ சுவைத்துநீயருள்செய்துவளர்ந்தாய்; கஞ்சனுள்கவர்கருமுகிலெந்தாய்! கடைப்பட்டேன்வெறிதே முலைசுமந்து, தஞ்சமேலொன்றிலேன்; நொந்திருந்தேன்; தக்கதே நல்லதாயைப்பெற்றாயே. (௧௦)

ப-ரை.—வஞ்சம் - வஞ்சநத்திலே, மேவிய - பொருந்தின, நெஞ்சுடை-மநஸ்ஸையுடையளான, பேய்ச்சி - பூதனையுடைய, மாம்ஸமும்உள்ளுண்டான உதிரமும், எழ - கொழித்துக்கொண்டுபுறப்படவும், சேஷித்தவுடம்பு, நார்நரம்பு - நாரும் நரம்பும் தோலுமாம்படி, கரிந்து - கருகி, உக்க-உதிரும்படியாக. சுழி - தன்னிலே அகப்படுத்தவற்றாய், ஆர்தரு - மிகுந்த, நஞ்சம் - விஷத்தை யுடைத்தான, முலை - முலைப்பாலை, நீ—, சுவைத்து அருள்செய்து-புஜித்தருளி, வளர்ந்தாய்-அத்தையே தாரகமாகக்கொண்டு வளர்ந்தவனாய், கஞ்சன்-கம்ஸனுடைய, நாள் - ஆயுஸ்ஸை, கவர் - அபஹரித்த, கரு - கறுத்த, முகில்மேகத்தையொத்து, எந்தாய் - என்னை யெழுதிக்கொண்டவனே, முலை - முலையை, வெறிதே-வ்யர்த்தமாக,சுமந்து—, கடைப்பட்டேன்-தண்ணியாரிலும் தாழ்ந்தவளாயிராநின்றேன்; தஞ்சம்ஒன்று - வேறோர்தாரகம், இலேன் - இல்லாதவளாகையாலே, உய்ந்திருந்தேன் - ப்ராணனைவருந்தி தரித்துக்கொண்டிருந்தேன்; உனக்கு முலைப்பால் அபேக்ஷிதமானபோது, தக்கது- உனக்குத்தகுதியான, நல்லதாயை - நல்லதாயாரை, பெற்றாய் - பெற்றாயென்கிறாள்.

வ்யா.—பத்தாம்பாட்டு. (வஞ்சமேவியநெஞ்சுடைப்பேய்ச்சி) இவனைக்கண்டால் செவ்வியராக இருக்கவிறே கடவது, கண்டு வைத்து வஞ்சநத்திலே பொருந்தினபூதனை. (வாண்டுநார்நரம்பெழக் கரிந்துக்க) மாம்ஸமும்உள்ளுண்டானஉதிரமும் முலைப்பாலோடே கொழித்துக்கொண்டு புறப்பட, ஶேஷித்தவுடம்பு நார்நரம்பும் தோலுமாம்படி கரிந்துக்க. (நஞ்சமார்தருசுழிமுலையந்தோ சுவைத்து நீயருள்செய்துவளர்ந்தாய்) கிடந்த ஆஶ்ரயத்தையு மிழக்கவற்றாய் மிக்க நஞ்சையுடைத்தாய் கோபத்தையு முடைத்தாயிருக்கிற முலையாலேதாரகமாகவுண்டருளிவளர்ந்தாய்.(கஞ்சன்நாள்கவர்கரு முகிலெந்தாய்) கம்ஸனுடைய ஆயுஸ்ஸை அபஹரித்து அத்தாலே யேறின புகரையுடைய வடிவையுடையாய், அச்செயலாலும் வடிவழகாலும் என்னை யெழுதிக்கொண்டவனே. (கடைப்பட்டேன்வெறிதேமுலைசுமந்து) முலைநெறித்தபோது உண்பாரொருபிள்ளையைப் பெற்றுவைத்துப் பெறாதே வ்யர்த்தமாயிருக்கையாலே எத்தனையேலும்தண்ணியாரிலும் தாழ்ந்தேன். (தஞ்சமேலொன்றிலேன் உய்ந்திருந்தேன்) வேறுதாரக மில்லாமையாலே ப்ராணங்களை வருந்தி தரித்திருந்தேன். (தக்கதே நல்ல தாயைப்பெற்றாயே) முலைப்பால் அபேக்ஷிதமானபோது உனக்கு நல்ல தாயைப்பெற்றாயே. க0

மல்லைமாநகர்க் கிறையவன்றன்னை வான்செலுத்தி வந்தீங்கணமாயத், தெல்லையில்பிள்ளைசெய்வனகாணாத் தெய்வத்தேவகிபுலம்பியபுலம்பல், கொல்லிகாவலன்மாலடிமுடிமேற் கோலமாங்குலசேகரன்சொன்ன, நல்லிசைத்தமிழ்மாலைவல்லார்கள் நண்ணுவாரொல்லை நாரணனுலகே. (கக)

ப - ரை.—மல்லை - மிக்கஸம்பத்தையுடைய, மா - ச்லாக்யமான, நகர்க்கு - ஸ்ரீமதுரைக்கு, இறையவன்றன்னை - ராஜாவான கம்ஸனை, வான் - வீரஸ்வர்க்கத்திலே, செலுத்தி- அனுப்பிவிட்டு, ஈங்கனம்வந்து-திருவாய்ப்பாடியிலே வந்து கிட்டினவனாய், எல்லையில்-அளவில்லாத, மாயத்து - ஆச்சரியச்செய்கையை யுடையவனான க்ர்ஷ்ணனுடைய, பிள்ளைசெய்வன - பாலசேஷ்டிதங்களை, காணா - காணாமையாலே, தெய்வம் - இவனைப் பிள்ளையாகப் பெறுகைக்கீடான பாக்யத்தையுடைய, தேவகி - தேவகிப்பிராட்டி, புலம்பியபுலம்பல் - புலம்பிய பாசுரத்தை; கொல்லிகாவலன் - கொல்லியென்கிற படைவீட்டுக்கு நிர்வாஹகராய்,கோலமாம்-ஸர்வேச்வரன் திருவடிகளைத் தம்முடையதிருமுடிக்கு அலங்காரமாகவுடையரான,குலசேகரன்-ஸ்ரீ குலசேகரப்பெருமாள், சொன்ன-அருளிச்செய்த, நல் - அழகிய, இசை - இசையோடேகூடின, தமிழ்மாலைவல்லார்கள் - தமிழ்த்தொடையை வல்லவர்கள், நாரணன்- ஸர்வஸ்மாத்பரனான நாராயணனுடைய, உலகு - பரமபதத்தை, நண்ணுவார் - கிட்டப்பெறுவர்கள்.

வ்யா.—நிகமத்தில். (மல்லைமாநகர்க் கிறையவன்றன்னை) மிக்க ஸம்பத்தையுடைய ஸ்ரீமதுரைக்கு நிர்வாஹகனான கம்ஸனைத் தான் கைதொட்டு முடிக்கையாலே வீரஸ்வர்க்கத்திலேபோகட்டு. (வந்தீங்கனமாயத் தித்யாதி) கம்ஸவதம்பண்ணி இங்கேவந்து கிட்டின ஆஸ்சர்ய சேஷ்டிதங்களுக்கு அவதியின்றியிலே யிருக்கிற க்ர்ஷ்ணனுடைய பாலசேஷ்டிதங்கள் காணாமையாலே. (தெய்வத்தேவகி புலம்பிய புலம்பல்) இவன் சேஷ்டிதங்களை யநுபவிக்கப்பெறாத இழவையுமுடையளாய் இவனைப் பிள்ளையாகப் பெறுகைக்கீடான பாக்யத்தைப் பண்ணின தேவகியார் புலம்பிய பாசுரத்தை, "கொல்லி" என்கிற படைவீட்டுக்கு நிர்வாஹகரானவர். (மாலடிமுடிமேல் கோலமாம்குலசேகரன்) ஸர்வேஶ்வரன்திருவடிகளைத் தமக்கு முடிமேல் மாலையாகவுடையபெருமான். (சொன்னநல்லிசைத்தமிழ்மாலைவல்லார்கள்) அழகிய இசையோடேகூடின தமிழ்த்தொடை வல்லவர்கள். (நண்ணுவாரொல்லை நாரணனுலகே) இங்கேயிருந்து அவதாரத்திலேகதேஶத்தை யநுபவிக்கஆசைப்பட்டு அதுகிடையாதே யிருந்து புலம்பாதே உபயவிபூதிநாயகனைப் பரமபதத்திலே நித்யாநுபவம் பண்ணப்பெறுவர்கள். ... ... கக

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

———:0:———

ஆலை வடி முந்தை கனி மருவு தண்ணம் குழகன் முழுது குன்று வஞ்சம் மல்லை மன்னு.

ஆ திருமொழி - எ - இ - பாட்டு - எக.

———

# எட்டாந்திருமொழி - மன்னுபுகழ் - ப்ரவேசம்

அ.—தேவகியாரிழந்தஇழவு மாத்ரமேயோ, ஸ்ரீகௌஸல்யாய்த்தான்காணப் பெற்றேனோவென்று அஸ்மத்காலத்தில் தாமிழக்கையாலே அவளநுபவத்தைத் திருக்கண்ணபுரத்திலே யநுபவிக்கிறார்.

மன்னுபுகழ்க்கௌசலைதன்மணிவயிறுவாய்த்தவனே!
தென்னிலங்கைக்கோன்முடிகள்சிந்துவித்தாய்!செம்பொன்சேர்
கன்னிநன்மாமதிள்புடைசூழ்கணபுரத்தென்கருமணியே!
என்னுடையவின்னமுதே!இராகவனே!தாலேலோ. (க)

ப.-ரை.—மன்னு-நிலைநின்ற, புகழ்-புகழையுடைய, கௌசலைதன்-ஸ்ரீகௌஸல்யாருடைய, மணி-அழகிய, வயிறு - வயிற்றிலே, வாய்த்தனே-பிள்ளையாகப்பிறந்தவனும், தென்-கட்டளைப்பட்ட, இலங்கை-லங்காநகரத்துக்கு, கோன்-அரசனுனாாவனனுடைய, முடிகள் - பத்துத்தலைகளையும், சிந்துவித்தாய்-சிதறும்படிபண்ணினவனும், செம்பொன்சேர் - செம்பொன்னால் செய்யப்பட்டதாய், கன்னி - அழிவில்லாத தான, மதிள் - மதிள்களாலே, புடை - நாற்புறமும், சூழ் - சூழப்பட்டிருக்கிற, கணபுரத்து - திருக்கண்ணபுரத்திலெழுந்தருளியிருக்குமவனும், என்கருமணியே - எனக்கு நீலமணிபோன்றவனும், என்னுடைய - எனக்கு, இன்- பரமபோக்யமான, அமுதே - அம்ர்தமானவனும், இராகவனே - ரகுவம்சத்தரசனே, தாலேலோ—.

வ்யா.—முதற்பாட்டு. (மன்னுபுகழ்க்கௌசலைதன்மணிவயிறுவாய்த்தவனே) "ஸர்வேஸ்வரனைப்பிள்ளையாகப்பெற்றாள்" என்ற நிலைநின்றபுகழையுடையஸ்ரீகௌஸல்யாருடையஅழகியவயிற்றிலே அவளுக்குப் பிள்ளையாகப்பெற்றவனே. (தென்னிலங்கைக் கோன் முடிகள் சிந்துவித்தாய்) இத்திருமொழியிறே ராமாவதாரத்தில் மிகை; ஆகையாலேஇச்சந்தை. (செம்பொன்சேர்கன்னிநன் மாமதிள் புடைசூழ்கணபுரத்தென்கருமணியே) அழிவில்லாதமதிளாலேசூழ்ந்த திருக்கண்ணபுரத்திலே எனக்கு த்ர்ஷ்டிக்கு நிர்வாஹகனாய் நிற்கிறவனே. (எனனுடைய இன்னமுதே) தேவர்களம்ர்தம்போலன்றியே எனக்கு அம்ர்தமானவனே. (இராகவனேதாலேலோ) தேவர்களுடைய அம்ர்தம் உப்புச்சாறிறே; அதன்றிறே இவருடைய அம்ர்த மிருக்கிறபடி. ... ... ... ... ... க

புண்டரீகமலரதன்மேற்புவனியெல்லாம்படைத்தவனே!
திண்டிறலாள்தாடகைதனுரமுருவச்சிலைவளைத்தாய்!
கண்டவர்தம்மநம்வழுகுங்கணபுரத்தென்கருமணியே!
எண்டிசையுமாளுடையாய்! இராகவனே! தாலேலோ. (உ)

ப.-ரை.—புண்டரீகமலரதன்மேல்-திருநாபீகமலத்திலே, புவனியெல்லாம்-லோகங்களையெல்லாம், படைத்தவனே - ஸ்ர்ஷ்டித்தவனும், திண் - திண்ணிய, திறலாள் - திறலையுடையளான, தாடகைதன் - தாடகியுடைய, உரம்-உரத்த மார்விலே, உருவ - உருவிச்செல்லும்படியாக, சிலைவளைத்தாய் - வில

வளைத்து அம்பெய்தவனாய், கண்டவர்தம்-ஸேவித்தவர்களுடைய, மநம்-நெஞ்சுகளை, வழங்கும் - தாங்கள் இசைந்து கொடுக்கும்படி, கணபுரத்து - திருக்கண்ணபுரத்திலெழுந்தருளியிருக்கிற, என்கருமணியே - எனக்கு நீலமணியையொத்தவனாய், எண்டிசையும் - எட்டுதிக்கிலுள்ளாரையும், ஆளுடையாய்-அடிமைகொண்டருளுமவனான, இராகவனே தாலேலோ—.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (புண்டரீகமித்யாதி) திருநாபீகமலத்திலே லோகமெல்லாம் ஸ்ர்ஷ்டித்தவனே. (திண்டிறலித்யாதி) ஸ்ர்ஷ்டிக்கு மதன்றியே, பயிரைச்செய்து களைபிடுங்குமாப்போலே ஆஸுரவர்க்கத்தைப் போக்கினபடி. திண்ணிய திறலையுடையளான தாடகை உரத்தை மறுபாடுருவ வில்லைவளைத்தவனே. (கண்டவர் தம்மநம் வழங்கும் கணபுரத் தென்கருமணியே) கண்டவர்கள் நெஞ்சுகளைத்தாங்களுமிசைந்து கொடுக்கும்படி திருக்கண்ணபுரத்திலே நிற்கிறவனே. (எண்டிசையுமாளுடையா யிராகவனே தாலேலோ) அவதாரத்தில் பிற்பாடரான எட்டுதிக்கி லுள்ளாரும்வந்து வாழும்படி நின்றவனே. ... ... ... ... ... உ

கொங்குமலிகருங்குழலாள்கௌசலைதன்குலமதலாய்!
தங்குபெரும்புகழ்ச்சனகன்றிருமருகா! தாசரதி!
கங்கையிலுந்தீர்த்தமலிகணபுரத்தென்கருமணியே!
எங்கள்குலத்தின்னமுதே! இராகவனே! தாலேலோ. (ங)

ப-ரை.—மலி - மிக்க, கொங்கு - பரிமளம் வீசாநின்றுள்ள, கரும்-கறுத்த, குழலாள் - கூந்தலையுடையளான, கௌசலைதன் - ஸ்ரீகௌஸலையாருடைய, குலம்-குலத்துக்கு, மதலாய்-உத்தாரகனாய், தங்கு-புகழென்றுபேர்பெற்றவையெல்லாம் தங்கும்படி, பெரு - பெரிய, புகழ் - புகழையுடைய, சநகன திருமருகா - ஸ்ரீஜநகராஜனுடைய மருமகனாய், தாசரதீ-தசரதமஹாராஜன்புத்ரனாய், கங்கையிலும் - கங்காநதியைக்காட்டிலும், தீர்த்தம்மலி - பரிசுத்தம் மிக்கிருக்கிறதடாகங்களையுடைய, கணபுரத்தென்கருமணியே—, எங்கள்குலத்து - எங்கள் ராஜவம்சத்துக்கெல்லாம், இன்அமுதே -பரமபோக்யனான, இராகவனே தாலேலோ—.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (கொங்குமலி கருங்குழலாள் கௌசலைதன்குலமதலாய்) மிக்கபரிமளத்தைப் புறப்படவிடுகிற இருண்ட குழலையுடைய ஸ்ரீகௌஸலையாருடைய குலத்துக்கு உத்தாரகனானவனே. (தங்கு பெரும்புகழ்ச் சநகன் திருமருகா) புகழென்று பிறந்தவையெல்லாம் தங்கும்படி பெரிய புகழையுடைய ஸ்ரீஜநகராஜனுக்கு மருமகனானவனே. (தாசரதி) அவனோடே ஸத்ர்ஸஸம்பந்தம் பண்ணலாம்படியான பிறப்பையுடையவனே. (கங்கையிலுந்தீர்த்தமலி கணபுரத் தென்கருமணியே) காதாசித்க ஸம்பந்தத்தால்வரும் ஸுத்தியோக மிறே கங்கைக்குள்ளது, ஸம்பந்தம் நித்யமாகையாலே அதிலும் ஸுத்திமிக்கிருக்கிற திருப்பொய்கையையுடைய திருக்

கண்ணபுரத்திலே ஸ்-லபனானவனே. (எங்கள் குலத்தின்னமுதே இராகவனே தாலேலோ) ராஜவம்ஶத்துக்காக போக்ய பூதனான வனே. ... ... ... ... ... ... (௩)

தாமரைமேலயனவனைப்படைத்தவனே! தயரதன்றன்
மாமதலாய்! மைதிலிதன்மணவாளா! வண்டினங்கள்
காமரங்களிசைபாடுங்கணபுரத்தென்கருமணியே!
ஏமருவெஞ்சிலைவலவா! இராகவனே! தாலேலோ. (௪)

ப-ரை.—தாமரைமேல் - திருநாபீகமலத்திலே, அயனவனை - ப்ரஹ்மாவை, படைத்தவனே - ஸ்ருஷ்டித்தவனாய், தயரதன்றன் - தசரதமஹாராஜாவின், மாமதலாய் - ஜ்யேஷ்டபுத்ரனாய், மைதிலிதன்மணவாளா - பிராட்டிக்கு வல்லபனாய், வண்டினங்கள் - வண்டினங்களானவை, காமரங்கள் இசை - காமரமென்கிற பண்ணை, பாடும் - பாடுகிற, கணபுரத்தென்கருமணியே—, ஏமருவு - அம்பிலே மீட்டத்தக்க, வெம் - வெவ்விய, சிலை - ஸ்ரீசார்ங்கத்தை வளைத்து அம்பெய்வதிலே, வலவா - வல்லவனான, இராகவனேதாலேலோ—.

வ்யா.—நாலாம்பாட்டு. (தாமரைமேலயனவனைப் படைத்தவனே) கீழ்ச்சொன்ன ஸ்ருஷ்டியின்றாட்டினபடி. (தயரதன்தன்மாமதலாய்) அறுபதினாயிரமாண்டு மலடுநின்றசக்ரவர்த்தியினுடைய மலடுதீரப் பிறந்தவனே. (மைதிலிதன்மணவாளா) பிள்ளைபெற்றத்தின் மேலும் பிறப்பில்வந்த ஏற்றத்துக்குமேலே, "யஸ்யஸாஜநகாத்மஜா" "யஸ்யஸாஜநகாத்மஜா" என்று பிராட்டியை உனக்கென்றிட்டுப் பிறந்த மேன்மையையுடையவனே. (வண்டினங்கள்காமரங்களிசைபாடுங்கணபுரத்தென்கருமணியே) வண்டினங்கள் "காமரம்" என்கிற பண்ணிலே இசைபாடுகிற திருக்கண்ணபுரத்திலே ஸந்நிஹிதனானவனே. (ஏமருவெஞ்சிலைவலவாஇராகவனேதாலேலோ) ஆரேனும் பிடிக்கிலும் ஏவிலே மீட்டும் ஸ்ரீசார்ங்கத்தை உன்னிளைவிலே வரும்படி செலுத்த வல்லவனே. ... ... ... ...

பாராளும்படர்செல்வம்பரதநம்பிக்கேயருளி
ஆராவன்பிளையவனோடருங்கானமடைந்தவனே!
சீராளும்வரைமார்பா! திருக்கண்ணபுரத்தரசே!
தாராரும்நீண்முடியென்றாசரதி! தாலேலோ. (௫)

ப-ரை.—பார் - பூமிப்பரப்பை, ஆளும் - ஆளக்கடவதான, படர்-பெரிய, செல்வம் - ஸம்பத்தை, நம்பி - பாரதந்த்ர்ய குணங்களால் பூர்ணனாயிருக்கிற, பரதனுக்கு - ஸ்ரீபரதாழ்வானுக்கு, அருளி - கொடுத்தருளி, "ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னிவழுவிலாவடிமைசெய்யவேண்டு நாம்" என்கிற படியே-ஸர்வதேசஸர்வகாலஸர்வாவஸ்தைகளிலும்அடிமைசெய்கையில், ஆரா அன்பு - மிக்க ஆதரமுடையரான, இளையவனோடு - இளைய பெருமாளோடே, அரும்-ஒருவராலும்ஸஞ்சரிக்கவரிதான,கானம்-தண்டகமுதலானகாடுகளிலே, அடைந்தவனே - ப்ரவேசித்தவனே, சீர்ஆளும்-வீரஸ்ரீக்கு நிவாஸஸ்தாநமாய்,

வரை - மேருமலைபோலே விசாலமாய்த்திண்ணிதான, மார்பா - திருமார்பை யுடையனும், திருக்கண்ணபுரத்தரசே - திருக்கண்ணபுரத்துக்கு நிர்வாஹக னும், நீள் - எல்லாவுலகுக்கும் தலைவனென்கைக்குக்குறிப்பாய், தார் ஆரும்- மாலையோடுகூடின, முடி - திருவபிஷேகத்தையுடையனும், என்தாசரதீ - என் சக்ரவர்த்தித்திருமகனே, தாலேலோ—.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (பாராளும்படர்செல்வம் பரதநம்பிக்கேயருளி) பூமிப்பரப்படைய ஆளக்கடவதான பெரியஸம்பத்தை, பாரதந்த்ர்ய குணங்களால் பூர்ணனாயிருக்கிற ஸ்ரீபரதாழ்வானுக்கே அருளி. (ஆராவன்பிளையவனோடருங்கானமடைந்தவனே) அவனைப்போலே நியமித்தவிடத்தில் பிரிந்திருக்கமாட்டாதே, "ஶுஶ்ரூஷமாண:" "குருஷ்வமாம்" என்னும் இளையபெருமாளோடேகூடி ஒருவராலும் இயங்கவொண்ணாத துஷ்டஸத்வ ப்ரசுரமான காட்டிலே ப்ரவேஶித்தவனே. (சீராளும்வரைமார்பா) வீரஸ்ரீக்கு நிர்வாஹகனானதுவும். (தாராரும்நீண்முடியென்தாசரதீ தாலேலோ) ஆதிராஜ்யஸூசகமானமாலையோடுகூடினமுடியையுடையசக்ரவர்த்தித் திருமகனே. ... ... .. ... ... ... ரு

சுற்றமெல்லாம்பின்றொடரத்தொல்கானமடைந்தவனே!
அற்றவர்கட்கருமருந்தே! அயோத்திநகர்க்கதிபதியே!
கற்றவர்கள்தாம்வாழுங்கணபுரத்தென்கருமணியே!
சிற்றவைதன்சொற்கொண்டசிராமா! தாலேலோ. (சு)

ப-ரை.—சுற்றமெல்லாம்- பந்துக்களெல்லாரும், பின்-பின்னே, தொடர- தொடர்ந்துஸேவித்துவர, தொல்-மநுஷ்யஸஞ்சார மில்லாமல் புதர்மூடிக்கிடக்கிற, கானமடைந்தவனே-காட்டிலே ப்ரவேசித்தவனும், அற்றவர்கட்கு-அஹங்காரமமகாரங்களற்றவர்களுக்கு, அரு-ஒருவராலும்பெறுதற்கரிய, மருந்தே- அம்ர்தமானவனும், அயோத்திநகர்க்கு - திருவயோத்யைக்கு, அதிபதியே-அதிபதியானவனும், கற்றவர்கள் தாம் - வேதாந்தங்களைக்கற்று அவன் சேஷி நாம் சேஷபூதரென்று அறிந்தவர்கள், வாழும் - நித்யவாஸம்பண்ணுகிற, கணபுரத்து - திருக்கண்ணபுரத்திலே, என்-எனக்கு அநுபவிக்கலாம்படி, கருமணியே- நீலமணிபோலே யிருப்பவனும், சிற்றவைதன் - சிறிய தாயாரான கைகேயியுடைய, சொல் - "வநவாஸஞ்செய்" என்றசொல்லை, கொண்ட - சிரஸாவஹித்துக் காட்டுக்கெழுந்தருளின, சீராமா தாலேலோ—.

வ்யா.—ஆறும்பாட்டு. (சுற்றமெல்லாம்பின்தொடரத் தொல்கானமடைந்தவனே) எல்லாரும் போனார்களோ, சிறிதிடம்போய் மீண்டதென்றன்றோசொல்லிற்றாய்த்து;—"அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" 'அஹம்ஸர்வம்கரிஷ்யாமி' என்று சொன்ன எல்லாவடிமையும் செய்யுமிளையபெருமாள் கூடப்போகையாலே எல்லாபந்துக்களும் கூடப் போனார்களாய்த்திறே" என்று எம்பெருமானா ரருளிச்செய்தருளினார். (அற்றவர்கட்கருமருந்தே); "கர்ப்பபூதாஸ் தபோதநா:" "கர்ப்ப

பூதாஸ்தபோதநா:'' என்றிருக்குமவர்களுக்கு. (அருமருந்தே) ''ம்ருத ஸஞ்ஜீவநம் ஜந்ம்யம்'' ''அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம்'' என்றிருக்கும் மருந்தானவனே. (அயோத்திநகர்க் கதிபதியே) பரமபதம்போலே அயோத்யையிறே இதுக்குப்பேர்; அப்படிப்பட்ட படைவீட்டுக்கு அதிபதியானவனே. (கற்றவர்கள்தாம்வாழுங் கணபுரத்தென்கருமணியே) கற்பது ஒருதேசத்திலே யிருந்து ஒருகாலத்திலேயாய் ப்ராப்யவஸ்துவைக் கிட்டி யநுபவிப்பது ஒரு தேசவிசேஷத்திலேயாகாமே, ப்ராப்யவஸ்து தெற்குத்திக்கிலேகாணலாம்படி திருக்கண்ணபுரத்தில் நின்றவனே. (சிற்றவைதன்சொல்கொண்ட சீராமா தாலேலோ) பெற்றதாயான நான் உம்மைப்பிரியில் தரியேனென்று ஸ்ரீகௌஸல்யார் பின்தொடரச்செய்தேயும் * மாற்றுத்தாயான கைகேசிசொல்லு மாறு ?த வநத்தேபோந்தவனே. ... ... சு

ஆலினிலைப்பாலகனாயன் றுலகமுண்டவனே!
வாலியைக்கொன்றரசிளையவாநரத்துக்களித்தவனே!
காலின்மணிகரையலைக்குங்கணபுரத்தென்கருமணியே!
ஆலிநகர்க்கதிபதியே! அயோத்திமனே! தாலேலோ. (எ)

ப - ரை.—அன்று - மஹாப்ரளயம் வந்தபோது, ஆலின் இலை - ஓராலந்தளிரிலே, பாலகனாய் - குழந்தைவடிவாய்க் கொண்டு, உலகம் - ஸகலலோகங்களையும், உண்டவனே - திருவயிற்றிலே வைத்து ரக்ஷித்தருளினவனாய், வாலியை - ராஜாவான வாலியை, கொன்று—, அரசு-வாநர ராஜ்யத்தை, இளைய வாநரத்துக்கு - ஸுக்ரீவனுக்கு, அளித்தவனே - கொடுத்தவனாய், காலின்-காற்றாலே, மணி - உள்ளுக்கிடக்கிற ரத்நங்களை, கரை - கரையிலே கொடுவந்து, அலைக்கும் - ஏறிடுகிற, கணபுரத்தென் கருமணியே—, ஆலிநகர்க் கதிபதியே - திருவாலிக்கு நிர்வாஹகனாய், அயோத்தி - திருவயோத்யைக்கு, மன்னே - அரசனானவனே, தாலேலோ—.

வ்யா.—ஏழாம்பாட்டு. (ஆலினிலைப்பாலகனா யன்றுலகமுண்டவனே) லோகத்தையெல்லாம் திருவயிற்றிலேவைத்து ஒருபவனான ஆலிலையிலே அதுதான் விஞ்சுமென்னும்படி கண்வளர்ந்தருளின அகடிதகடநா ஸாமர்த்யத்தையுடையவனே. (வாலியைக்கொன்றரசிளைய வாநரத்துக்களித்தவனே) வாலி, ஆனைத்துணையாக நீ விஜயம்பண்ணின ராவணனை, வாலிலேகட்டிவைத்தான், அவ்வாலியைக் கொன்று அவனுக்கிடைந்து பர்வதகுஹைகளிலே கிடக்கிற மஹாராஜர்க்கு வாநரராஜ்யத்தைக் கொடுத்தவனே. (காலின்மணியித்யாதி) காற்றாலே உள்ளுக்கிடக்கிற ரத்நங்களைக் கரையிலே யேறிடுமென்னுதல்; கால்வாய்களில் மணிகளைக் கொடுவந்து கரையிலே யேறிடுமென்னுதல். (ஆலிநகர்க்கதிபதியே) திருவாலிக்கு நிர்வாஹகனானவனே. வாலியைக்கொன்று ஹரிதன்னைத் துணையாகக் கொள்ளப்பெற்றதே. ... ... ... ... ... ... எ

மலையதனாலணைகட்டிமதிளிலங்கையழித்தவனே!
அலைகடலைக்கடைந்தமரர்க்கமுதருளிச்செய்தவனே!
கலைவலவர்தாம்வாழுங்கணபுரத்தென்கருமணியே!
சிலைவலவா! சேவகனே! சீராமா! தாலேலோ. (அ)

ப-ரை.—மலையதனால்-மலைகளைக்கொண்டு, அணைகட்டி-ஸேதுபந்தம்பண்ணி, மதிள் - மதிளையுடைத்தான, இலங்கை - லங்கையை, அழித்தவனே-அழித்தவனாய், அலை - அலைகளையுடைய, கடலை - திருப்பாற்கடலை, கடைந்து—, அமரர்க்கு - தேவர்களுக்கு, அமுதருளிச்செய்தவனே - அம்ருதம் கொடுத்தருளினவனாய், கலைவலவர்தாம் - ஸகலசாஸ்த்ரங்களும் கைவந்திருக்குமவர்கள், வாழும் - நித்யவாஸம்பண்ணுகிற, கணபுரத்தென்கருமணியே—, சிலைவலவா-வில்தொழிலில் வல்லவனாய், சேவகனே - ஆச்ரிதர்ஏவிற்றுச்செய்யும் ஸேவகனான, சீராமா தாலேலோ—.

வ்யா.—எட்டாம்பாட்டு. (மலையதனாலணைகட்டி மதிளிலங்கையழித்தவனே) நிலத்திலே வரமலையைக்கொண்டு அரணானமலையையணையாகக்கட்டி நீர்தானும் மிகையென்னும்படியான அரணையுடைத்தான லங்கையை மூலையடியே வழிபோக்கினவனே. (அலைகடலைக்கடைந்தமரர்க் கமுதருளிச்செய்தவனே) அகாதமான ஸமுத்ரத்தைக் கடைந்து அம்ர்தத்தை வாங்கி அஸுரர்கள்கையிலே தேவர்கள் சாவாதபடி அவர்களுக்குக்கொடுத்தவனே. (கலைவலவர்தாம் வாழும்கணபுரத்தென்கருமணியே) ஸகல வித்யாஸ்தலங்களும்கைவந்திருக்குமவர்கள் உன்னை அநுபவிக்கும் திருக்கண்ணபுரத்திலே ஸந்நிஹிதனானவனே. (சிலைவலவா) ஸ்ரீஶார்ங்கம் கைவந்திருக்குமவனே. (சேவகனித்யாதி) அதுதான் மிகையென்னும்படியான வீரப்பாட்டையுடையவனே. ... ... ... அ

தளையவிழுநறுங்குஞ்சித்தயரதன்றன்குலமதலாய்!
வளையவொருசிலையதனால்மதிளிலங்கையழித்தவனே!
களைகழுநீர்மருங்கலருங்கணபுரத்தென்கருமணியே!
இளையவர்கட்கருளுடையாய்! இராகவனே! தாலேலோ. (கூ)

ப-ரை.—தளை அவிழும்-கட்டவிழும்படியான, நறும் - நறுநாற்றம்கமழாநின்றுள்ள, குஞ்சி - மயிர்முடியையுடையனாய், தயரதன் றன்குலம்-தசரதசக்ரவர்த்திகுலத்துக்கு, மதலாய் - உத்தாரகனாய், வளைய-ப்ராஹ்மாஸ்த்ராதிகள் வாய்மடியுமதாய், ஒரு - அத்விதீயமான, சிலையதனால் - வில்லாலே, மதிள்-மும்மதிளையுடைய, இலங்கை - லங்கையை, அழித்தவனே - அழித்தவனாய், களை - களையாகப் பறித்து, மருங்கு - பக்கத்துக்கரைகளிலே போகட்ட, கழுநீர் - செங்கழுநீர் மொட்டுகளானவை, அலரும் - மலராநின்றுள்ள, கணபுரத்தென்கருமணியே—, இளையவர்கட்கருளுடையாய் - தம்பிமார் விஷயத்தில்மிக்கஅருளையுடையனாய், இராகவனே - ரகுகுலதிலகனானவனே, தாலேலோ—.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (தளையவிழுமித்யாதி) கட்டவிழும்படியான நறுநாற்றத்தை யுடைய மயிர்முடியை யுடைய

சக்ரவர்த்திகுலத்துக்கு உத்தாரகனானவனே. (வளையவொருசிலையித் யாதி) ப்ரஹ்மாஸ்த்ராதிகள் வாய்மடியுமூனை மநுஷ்யத்வத்துக்கு ஏகாந்தமான வில்லாலே அவனுடையவூனை யழியச்செய்தவனே. (களைகழுநீரித்யாதி) களையாகப்பறித்துக் கரையிலேபொகட்ட செங் கழுநீர்கள் பொகட்டவிடங்களிலேகிடந்து தன்னிலத்தில்அலருமாப் போலே செவ்விபெற்றலரும் திருக்கண்ணபுரம். (இளையவர்க ளித் யாதி) தம்பிமார்க்கு உறுப்பாகாதபோது என் ப்ராணங்களும் எனக் கு வேண்டாவென்னு மவரிறே. ... ... ... ... க

தேவரையுமசுரரையுந்திசைகளையும்படைத்தவனே!
யாவரும்வந்தடிவணங்கவரங்கநகர்த்துயின்றவனே!
காவிரிநன்னதிபாயுங்கணபுரத்தென்கருமணியே!
ஏவரிவெஞ்சிலைவலவா! இராகவனே! தாலேலோ. (கo)

ட-ரை.—தேவரையும் - தேவதைகளையும், அசுரரையும் - அவர்களுக்குப் பகைவரான அஸுரர்களையும், திசைகளையும் - திருபலக்ஷிதமான ஸகல பதார்த்தங்களையும், படைத்தவனே-ஸ்ருஷ்டித்தவனும், யாவரும் - ஸகலசேத நரும், வந்து—, அடிவணங்க-ஆச்ரயிக்கும்படிக்கிடாக, அரங்கநகர் துயின்றவ னே - கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனும், நல் - நீரேறுமேடுகளிலும் ஏறி ப்பாயும் நன்மையையுடைய, காவிரிநதி - திருக்காவேரியானது, பாயும் - எங் கும்பரவாநின்றுள்ள, கணபுரத்தென் கருமணியே—, ஏ - பாணத்திலே மூட் டக்கடவதாய், வரி - தர்சநீயமாய், வெம் - பிடித்தபிடியிலே சத்ருக்கள் மண் ணுண்ணும்படியான, சிலைவலவா - ஸ்ரீசார்ங்கத்தை உன் கருத்தின்படி நடத்த வல்லவனே, இராகவனே தாலேலோ—.

வ்யா.—பத்தாம்பாட்டு. (தேவரையு மசுரரையும் திசைகளை யும் படைத்தவனே) ஸஹஜஶத்ருக்களானதேவாஸுரர்முதலான பதார்த்தங்களையும் இவர்களுக்கு அவகாசப்ரதாநம்பண்ணும்தேச ங்களையும் ஸ்ருஷ்டித்தவனே. (யாவரும்வந்தடிவணங்க அரங்கநகர்த் துயின்றவனே) ஸ்ருஷ்டிப்ரயோஜநமெல்லாம் தன்னை ஆஶ்ரயிக்கை யிறே; இதுக்காகக் கோயிலிலேவந்து கண்வளர்ந் தருளினவனே. (காவிரிநன்னதிபாயுங் கணபுரத் தென்கருமணியே) ஒருவர் ஏற்றிப் பாய்ச்சவேண்டாதபடி தானேவந்து எங்கும்பரக்கும் காவேரியை யுடைய திருக்கண்ணபுரத்திலே ஸுலபனானவனே. (ஏவரிவெஞ்சிலை வலவா இராகவனே) ஏவிலே மூட்டக்கடவதாய் தர்ஶநீயமாய்ப் பிடித்தபிடியிலே ஶத்ருக்கள் மண்ணுண்ணும்படியான ஸ்ரீஶார்ங்க த்தை உன் கருத்திலே நடத்த வல்லவனே. ... ... கo

கன்னிநன்மாமதிள்புடைசூழ்கணபுரத்தென்காகுத்தன்
தன்னடிமேல் "தாலேலோ" என்றுரைத்ததமிழ்மாலை
கொன்னவிலும்வேல்வலவன்குடைக்குலசேகரன்சொன்ன
பன்னியநூல்பத்தும்வல்லார்பாங்காயபத்தர்களே. (கக)

ப-ரை.—கொல்நவிலும் - கொல்லுகையையே யெப்போதும்அதிர்பார்த்துக்கொண்டிருக்கிற, வேல் - வேல்யுத்தத்தில், வலவன் - ஸமர்த்தராய், குடை - வெண்கொற்றக்குடையையுடைய, குலசேகரன் - ஸ்ரீ குலசேகரப்பெருமாள்; கன்னி - அழியாததாய், நல் - அழகிதான, மாமதிள் - பெரியதிருமதிளாலே, புடை - நாற்புறமும், சூழ் - சூழப்பட்டிருப்பதான, கணபுரத்து - திருக்கண்ணபுரத்திலே நித்யஸந்நிதி பண்ணுமவனாய், என் - என்னுடைய, காகுத்தன் தன் - கருத்ஸ்த குலோத்பவனான சக்ரவர்த்தித்திருமகனுடைய, அடிமேல் - திருவடி விஷயமாக, தாலேலோவென்றுரைத்தசொன்ன - தாலாட்டாக அருளிச்செய்ததாய், பன்னிய - பரம்பின, நூல் - லக்ஷணசாஸ்த்ரங்களால்குறைவற்றதாய், தமிழ் - த்ராவிட பாஷையாய், மாலை - மாலாரூபமான, பத்தும் - இப்பத்துப்பாட்டுக்களையும், வல்லார் - அப்யஸிக்கவல்லவர்கள், பாங்காய - அவனை அநுபவிக்கைக்குப் பாங்கான, பத்தர்கள் - பக்திமான்களாகப்பெறுவர்கள்.

வ்யா.—நிகமத்தில். (கன்னிநன்மாமதிள் புடைசூழ் இத்யாதி) அழியாத பெரியதிருமதிள் சூழ்ந்த திருக்கண்ணபுரத்திலே நின்றருளின க்ர்ஷ்ணனையன்றியிலே சக்ரவர்த்தித் திருமகனையாய்த்துக் கவி பாடிற்று. (தன்னடிமே லித்யாதி) சக்ரவர்த்தித் திருமகனுடைய பால்யாவஸ்தையில் ஸ்ரீகௌஸல்யையார் சொன்ன பாசுரத்தைத் திருக்கண்ணபுரத்திலே சொன்ன தமிழ்த்தொடை. (கொன்னவிலும் வேல்வலவன் குடைக் குலசேகரன்சொன்ன) வேலைப்பிடித்த பிடியிலே எல்லாரும் "வேலின்கொடுமையே!" என்று சொல்லா நின்றவேலையும் ஐஶ்வர்ய ப்ரகாஶகமான வெண்கொற்றக் குடையையுமுடைய ஸ்ரீகுலஶேகரப்பெருமாள் அருளிச்செய்த.(பன்னிய நூல்பத்தும் வல்லார்) பரம்பி லக்ஷணத்தால் குறைவற்ற இப் பத்தும்வல்லார்கள், திருத்தாயாராயும் அடியாராயும் அநுபவிக்கப் பெறுவர்கள். ... ... ... ... ... ... கக

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

—:0:—

அடிவரவு - மன்னு புண்டரீகம் கொங்கு தாமரை பார் சுற்றம் ஆலின் மலை தனை தேவர் கன்னி வன்றாள்.

ஆ திருமொழி - அ - இ - பாட்டு - அஈ.

---

## ஒன்பதாந்திருமொழி - வன்றாளினிணை - ப்ரவேஶம்.

அ.—ஸ்ரீகௌஸல்யையார் பெற்றபேற்றை யநுபவித்தார் - கீழில் திருமொழியில்; பால்யா வஸ்தையெல்லாம் அநுபவித்து ப்ராப்த யௌவநரானவாறே அநுபவிக்கப்பெறாதே யிழந்த சக்ரவர்த்தியோ பாதியும் தமக்கு ப்ராப்தி யொத்திருக்கையாலே அநுபவிக்கப்பெறாதே யிழந்தேனென்று அவன் சொல்லுகிற பாசுரத்தாலே தம்மிழவைப் பேசுகிறார். ... ... ... ... *

வன்றாளினிணைவணங்கிவளநகரந்தொழுதேத்தமன்னனாவான்
நின்றாயையரியணைமேலிருந்தாயைநெடுங்கானம்படரப்போகு
வென்றாளெம்பிராமாவோவுனைப்பயந்தகைகேசிதன்சொற்கேட்டு
நன்றாகநானிலத்தையாள்வித்தேன்நன்மகனேயுன்னைநானே. (க)

ப-ரை.—எம் - எங்களை, இராமா - ரமிப்பிக்கவல்லவனாய், நல்-என்சொல் தவறாது நடக்குமவனான, மகனே-புத்ரனே!; வன் - வலிய, தாளினிணை - திருவடிகளை, வணங்கி - வழிப்பட்டு, வளம் - அலங்கரிக்கப்பட்டிருக்கிற, நகரம்-திருவபிஷேகத்தையிலுள்ளார், தொழுது - ஸேவித்து, ஏத்த - ஸ்தோத்ரம் பண்ணும்படி, மன்னனாவான் - பட்டாபிஷேகம்பண்ணுகைக்காக, நின்றாயை- திருக்காப்பு நாண்சாத்திநிற்கிறவனாய், அரியணைமேலிருந்தாயை - ஸிம்ஹாஸநத்திலே யிருந்தாயென்னும்படி தோற்றச்சமைந்திருக்கிற - உன்னை, நெடும் - ஒருவராலும் ப்ரவேசிக்கவரிதான, கானம்படரப்போகு என்றாள் - காட்டுவழியிலேயே போகக் கடவாயென்று சொன்னவளாய், உனைப்பயந்த - உன்னைப் பெற்ற, கைகேசிதன் - கைகேயியுடைய, சொல் - சொல்லை, நான்—,கேட்டு-கேட்டு, உன்னை—, நானிலத்தை - பூமிப் பரபபையெல்லாம், நன்றாக ஆள்வித்தேன் - அழகிதாக ஆள்வித்தேனென்று ஆர்த்தராகிறார்.

வ்யா.—முதற்பாட்டு. (வன்றாளி னிணைவணங்கி) தானும் ராஜ்யப்பரப்பையெல்லா மாண்டானாயிருக்கச்செய்தே அவ்வளவன்றியே "வண்புகழ்நாரணன் திண்கழல்" என்னுமாப்போலே ஆஶ்ரிதனை எல்லாவவஸ்தையிலும் விடேனென்னும் திருவடிகளை வழிப்பட்டு.(வளநகரந்தொழுதேத்த) திருவபிஷேகத்துக்கு அலங்கரித்திருக்கிற திருநகரியிலே அப்படியிருக்கிற திருநகரி தொழுதேத்த. (மன்னனாவான்நின்றாயை) திருவபிஷேகத்துக்கு முன்புள்ள கர்த்தவ்யங்களெல்லாந் தலைக்கட்டித்திருவபிஷேகம் பண்ணுகைக்குத் திருக்காப்புநாண்சாத்தி நிற்கிற வுன்னை. (அரியணைமேலிருந்தாயை) ஸிம்ஹாஸநத்திலே பதஸ்தனாயிருந்தா னென்னும்படி தோற்றச் சமைந்திருக்கிறவுன்னை. (நெடுங்கானம்படரபோகுமென்றாள்) இப்படி ராஜாக்களல்லாதாரும் புகமாட்டாத காட்டை "[illegible]" "தேவநேநவநம்கத்வா" என்னுமாப்போலே இவ்வூரில் நின்றும் புறப்பட்டு வழியேபோய்க் காட்டிலே புகுமதன்றியே காட்டிலேயே போம்படியாய், நெடியகாட்டிலேயிறேபோகச்சொல்லிற்று. (எம்பிராமாவோ)நினைக்கவும்சொல்லவும்காணவும்தாபம்போம்படியான உம்மையிறே போகச்சொல்லிற்று. (உனைப்பயந்தகைகேசிதன் சொல்கேட்டு) திருவபிஷேக கல்யாணவார்த்தை ஸ்ரீகௌஸல்யாரிலும் காட்டில் தனக்கு நான்சென்று சொல்லி ப்ரீதிகாணவேணுமென்னும்படி பெற்ற தாயாய்ப்போந்த கைகேயிவார்த்தை கேட்டு. (நன்றாகநானிலத்தை யாள்வித்தேன்) வஞ்சநபரையென்றறியாதே தாயென்று இவளுக்குவார்த்தை சொல்லப்புகுந்து அவள்வார்த்தையிலே யகப்பட்டு பூமிப்பரப்பையெல்லா மழகிதாக உன்னையாள்வித்

தேன். (நன்மகனே யுன்னைநானே) நான் இப்படி செய்தவிடத்தி லும் நீர் குறைகிராம்படி நின்றீர், நான் நாளும்படிசெய்தேன். க

வெவ்வாயேன்வெவ்வுரைகேட் டிருநிலத்தைவேண்டாதே வி ரைந்துவென்றி, மைவாயகளிறொழிந்து தேரொழிந்துமாவொழிந் து வநமேமேவி, நெய்வாயவேல்நெடுங்கண் நேரிழையுமிளங்கோ வும் பின்புபோக, எவ்வாறுநடந்தனையெம் மிராமாவோவெம்பெரு மா னென்செய்கேனே. (௨)

ப-ரை.—வெம்-க்ரூரமான, வாயேன் - வாக்கையுடையனானவென்னுடை ய, வெவ்வுரைகேட்டு - கடுஞ்சொற்களைக்கேட்டு, இரு - உம்மைப்பிரியில்ந்ரியா தபெருமையையுடைய, நிலத்தை - நகரஜநங்களையெல்லாம், வேண்டாது-கை விட்டும், விரைந்து-த்வரித்து; வென்றி - ஜயத்தை விளைப்பதாய், மை - அஞ்சந கிரிபோலே, ஆய - பெரியவடிவையுடைத்தான, களிறு ஒழிந்து - யானைகளை விட்டும், தேர் ஒழிந்து - தேர்களைவிட்டும், மா ஒழிந்து - குதிரைகளைவிட்டும், வநமேமேவி - காட்டிலேயே சென்று பொருந்தி, நெய்வாய - கூர்மை மழுங் காமைக்காக நெய்பூசப்பட்டிருந்துள்ள, வேல் - வேல்போலேசண்டாளைவரு த்துமதான, நெடும் - காதளவும் நீண்ட, கண் - திருக்கண்களை யுடையளாய், நேர் - திருத்தமாகப்பண்ணப்பட்ட, இழையும் - ஆபரணங்களையுடையளான பிராட்டியும், இளங்கோவும் - இளையபெருமாளும், பின்புபோக - பின்னேஸே வித்துவர, எவ்வாறு நடந்தனை - எப்படி நடந்தாய்; எம் இராமா - என்னைஸந் தோஷிப்பக்கவல்லனாய், எம்பெருமான் - எனக்கு உபகாரகனானவனே, என் செய்கேன் - நான் என்னசெய்யப்போகிறேன்.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (வெவ்வாயேன் வெவ்வுரைகேட் டு) அநலாஸ்யனான வென்னுடைய, "காட்டேறப்போம், ராஜ்யத் தைத்தவிரும்" என்ற என்வார்த்தையைக் கேட்டு. (இருநிலத்தை வேண்டாதே) "உம்மைப்பிரியில் முடிவோம்" என்று வளைப்புக்கி டக்கிற நகரஜநங்களையெல்லாம் ஒளித்து அவர்களைக் கைவிட்டு. (விரைந்து) "போகிறோம்" என்று விளம்பிப்போமாகில் "ராஜ்யத் தில் நசையாலே நின்றோமென்று கைகேயி நினைக்கும்" என்று விரைந்து. (வென்றி மைவாய களிறொழிந்து) வென்றியை விளைப்ப தாய் அஞ்சநகிரிபோலே பெரியவடிவை யுடைத்தாயிருக்கிற ஆனை யென்ன, தேரென்ன, குதிரையென்ன, இவற்றையொழிந்து. (வந மேமேவி) இவற்றையொழிந்தால் இந்ததேஶத்துக்குப் போலியா னதேஶத்திலே போய்ப்புகாதே, வநமேமேவி. (நெய்வாயவேல்நெ டுங்கண் நேரிழையுமிளங்கோவும் பின்புபோக) நீர் போய்ப் புக்கா லும் புகுகைக்குத்தகாதவர்களைக்கூடக்கொண்டு. (எவ்வாறுநடந்த னை எம்மிராமா! ஓ! எம்பெருமான்! என்செய்கேனே) கால் நடை நடந்தறியாதநீர் இவர்களையும் கூடக்கொண்டு பொல்லாத காட்டி லே போனீர், என்னுயனே நானென்செய்கேன். ... ... ௨

கொல்லணைவேல்வரிநெடுங்கட்கௌசலைதன்குலமதலாய்குனி வில்லேந்தும், மல்லணைந்தவரைத்தோளா! வல்வினையேன்மநமுரு க்கும் வகையேகற்ருய், மெல்லணைமேல்முன்துயின்ருய் இன்றினிப் போய்வியன்கான மரத்தினீழல், கல்லணைமேல்கண்டுயிலக் கற்றனை யோகாகுத்தா! கரியகோவே!. (௩)

ப-ரை.—கொல் - கொலைத்தொழிலை, அணை-மேற்கொண்டிருக்கிற, வேல்-வேல்போன்ற புகரையும், வரி - செவ்வரிக்கருவரிகளையும், நெடு - பரப்பையு முடைத்தான, கண் - கண்களையுமுடையளான, கௌசலைதன் - ஸ்ரீகௌஸலை யாருடைய, குலம் - குலத்துக்கு, மதலாய்-உத்தாரகனாய், குனி-வளைந்த, வில்-வில்லை, ஏந்தும் - எப்போதும் தரித்தபடியே யிருப்பதாய், வரை - மலையை யொத்து, மல்லணைந்த - பெரியமிடுக்கையுடைத்தான, தோளா - திருத்தோள் களையுடையவனே, ஆயுதவழகாலும் தோளழகாலும், வல்வினையேன் - மாஹா பாபியான வென்னுடைய, மநம் - மநஸ்ஸை, உருக்கும் - அழிக்கைக்கீடான, வகையே - வகைகளையே, கற்ருய் - அப்யஸித்தீர்; முன் - முற்காலமெல்லாம், மெல் - ம்ருதுவான, அணைமேல் - படுக்கையிலே, துயின்ருய் - கண்வளர்ந்தரு ளினநீர், இன்று இனி - இன்றுமுதல்மேலுள்ளகாலமெல்லாம், போய் - தண் டகாரண்யம் முதலிய காடுகளிற்சென்று, வியன் - இப்படியு மொருகாடுண் டோவென்று வெருவும்படியான, கானம் - காட்டிலே, மரத்தின் நீழல் - இலை யில்லாதமரத்தினுடைய நிழலிலே, கல் அணைமேல் - பாறையாகிற படுக்கையி லே, கண் துயில - கண்வளரும்படி, கற்றனையோ - கற்றீரோ; இச்செயல்கள், காகுத்தா-உம்முடையககுஸ்தகுலத்துக்குஞ்சேராது; கரியகோவே-உம்முடை யவடிவழகுக்கும் சேராது.

வ்யா.—மூன்ரும்பாட்டு. (கொல்லணைவேல்வரிநெடுங்கண்கௌ சலைதன்குலமதலாய்) கொலையிலேயணைந்த வேல்போலே புகரையு டைத்தாய், செவ்வரி கருவரியையுமுடைத்தாய் பரப்பையு முடைத் தான கண்ணையுடைய ஸ்ரீகௌஸலையாருடைய குலத்துக்கு உத்தா ரகனானவனே. (குனிவில்லேந்தும் மல்லணைந்த வரைத்தோளா) வீரர்கள்வில் ஒருக்கால் நாணி யிறங்கிடாமையாலே வளைந்தபடியே யிருக்குமிறே; அந்தவில்தானும் மிகையென்னும்படி, மலைபோலே பெரிய மிடுக்கையுடைய தோளையுமுடையவனே. (வல்வினையே ன்மநமுருக்கும் வகையேகற்ருய்) ஆயுதவழகாலும் தோளழகாலும் என்னெஞ்சையழிக்கவே கற்றவனே. (மெல்லணைமேல் முன்துயி ன்ருய்) அழகிய படுக்கையிலே முற்காலமெல்லாம் கண்வளர்ந்த நீர். (இன்றினிப்போய்) பலமாளிகைகளிலே பலபடுக்கைகளிலே கண் வளர்ந்த நீர் இன்ருகவினிப்போய். (வியன்கானமரத்தினீழல்) காட் டில்வர்த்திப்பார்தாங்களும் வெருவும்படி காட்டிலே இலையில்லாத மரத்தின் நிழலின்கீழே. (கல்லணைமேல்கண்துயிலக் கற்றனையோ) பாறைகளை யணையாகக் கண்வளரும்படி கற்றீரோ. (காகுத்தாகரிய கோவே) இச்செயல்கள் உம்முடைய குடிப்பிறப்புக்கும் சேராது, உம்முடைய வடிவழகுக்கும் சேராது. ... ... ... ௩

வாபோகுவாவின்னம் வந்தொருகாற்கண்டுபோ மலராள்கூந்தல், வேய்போலுமெழிற்றோளி தன்பொருட்டாவிடையோன்றன் வில்லைச்செற்றாய், மாபோகுநெடுங்கானம் வல்வினையேன்மனமுருக்கும்மகனேயின்று, நீபோகவென்னெஞ்சமிருபிளவாய்ப்போகாதே நிற்குமாறே. (௪)

ப-ரை.—வா - இங்கேவா என்றும். போகு - அங்கேபோ என்றும், இன்னம் - பின்னையும் போம்போது, வந்து—, ஒருகால் கண்டுபோ - ஒருதரம் கண்டுபோ என்றும்; மலர் - புஷ்பங்களை, ஆள் - இடைவிடாது தரித்துநிற்கிற, கூந்தல் - மயிர்முடியையும், வேய்போலும் - மூங்கில்போலே யிருக்கிற, எழில் - அழகிய, தோளி தன் பொருட்டா - தோளையுடையளான பிராட்டிநிமித்தமாக, விடையோன்றன்வில்லை - பெருமிடுக்கனான ருத்ரனுடைய வில்லை, செற்றாய் - முறித்தவனே, வல்வினையேன் - மஹாபாபத்தைப் பண்ணின வென்னுடைய, மனம் - ஹ்ருதயத்தை, உருக்கும் - நீர்ப்பண்டம்போலே யுருகப்பண்ணுகிற, மகனே—, இன்று—, நீ—நீர், மா - மிருகங்கள், போகு - ஸஞ்சரிக்கிற, நெடு - நெடுமான, கானம் - காட்டிலே, போக—, என்னெஞ்சம் - என் மனஸ்ஸானது, இருபிளவாய்ப் போகாதே - இரண்டுபிளவாய்ப் போய்விடாமல், நிற்குமாறே - வலிதாயிராநின்றதிறேயென்று ஆர்த்தராகிறார்.

வ்யா.—நாலாம்பாட்டு. (வாபோகுவித்யாதி) சற்றுப்போது காணவிட்டவாறே வரும்படி காண்கைக்காக ஸுமந்த்ரனை விட்டு அழைப்பிக்கும்; பிறகு பின்பும் பிறகுவாளியுங் காண்கைக்காகப் போவென்னும்; பின்னையும் கண்மறையப்போனவாறே வாவென்னும். (இன்னம் வந்தொருகால் கண்டுபோ) வந்தவாறே இன்னம் போம்போது ஒருக்கால் கண்டுபோவென்னும்; இப்படியாக்கும் இவன் யாத்ரைதானிருப்பது. (மலராளித்யாதி) பூமாறாதேயாளும் மயிர்முடியையும். (வேய்போலு மெழில்தோளிதன்பொருட்டா) பசுமைக்கும் சுற்றுடைமைக்கும் ஒழுகு நீட்சிக்கும் வேய்போலே யிருக்கிற அழகிய தோளையுடையளா யிருக்கிற பிராட்டிநிமித்தமாக. (விடையோன்றன் வில்லைச்செற்றாய்) பெருமிடுக்கனான ருத்ரனுடைய வில்லைமுறித்தவனே. (மாபோகுநெடுங்கானம்) ஆனைகள் ஸஞ்சரிக்கிறகாடு. (வல்வினையேன் மனமுருக்கும்மகனே) பால்யாவஸ்தைதொடங்கிப் பதினாலாண்டு உன் ஸௌந்தர்யாதி சேஷ்டிதங்களாலே மஹாபோகங்களை யென்னை யநுபவிப்பித்தவுன்னை முடிய வநுபவிக்கப்பெறாதே மஹாபாபத்தைப்பண்ணின வென்னுடைய ஹ்ருதயத்தை சிதிலமாக்குமவனே. (இன்றுநீபோக வென்னெஞ்சம் இருபிளவாய்ப்போகாதேநிற்குமாறே) உன் ஸந்நிதியி லிருக்கிற வென்னெஞ்சானது நீ போனவாறே சிதிலமாகாதே வலித்திராநின்றதி! இதுக்கு ஹேது வறிகிறிலேன்... ... ... ௪

பொருந்தார்கைவேல்நுதிபோல்பரல்பாயமெல்லடிக்கள் குருதிசோர, விரும்பாதகான்விரும்பி வெயிலுறைப்பவெம்பசிநோய் கூர

வின்று, பெரும்பாவியேன்மகனே போகின்றாய்கேகயர்கோன் மக ளாய்ப்பெற்ற, அரும்பாவிசொற்கேட்ட வருவினையேனென்செய்கே னந்தோயானே. (௫)

ப-ரை.—பொருந்தார்கை-சத்ருக்கள் கையில், தைக்க, வேல்-வேலினுடைய, நுதிபோல்-நுனிபோலே, பரல்-பரற்களானவை, பாய - பாய்வதினால், மெல்-ஸுகுமாரமான, அடிக்கள் - திருவடிகளினின்றும், குருதி-ரக்தமானது, சோர இடைவிடாதேபெருக, விரும்பாத - கடிநஸ்வபாவரும் கூடப் போக இச்சியாத, கான் - காட்டை, விரும்பி - என்னுஜ்ஞையாலேவிரும்பி, வெயில் - வெய்யிலானது, உறைப்ப - மேலே உறைக்கவும், நினைத்தபோது அமுது செய்யக்கிடையாமையாலே, வெம்பசிநோய் - வெவ்வியபசியாகிறநோயானது, கூர-அதிகரிக்கவும், பெரும்பாவியேன் - மஹாபாபியானவென்னுடைய, மகனே - புத்ரனே, இன்று—, போகின்றாய் - போகிறீர்; கேகயர்கோன் - கேகயமஹாராஜன், மகளாய்ப்பெற்ற - மகளாகப்பெற்றவளாய், அரும்பாவி - மஹாபாபியானவளுடைய, சொல்கேட்ட - வார்த்தையிலே யகப்பட்டவனாய், அருவினையேன்யான் - அதுக்கு ஒருப்ரதி க்ரியை பண்ணமாட்டாதநான், அந்தோ-ஐயோ!, என்செய்கேன் - என்ன செய்யப்புகுகிறேன.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (பொருந்தார்கை வேல்நுதிபோல் பரல்பாய) ஶத்ருக்கள் கையில் வேல்முனையை யிட்டிருந்தாப்போலே பரற்களானவைபாய. (மெல்லடிக்கள் குருதிசோர) இங்குத்தையில் மிதிக்க ஸஹியாத ஸுகுமாரரான திருவடிகள் பாறைகள் மேலே மிதிக்கையாலே ரக்தத்தைப்புறப்படவிட. (விரும்பாதகான் விரும்பி) ஸுகுமாரரல்லாதாரும் விரும்பாதகாட்டை நான்போகச் சொன்னேனென்னு மத்தாலேவிரும்பி. (வெயிலுறைப்ப வெம்பசி நோய்கூர) மேலே வெய்யிலானதுறைப்ப, நினைத்தபோது அமுது செய்யக் கிடையாமையாலே வெவ்விய பசியானநோய்மிக. (இன்று பெரும்பாவி யேன்மகனேபோகின்றான்) மஹா பாபியான வென் வயிற்றிலே பிறக்கையாலேயிறே ஸுகுமாரரானநீர் காட்டேறப் போகிறது. (கேகயர்கோன்மகளாய்ப் பெற்ற அரும்பாவிசொல் கேட்ட) கேகயராஜந் மகளாய்பெற்றது ஒரு மஹா பாபத்தையாய்த்து; அவள்வார்த்தையிலே யகப்பட்ட. (அருவினையேனென்செய்கே னந்தோயானே) ப்ரதி க்ரியையில்லாத செயலைச்செய்த வென்னால் செய்யலாம் பரிஹாரமில்லை. ... ... ... ௫

அம்மாவென்றுகந்தழைக்கு மார்வச்சொற்கேளாதே யணிசேர்மார்வ, மென்மார்வத்திடையழுந்தத் தழுவாதேமுழுசாதே மோவாதுச்சிக், கைம்மாவின்நடையன்ன மென்னடையுங்கமலம்போல் முகமுங்காணாது, எம்மானையென்மகனை யிழந்திட்டஇழித்தகையேனிருக்கின்றேனே. (௬)

ப-ரை.—அம்மாஎன்று - ஐயர் என்று, உகந்து அழைக்கும் - உகந்தழைக்கிற, ஆர்வச்சொல் - ஆசையான சொற்களை, கேளாது-கேளாமல், அணிசேர் -

ஆபரணங்களாலே அலங்க்ருதமான, மார்வம் - மார்வைக்கொண்டு, என்மார்வத்திடை - என்னுடைய மார்விலே, அழுந்த - அழுந்தும்படி, தழுவாது - தழுவாமலும், முழுசாது - முழுசாமலும், உச்சிமோவாது - உச்சியை மோராது கொள்ளாமலும், கைம்மாவின் - மத்தகஜத்தினுடைய, நடையன்ன - நடையை யொத்த, மெல்நடையும் - ம்ருதுவான நடையழகும், கமலம் போல் - தாமரை மலரையொத்த, முகமும் - திருமுகத்தினழகையும், காணாது - காணாமலும், எம்மானை - நடையழகால் என்னை யெழுதிக்கொண்ட, என்மகனை - என்னுடைய மகனை, இழந்திட்ட - இழந்துவிட்ட, இழிந்தகையேன் - தண்ணியஸ்திதியை யுடைய நான், இருக்கின்றேனே - இருக்கிறேனேயென்று துக்கிதராகிறார்.

வ்யா.—ஆறும்பாட்டு. (அம்மாவென்று உகந்தழைக்கு மார்வச் சொல்கேளாதே) வேறொன்றைக்கணிசியாதேகாரியப்பாடற ''ஐயர்'' என்றழைக்கும் ப்ரேமம்வழிந்து புறப்பட்ட சொல்லைக்கேளாதே. (அணிசேர் மார்வம்என் மார்வத்திடையழுந்தத் தழுவாதே) ஆபரணங்களாலே அலங்க்ருதமான திருமார்வைக்கொண்டு, ''ஸுகாடம் பரிஷ்வஜே'' ''ஸுகாடம்பரிஷஸ்வஜே'' என்னும்படி - ஏக தத்வமென்னும்படி தழுவி முழுசாதே. (மோவாதுச்சி) முழுசி அநந்தரம் உச்சியை மோந்துகொள்ளாதே. (கைம்மாவின் நடையன்னமென்னடையும்) ''மத்தமாதங்ககாமிநம்'' ''மத்தமாதங்ககாமிநம்'' என்னும்படியமைந்திருக்கிற நடையழகும். (கமலம்போல்முகமுங்காணாது) விகாஸம் செவ்விக்குத் தாமரை ஒருபோலியான திருமுகத்தைக்காணாது. (எம்மானையென்மகனை) நடையழகாலே என்னையெழுதிக்கொண்ட வென்மகனை. (இழந்திட்டஇழிந்தகையே னிருக்கின்றேனே) இப்படி தண்ணிய செயலைச் செய்தக்கால் முடியவுமாகாதே யிருக்கவும்வேணுமோ நான். ... ... ... ... ... சு

பூமருவுநறுங்குஞ்சிப் புன்சடையாப்புனைந்துபூந் துகில்சேரல்குல், காமரெழில்விழலுடுத்துக் கலனணியாதங்கங்க ளழகுமாறி, ஏமருதோளென்புதல்வன்யானின்றுசெலத்தக்க வநந்தான்சேர்தல் தூய்மறையீர்இதுதகவோசுமந்திரனே! வசிட்டனே! சொல்லீர்நீரே ()

ப.ரை.—பூமருவு - பூமாறாதேயிருப்பதாய், நறும் - பரிமளிதமான, குஞ்சி - திருக்குழலை, புன் - பார்க்கவொண்ணாதபடி, சடையாப்புனைந்து - ஜடையாக்கி, பூந்துகில் சேர் - அழகியவஸ்த்ரங்களை தரிக்கக்கடவ, அல்குல் - திருவரையிலே, காமர் - காண்கைக்கு ஆசைப்படத்தக்க, எழில் - அழகிய, விழல் - விச்வாமித்ரதை, உடுத்து - கயிறாக முறுக்கிச்சாத்தி, கலனணியாது - ஆபரணங்களைதரியாமையாலே, அங்கங்கள் - அத்தால் திருமேனிக்குண்டாரும், அழகுமாறி - அழகுகெட்டு, ஏமரு - சத்ருக்கள் கலங்கத்தக்க, தோள் - தோள்களையுடைய, என் - என்னுடைய, புதல்வன் - புத்ரரானவர், யான் —, இன்றுசெலத்தக்க இன்று போகத்தக்க, வநம் - காட்டிலே, தான் - போகயோக்யரானதாம், சேர்தல் - போகை, தூய் - பரிசுத்தமான, மறையீர் - வேதத்தை நிரூபகமாகவுடையவர்களே, சுமந்திரனே - சுமந்த்ரனே, வசிட்டனே - வசிஷ்டபகவானே, இது —, தகவோ - தர்மமோ, நீர் - நீங்கள், சொல்லீர் - சொல்லுங்கோள்.

வ்யா.—ஏழாம்பாட்டு. (பூமருவு நறுங்குஞ்சி புன்சடையாப் புனைந்து) பூமாறாதே யிருப்பதாய் பரிமளத்தைப்புறப்பட விடா நிற்குந் திருக்குழலை, மநுஷ்யர்க்குப் பார்க்கவொண்ணாதபடி ஜடையாக்கி. (பூந்துகில் சேரல்குல் காமரெழில் விழலுடுத்து) அறுபதினாயிரமாண்டு தேடின திருப்பரியட்டங்களில் நல்லவையெல்லாம் சாத்தக்கடவ திருவரையிலே,கண்டார்விரும்பும்படி விஸ்வாமித்ரத்தைக் கயிறாக முறுக்கிச்சாத்தி. (கலனணியா தங்கங்க ளழகுமாறி) ஸ்வாபாவிகமான அழகொழியத் திருவாபரணங்கள் சாத்தாமையாலே அத்தால் வருமழகின்றியே. (ஏமருதோ ளென்புதல்வன்) விக்நம் பண்ணினார் அழியச்செய்து அபிஷேகம் பண்ணவல்ல என்மகன். (யானின்றுசெலத்தக்க வநம் தான்சேர்தல்) அறுபதினாயிரமாண்டு போகங்களைபுஜித்து வீதராகனான நான்போகக்கடவ காட்டிலே, ஸுகுமாரராய் போகயோக்யரான தாம்போகை. (தூமறையீ ரிதுதகவோ) "ஸத்யவ்ரதஸ்ய" "பதிம்விஸ்வஸ்ய" என்று ஓதியிருக்கிற ப்ராஹ்மணரோ! நீங்கள் இது சொல்லிகோள், இது தர்மமோ. (சுமந்திரனேவசிட்டனே சொல்லீர்நீரோ) ராஜதர்மத்தைப் பழகவறிந்து நடத்திப்போந்த ஸுமந்த்ரனே! சொல்லாய்; இவ்வம்ஸத்துக்குகுருவாய் ராஜதர்மங்களை உபதேசித்துப் போருகிற ஸ்ரீவஸிஷ்ட பகவானே! சொல்லாய். ... ... ... எ

பொன்பெற்றாரெழில்வேதப் புதல்வனையுந் தம்பியையும் பூவைபோலும், மின்பற்றா நுண்மருங்குல் மெல்லியலென்மருகியையும் வநத்திற்போக்கி, நின்பற்றாநின்மகன்மேற் பழிவிளைத்திட்டென்னையும் நீள்வானிற்போக்க, என்பெற்றாய்கைகேசீ! யிருநிலத்திலினிதாக விருக்கின்றாயே. (அ)

ப - ரை.—கைகேசீ - கேசயராஜன்புத்ரியே, பொன்பெற்றார் - வித்யாதநத்தையுடைய உபாத்யாயர் கீழ்யிருந்த, எழில் - அழகிய, வேதம் - வேதசாஸ்த்ரங்களைக்கற்ற, புதல்வனையும் - பெருமாளையும், தம்பியையும் - அவரையல்ல தறியாத இளையபெருமாளையும், பூவைபோலும் - நாகணவாய்ப்புள்ளையொத்த அழகையும், மின்பற்றா - மின்னலுங்கூட ஒப்பாகாத, நுண் - நுண்ணிதான, மருங்குல் - இடையையும், மெல்இயல் - மிருதுஸ்வபாவத்தையுமுடையளான, என் மருகியையும் - என் மருமகளான பிராட்டியையும், வநத்தில்போக்கி - காட்டிலே போகவிட்டு, நின் - உன்னையொழிய வேறொருவரை, பற்றா - தாயென்று புத்திபண்ணாத, நின்மகன்மேல்-உன்னுடைய பிள்ளையான பரதாழ்வானுக்கு, பழிவிளைத்திட்டு - "ப்ராதர்த்ரோஹி" என்னும்பழியையுண்டாக்கிவிட்டு, என்னையும்—, நீள் - பெருமைபொருந்திய, வானில் - ஸ்வர்க்கத்திலே, போக்க - போம்படி செய்தத்தாலே, என்பெற்றாய் - என்ன ப்ரயோஜநத்தையடைந்தாய்; இருநிலத்தில் - இந்த மஹா ப்ருதிவியிலே, இனிதாக-ஸந்துஷ்டசித்தையாய்க்கொண்டு, இருக்கின்றாயே - இருக்கிறாயேயென்று துக்கிதராகிறார்.

வ்யா.—எட்டாம்பாட்டு. (பொன்பெற்றாரெழில் வேதப்புதல்வனையும் தம்பியையும) தங்களொன்று எல்லாரும் சொல்லும்படியிருக்கிற உபாத்யாயர்கள்கீழேயிருந்து அழகிய ஸகலவேத ஶாஸ்த்ரங்களையும் ஓதியிருக்கிற பெருமாளையும், அவரையல்ல தறியாத தம்பியாரையும். (பூவைபோலும் மின்பற்றா நுண்மருங்குல் மெல்லியலென்மருகியையும்) பூவைபோலே யிருப்பாளுமாய் மின்னுக்கு ஒப்பான இடையையுடையாளுமாய் ம்ருதுஸ்வபாவையுமான என் மருமகளான பிராட்டியையும். (வநத்தில்போக்கி) காட்டிலேபோக விட்டு. (நின்பற்றாநின்மகன்மேல்பழிவிளைத்திட்டு)†உன்னையல்லது வேறொருவரைத் தாயென்றிராத பெருமாளையும் இளைய பெருமாளையும் வநத்தில்போகவிட்டு. (என்னையும்நீள்வானில்போக்க என்பெற்றாய்கைகேசி) இச்செயல்களெல்லாம் செய்து நீபெற்ற ப்ரயோஜநமென். (இருநிலத்திலினிதாக விருக்கின்றாயே) ஸம்ஸார ஸுகமாகிறது-புத்ரர்களோடும் பர்த்தாவோடுங் கூடியிருக்கையாய்த்து; உனக்குப் புத்ரரான பெருமாளைக் காட்டிலேபோக்கி என்னையும் ஸ்வர்க்கத்திலே போக்குகையாலே ஸம்ஸாரஸுகம் அழகிதாக அநுபவிக்கக்கடவையிறே.... ... ... ... ... ... அ

முன்னொருநாள்மழுவாளி சிலைவாங்கியவன்றவத்தைமுற்றுஞ்
செற்றாய், உன்னையுமுன்னருமையையுமுன்மோயின்வருத்தமுமொ
ன்றாகக்கொள்ளா, தென்னையுமென்மெய்யுரையும்மெய்யாகக்கொண்
டுவநம்புக்கவெந்தாய்!, நின்னையேமகனாகப்பெறப்பெறுவேனேழ்பி
றப்பும்நெடுந்தோள்வேந்தே!. (கூ)

ப - ரை.—முன்னொருநாள் - முன்பொருகாலத்திலே, மழுவாளி - பரசுராமாழ்வானுடைய, சிலை - வில்லை, வாங்கி - வளைத்து அம்பேறிட்டு, அவன் - அவனுடைய, தவத்தைமுற்றும் - தபஸ்ஸையெல்லாம், செற்றாய் - அவ்வம்பாலே அழித்துப்போகட்டாய்; உன்னையும் - உன்பெருமையையும், உன் அருமையையும் - உன்னை நான் பெறப்பட்ட அருமையையும், உன்மோயின் - உன்னைப் பெற்ற தாயாரான ஸ்ரீகௌஸலையாருடைய, வருத்தமும் - வ்யஸநத்தையும், ஒன்றாகக்கொள்ளாது - ஒருபொருளாக மதியாமல், என்னையும் - உன்பக்கல் அன்புடையனானவென்னையும், என் மெய்யுரையும் - என்னுடைய ஸத்யவசநத்தையும், மெய்யாக்கக்கொண்டு-ஸத்யமாக்கவேணுமென்று நெஞ்சிற்கொண்டு, வநம்புக்க - காட்டிக்கு எழுந்தருளின, எந்தாய் - என்னுடையநாதனாய், நெடு-முழங்காலளவும் நீண்ட, தோள் - தோளையுடைய, வேந்தே-அரசனானவனே, நான் அநேகஜந்மங்கள் பிறந்து, ஏழ்பிறப்பும் - பிறந்த ஜந்மங்கள் தோறும், நின்னையே - உன்னையே, மகனாக - பிள்ளையாக, பெறப்பெறுவேன் - பெறப்பெறுவேனாகவேணும்.

---

† இவ்விடத்தில் க்ரந்தம் விட்டிருப்பதாகத் தெரிகிறபடியால் சரியானபாடத்தைக் கோசாந்தரங்களில் கண்டுகொள்க.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (முன்னொருநாள் மழுவாளிசிலை வாங்கி) முன்னொருகாலத்திலே மழுவை ஆயுதமாகவுடைய ஸ்ரீபரஶுராமன்கையில் ஸ்ரீஶார்ங்கத் திருவில்லை வாங்கி. (அவன்தவத்தை முற்றுஞ்செற்றாய்) அவன் லோகாந்தரங்களை ப்ராபிக்கக்கடவதாக ஆர்ஜித்ததபஸ்ஸை அவ்வம்பாலே யழித்துப்பொகட்டாய். (உன்னையுமுன் னருமையையும்) உன் ஶ்லாக்யத்தையும், "ஶஹதாதபஸாராமஃ" "மஹாதாதபஸாராமஃ" என்று-நான் உன்னைப்பெறப்பட்ட அருமையையும். (உன்மோயின்வருத்தமுமொன்றாகக்கொள்ளாது) "உன்னைப்பிரியில்தரியேன்" என்று பின்தொடர்ந்த ஸ்ரீகௌஸலையார்வ்யஸநத்தையும் ஒன்றாகக் கொள்ளாது. (என்னையுமென் மெய்யுரையும் மெய்யாகக்கொண்டு வநம்புக்கவெந்தாய்) உன்பக்கல் எனக்குண்டான பாவபந்தத்தை மெய்யாகவறியாதே, என்னைப் பிதாவென்றேநினைத்து, "நெடுநாள் ஸத்யம்சொல்லிப் போந்தவனை நான்தோன்றி அஸத்யப்ரதிஜ்ஞனாக்கவொண்ணாது" என்று எனக்கு ஸத்யத்தை ஸத்யமாக்கவேணுமென்று நெஞ்சிலேகொண்டு காட்டேறப்போனவென்னையனே. (நின்னையேமகனாகப்பெறப்பெறுவேனேழ்பிறப்பும் நெடுந்தோள்வேந்தே) அநேகஜந்மங்கள் பிறந்து, பிறந்த ஜந்மந்தோறும் நீ எனக்குப் பிள்ளையாய்ப் பிறக்கும்படி பெற்றுடையேனாவேன். (நெடுந்தோள்வேந்தே) ரக்ஷ்யவர்க்கத்தினளவல்லாத காவல்துடிப்புடைய தோளையுடையவனே. ... ௯

தேனகுமாமலர்க்கூந்தல்கௌசலையுஞ் சுமித்திரையுஞ்சிந்தைநோவக், கூனுருவிற்கொடுந்தொழுத்தைசொற்கேட்டகொடியவள்தன்சொற்கொண்டின்று, கானகமேமிகவிரும்பிநீதுறந்தவளநகரைத் துறந்துநானும், வானகமேமிகவிரும்பிப்போகின்றேன் மநுகுலத்தார்தங்கள்கோவே!. (௧0)

ப-ரை.—மநுகுலத்தார்தங்கள் கோவே - மநுகுலத் தரசனானவனே, தேன் நகு - தேனைப்புறப்படவிடா நின்றுள்ள, மா - ச்லாக்யமான, மலர்-மலரோடுகூடின, கூந்தல் - மயிர்முடியையுடைய, கௌசலையும் - ஸ்ரீகௌஸலையாரும், சுமித்திரையும் - ஸுமித்ராயாரும், சிந்தைநோவ-மநம்வருந்த, கூன்-வளைந்த, உருவின் - வடிவையுடையளாய், கொடு - கொடிய மநஸ்ஸையுடையளுமான, தொழுத்தை - வைப்பாட்டியுடைய, சொல் - சொல்லை, கேட்ட—, கேட்டவளாய், கொடியவள் தன் - க்ரூர ஹ்ருதயையுமான கைகேசியுடைய, சொல் - சொல்லை, கொண்டு - சிரஸா வஹித்துக்கொண்டு, கானகமே - வநவாஸத்தையே, மிகவிரும்பி-மிகவும் விரும்பி, நீதுறந்த-நீ உபேக்ஷித்துவிட்ட, வளம் - அலங்க்ர்தமான, நகரை - நகரத்தை, நானும்—, துறந்து - விட்டு, வானகம் - நீயில்லாத ஸ்வர்க்கத்துக்கு, மிக விரும்பிப்போகின்றேன்-மிகவும் ஆசைப்பட்டுப் போகா நின்றேன்.

வ்யா.—பத்தாம்பாட்டு. (தேனகுமாமலர்க்கூந்த லித்யாதி) தேனைப் புறப்படுவிக்கிற மலரோடேகூடின மயிர்முடியை யுடைய

ஸ்ரீகௌஸல்யாரும் ஸுமித்ரையாரும் நெஞ்சுநோவ. (கூனுருவித்யாதி) வடிவில் வக்ரம்போலேநெஞ்சும் வக்ரமாய்த் திண்ணிதான கூனியுடைய வார்த்தையைக்கேட்ட கைகேயியுடைய வார்த்தையிலே யகப்பட்டு. (கானகமேமிகவிரும்பி நீ துறந்த வளநகரைத்துறந்து) "நான்போகச்சொன்னேன்" என்னு மத்தையேகொண்டு ஒருவர்க்கும்ஸஞ்சரிக்கவரிதான காட்டைவிரும்பி,திருவபிஷேகத்துக்கு அலங்கரித்திருக்கிற வூரை நீ கைவிட்டாயென்று நானும் திருவயோத்யையைத் துறந்து. (வானகமேமிகவிரும்பிப் போகின்றேன்) நீ இல்லாதநகரியிறே;அத்தாலே ஸ்வர்க்கமேயாகிலும் நீயில்லாதவூரை விட்டுப் போகின்றேன். (மநுகுலத்தார்தங்கள்கோவே) மநுகுலோத்பவனானவனே. ... ... .. ... ... ... க0

ஏரார்ந்தகருநெடுமாலிராமனாய்வநம்புக்கவதனுக்காற்றாத்,தாரார்ந்ததடவரைத்தோட்டயரதன்றான் புலம்பியவப்புலம்பல் தன்னைக், கூரார்ந்தவேல்வலவன்கோழியர்கோன் குடைக்குலசேகரன் சொற்செய்த, சீரார்ந்ததமிழ்மாலையிவைவல்லார் தீநெறிக்கட்செல்லார்தாமே. (கக)

ப - ரை—தாரார்ந்த-வெற்றிமாலைமாறுததாய், தடம்-விசாலமாய், வரை-மலைபோலே திண்ணிதான, தோள் - தோளையுடைய, தயரதன்தான் - தசரத சக்ரவர்த்தியானவர்; ஏர் ஆர்ந்த - ஸகல கல்யாண குணங்களாலும் பூர்ணனாய், கரு - நீலமணிபோன்ற வடிவழகை யுடையனாய், நெடுமால் - ஸர்வாதிகனான ஸர்வேச்வரன், இராமனாய் - சக்ரவர்த்தித் திருமகனாய் வந்தவதரித்து, வநம் புக்கவதனுக்கு - காட்டுக்கெழுந்தருளியதற்கு, ஆற்றா - ஸஹிக்கமாட்டாமல், புலம்பிய அப்புலம்பல் தன்னை - ப்ரலாபித்த பாசுரத்தை, கூர்ஆர்ந்த-கூர்மை மிக்க, வேல் - வேல் யுத்தத்தில், வலவன் - ஸமர்த்தராய், கோழியர்கோன்-உறையூருக்குத்தலைவராய், குடை-வெண்கொற்றக்குடையையுடையரான, குலசேகரன் - ஸ்ரீகுலசேகரப்பெருமாள், சொற்செய்த - அருளிச்செய்த தாய், சீர்ஆர்ந்த-பெருமைமிகுந்த, தமிழ் - த்ராவிடபாஷையாய், மாலை - மாலாரூபமான, இவை - இப்பத்துப்பாட்டுக்களை, வல்லார்தாம் - அப்யஸிக்க வல்லவர்கள், தீநெறிக்கள்-விஷயாந்தரங்களிலே, செல்லார்-போகா ரென்கிறார்.

வ்யா.—நிகமத்தில். (ஏரார்ந்தகருநெடுமாலித்யாதி) எல்லா ப்ரகாரத்தாலும் பூர்ணனாய்ஸர்வாதிகனான ஸர்வேஶ்வரன் கர்மவஶ்யரோடே இதரஸஜாதீயனாய் வந்தவதரித்து,"கர்மவஶ்யரும்போகத் தகாதகாட்டில் புக்கான்" என்றதுக்கு ஆற்றமாட்டாது. (தாரார்ந்தவித்யாதி) அறுபதினாயிரமாண்டு ராஜ்யம்பண்ணுகையாலே மாலை மாறாத திண்ணிதான மலைபோலே தோளையுடைய சக்ரவர்த்தி ப்ரலாபித்த பாசுரத்தை. (கூரார்ந்தவித்யாதி) கூர்மைமிக்க வேலையுடையருமாய் உறையூர்க்கு நியாமகருமாய் ஐஶ்வர்ய ப்ரகாஶகமான வெண்கொற்றக்குடையை யுடையருமான குலஶேகரப்பெருமா

ளருளிச்செய்த. (சீரார்ந்ததமிழ்மாலையிவைவல்லார்) “[illegible] மதுரம்” “பாட்டேகேயேசமதுரம்” என்றஇவைபூர்ணமானதமிழ்த் தொடைவல்லவர்கள். (தீநெறிக்கள் செல்லார்தாமே) பகவத் விஷயத்தைக் காற்கடைக்கொண்டு விஷயப்ரவணராகார்கள். ...கக

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

——:0:——

அடிவரவு - வன்றாள் வெவ்வாய் கொல்லனை வாபோகு பொருந்தார் அம்மா பூமருவு பொன்பெற்றார் முன்னொருநாள் தேன்நகு ஏரார் அங்கண்.

ஆக திருமொழி-கூ-க்குப் பாட்டு-கூஉ.

---

## பத்தாந்திருமொழி-அங்கணெடுமதிள்-ப்ரவேஶம்.

அ.—அநாதிகாலம் இழந்தஇழவை தேவகிதேவியார் பெற்றுவைத்து க்ர்ஷ்ணனுடைய பாலசேஷ்டிதங்களை யநுபவிக்கப்பெறாதே யிழந்தவள் பாசுரத்தாலே பேசினார் - * ஆலைநீள்கரும்பில்; * மன்னுபுகழில்-ஸ்ரீகௌஸலையார் பெற்றபேற்றை அநுபவித்தார்; பால்யாவஸ்தையிலேயெல்லா மநுபவித்து ப்ராப்த யௌவநமானவாறே அநுபவிக்கப்பெறாதே யிழந்த சக்ரவர்த்தியோபாதி தமக்கு ப்ராப்தியுண்டாகையாலே அவன் பாசுரத்தாலே தம்மிழவைப் பேசினார்- * வன்தாளில்; இத்திருமொழியில்-கீழ்ப்பிறந்த இழவுகளெல்லாந்தீர சக்ரவர்த்தித்திருமகன் நித்யவாஸம்பண்ணுகிறதிருச்சித்திரகூடமாகிறதிருப்பதியிலே திருவவதாரந்தொடங்கி அந்தவவதார வ்ர்த்தாந்தத்தைஸ்ரீவால்மீகிபகவான்பேசியநுபவித்தாப்போலே தம்முடைய ஜ்ஞாநவைஶத்யத்தாலே ஸமகாலத்தில்போலே யநுபவிக்கிறார். *

அ.—முதற்பாட்டு. தேவர்களெல்லாரும் க்ர்தார்த்தராம்படி வந்து திருவவதாரம்பண்ணினபடி சொல்லுகிறது.

அங்கணெடுமதிள் புடைசூழயோத்தியென்னுமணி நகரத்துலகனைத்தும்விளங்குஞ்சோதி, வெங்கதிரோன்குலத்துக்கோர் விளக்காய்த்தோன்றிவிண்முழுதுமுய்யக்கொண்டவீரன்றன்னைச், செங்கணெடுங்கருமுகிலையிராமன்றன்னைத்தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள், எங்கள்தனிமுதல்வனையெம்பெருமான்றன்னை யென்றுகொலோகண்குளிரக்காணுநாளே. (க)

ப-ரை.—அங்கண் - ஆகாசாவகாசமெல்லாம் தானேயாம்படி, நெடு - உயர்ந்த, மதிள் - மதிள்களாலே, புடை - நாற்புறமும், சூழ் - சூழப்பட்ட, அயோ

த்தியென்னும் - அயோத்யையென்று ப்ரஸித்தமாய், அணி - அலங்காரங்க ளால் குறைவற்ற, நகரத்து - திருப்படை வீட்டிலே. உலகனைத்தும் - ஸகல லோகங்களையும், விளக்கும்-விளங்கப்பண்ணுகிற, சோதி-தேஜஸ்ஸானது,வெங் கதிரோன் குலத்துக்கு - ஸூர்யவம்சத்துக்கு, ஓர்-அத்விதீயமான, விளக்காய்த் தோன்றி - உஜ்வலதீபமாய் வந்தவதரித்து, விண்முழுதும் - தேவஜாதியை யடைய, உய்யக்கொண்ட - உஜ்ஜீவிப்பித்தருளின, இராமன்றன்னை - யாவரை யும் களிப்பிக்குமவனாய், வீரன்றன்னை - வீரனாய், நெடு - ஸர்வாதிகத்வஸூ சகமான, செங்கண் - புண்டரீகாக்ஷனாய், கருமுகிலை-காளமேகத்தையொத்தவ னாய், தில்லைநகர் - தில்லைநகரென்று சொல்லப்படுகிற, திருச்சித்திரகூடந்தன் னுள் - திருச்சித்திரகூடத்திலே, எங்கள் - எங்களை உஜ்ஜீவிப்பிக்கைக்கு, தனி- ஒப்பில்லாத, முதல்வனை-காரணபூதனாய், எம்பெருமான்றன்னை-நமக்குஸ்வாமி யானவனை, கண்களிரக்காணும் நாள் - என் கண்களின் விடாய்தீரக்காணும் நாள், என்று கொலோ - என்றோ வென்கிறார்.

வ்யா.—(அங்கணித்யாதி)போக்யபோகோபகரணபோகஸ்தாந ங்களையுடைத்தாய், ஆகாஶாவகாஶமெல்லாம் தானேயாம்படி நிமி ர்ந்தமதிளாலே சூழப்பட்ட அயோத்யை. (அயோத்தியென்னும்) "[Grantha]""பராஜிதை"என்றுசொல்லப்படுகிறபரமபதம்போலே ஶத்ருக்களுக்குக் கணிசிக்கவொண்ணாதவூர். (என்னும்) பரமபதம் போலே சிலரறிந்து சிலரறியாதா யிருக்கையன்றிக்கே ஸர்வலோக ப்ரஸித்தமாயிருக்கை.(அணிநகரம்) அலங்காரங்களால்குறைவற்ற வூரென்னுதல். (உலகனைத்தும்விளக்குஞ்சோதி) ஸர்வலோகங்களை யும் தன்தேஜஸ்ஸாலே, "[Grantha]" "நாராயணபரோஜ் யோதிः" என்கிறபடியே-பரஞ்யோதிஸ்ஸாயுள்ளது. (வெங்கதிரோ னித்யாதி) ஜகத்திலந்தகாரமெல்லாம் நீக்கக்கடவ ஆதித்யன்வம்ஶ த்திலே, அவனைப்போலே இரவுகலவாதே அத்விதீயமான தேஜஸ் ஸாய் வந்துதித்து. (விண்முழுதுமுய்யக்கொண்டவீரன்றன்னை) தன்வீர்யகுணத்தாலே தேவஜாதியையடைய உஜ்ஜீவிப்பித்தவனை. (செங்கணெடுங்கருமுகிலை) தேவஜாதியன்றிக்கே ஜகத்தையடைய ரக்ஷிப்பதாகக் கடலில் மணலே ஶேஷமாகப்பருகின காளமேகத்தி னுடைய வடிவையும் ஸர்வேஶ்வரத்வ லக்ஷணமான புண்டரீகாக்ஷ த்வங்களையு முடையவனை. (இராமன்றன்னை) வடிவழகாலும் கண் ணழகாலும் அபிராமத்தாலும் அநுகூல ப்ரதிகூல விபாகமின்றியே தோற்பிக்குமவனை. கீழில் "வீரன்" என்கிறதும் இங்கும் அந்வயிக் கக்கடவது. "[Grantha]" "ஸத்யேத்யாதிவத்." (தில்லைநகர்த் திருச்சித்திரகூடந்தன்னுள்) அவதாரத்தில் ஸமகாலத்தில் அநு பவிக்கப்பெறாத இழவுதீர, பிற்பட்டகாலத்திலுள்ளார்க்கு முதவ லாம்படி ஸந்நிஹிதனானவனை.(எங்கள்தனிமுதல்வனை) அக்காலத்தி லநுபவிக்கப்பெறாத எங்களை உஜ்ஜீவிப்பிக்கைக்கு ஒப்பில்லாத கார ணபூதனானவனை. (எம்பெருமான்றன்னை) வகுத்தஶேஷியானவனை.

(என்றுகொலோகண்குளிரக்காணுநாளே) இந்த ராஜ்ய துரந்தரை யிலே யகப்பட்டிருக்கிற நானன்றோ, அவனைக் காணப்பெறாதே விடாய்த்த கண்களானவைகண்டு விடாய்தீர்ந்து கண்படைத்த ப்ரயோஜநம் பெறலாவதென்றோ வென்கிறார். "என்றுகொலோ" என்று. காலதத்வத்துக்கு ஒரு † அவதிபெற்றாளுகில் இன்றுகண்டதோ டொக்குங்கிடீர். ... ... ... ... ...

அ.—இரண்டாம்பாட்டு. (வந்தெதிர்ந்த) ராக்ஷஸவதத்துக் கெல்லா மடியாகவும், ரிஷியுடைய அபிமதம் தலைக்கட்டுகைக்கும் தாடகா தாடகேயனை நிரஸித்தபடி சொல்லுகிறது.

வந்தெதிர்ந்ததாடகைதனுரத்தைக்கீறி வருகுருதிபொழிதர வன்கணையொன்றேவி,மந்திரங்கொள்மறைமுனிவன் வேள்விகாத்து வல்லரக்கருயிருண்டமைந்தன்காண்மின், செந்தளிர்வாய்மலர்நகைசேர் செழுந்தண்சோலைத் தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள், அந்தணர்களொருமூவாயிரவரேத்த வணிமணியாசனத்திருந்தவம் மான்றானே. (௨)

வ்யா.—செந்தளிர்வாய் - சிவந்ததளிர்கள் நடுவே, நகை - விகஸியாநின்றுள்ள, மலர்சேர் - புஷ்பங்களையுடைத்தாய், செழு - அழகிதாய், தண் - ச்ரமஹரமான, சோலை-சோலையாலேசூழப்பட்ட, தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள்—, அந்தணர்களொருமூவாயிரவர்-அநந்யப்ரயோஜநரான மூவாயிரம் ஸ்ரீவைஷ்ணவர்கள், ஏத்த - மங்களாசாஸநம்பண்ண, அணி - ச்லாக்யமான, மணி-மாணிக்கங்களழுத்திசசமைத்த,ஆசநத்துஇருந்த-ஸிம்ஹாஸநத்திலேயெழுந்தருளியிருந்த, அம்மான்-ஸர்வேச்வரன், வந்து-மிசைதநுவந்து, எதிர்ந்த-எதிர்த்த, தாடகைதன் - தாடகியுடைய, உரத்தை - மார்வை, கீறி - பிளந்து, அத்தாலே, வரு -புறப்பட்டுவருகிற, குருதி - ரக்தமானது, பொழிதர - மலையருவிபோலேகொழிக்கும்படி, வன் - வலிக்க, ஒன்று-ஒப்பில்லாத, கணை-திருச்சரத்தை, ஏவி - நடத்தி, மந்திரம் - ஸகலமந்த்ரங்களையும், கொள் - தன்னிடத்திலேயுடைத்தான, மறை - வேத வேதாந்தங்களையறிந்தவனாய், முனிவன்- மநநசீலனான விச்வாமித்ரனுடைய, வேள்வி - யாகத்தை, காத்து - ரக்ஷித்து, வல்-பெருமிடுக்கரான, அரக்கர் - மாரீசன் ஸுபாஹுவென்னும் ராக்ஷஸருடைய, உயிருண்ட - ப்ராணனைப் போக்கியருளின, மைந்தன்காண்மின் - பின்ளைத்தனத்தை யுடையவன்கிடீ ரென்கிறார்.

வ்யா.—(வந்தெதிர்ந்த) தான்மிகைத்து வந்து மேலிட்ட தாடகையை ‡ நிக்ர்திக்கொப்பில்லாதவள். * தன்னிகரொன்றில்லாத தாடகையிறே. (தன்னுரத்தைக்கீறி) பெருமாள்பக்கல்பொல்லாங்கு நினைத்தநெஞ்சை மலைபிளந்தாப்போலே பிளந்து. (வருகுருதி

---

† அவதிபெற்றாளுகி லென்றது - பெறக்கடவதா யின்னநாளென்று அவதியிடப்பெற்றோமாகில் என்றபடி. ‡ நிக்ர்தி - ஸந்நிவேசம்; தோற்றர வென்றபடி.

பொழிதர) † செம்பாட்டுத்தறையிலேமலையருவிவிழுந்தாப்போலே ருதிரம்வந்துகொழிக்க.(வன்கணையொன்றேவி)வலிக்குலைப்பில்லாத திருச்சரத்தைநடத்தி.(மந்திரங்கொள்மறைமுனிவன்)ரிஷிதனக்கே தனக்கென்றுதபடியிருப்பாராய்த் தன்னுடைய அநுஷ்டானங்களெல்லாம் அடைவே யநுஷ்டித்து யாகத்தைத் தலைக்கட்டும்படிபண்ணி. (வல்லரக்கருயிருண்ட)யஜ்ஞவிக்நகரரானமாரீசஸுபாஹுக்களைமுடித்தபிள்ளைத்தனத்தையுடையவனை.மாரீசன்பட்டானேவென்னில்; பின்னையிருந்தவிருப்பு ம்ருதப்ராயனென்றுகருத்து. (செந்தளிர்வாய் மலர்நகைசேர்) சிவந்த தளிர்கள்நடுவே விகஸியாநின்றுள்ள புஷ்பங்களையுடைத்தாய் தர்ஶநீயமாய் ஸ்ரமஹரமான சோலையாலே அலங்க்ருதமானவூரிலே. (அந்தணர்களொருமூவாயிரவர்)அநந்யப்ரயோஜநரான ப்ராஹ்மணர்மூவாயிரம்பேர். (ஏத்த) திரண்டுமங்களாஶாஸநம்பண்ண. (அணிமணியாசனத்திருந்த) "கோப்புடைய சீரிய சிங்காசனம்" என்னும்படியே மஹார்க்கங்களான ரத்நங்களையுடைத்தான ஸிம்ஹாஸநத்திலே தன்மேன்மைதோற்ற விருந்த ஸர்வேஶ்வரன் கிடீரென்கிறார். ... ... ... ... ௨

அ.—மூன்றாம்பாட்டு. (செவ்வரிநல்) பிராட்டியோட்டைக் கலவி விக்குரோதியைப்போக்கினபடி சொல்லுகிறது.

செவ்வரிநற்கருநெடுங்கண் சீதைக்காகிச்சினவிடையோன் சிலையிறுத்துமழுவாளேந்தி, வெவ்வரிநற்சிலைவாங்கி வென்றிகொண்டு வேல்வேந்தர்பகைதடிந்தவீரன்றன்னை, தெவ்வரஞ்சுநெடும்புரிசையுயர்ந்தபாங்கர்த்தில்லைநகர்த் திருச்சித்திரகூடந்தன்னுள், எவ்வரிவெஞ்சிலைத்தடக்கை யிராமன்றன்னையிறைஞ்சுவா ரிணையடியேயிறைஞ்சினேனே. (௩)

ப-ரை.—செவ்வரி - செவ்வரிகள்படர்ந்து, நல் - அழகிதாய், கரு - கறுத்து, நெடு - காதளவும் நீண்டிருந்துள்ள, கண்-கண்களையுடைய, சீதைக்காகி-பிராட்டிக்காக, சினம் - கோபத்தையுடைய, விடையோன - வ்ருஷபவாஹநனான ருத்ரனுடைய, சிலை - வில்லை, இறுத்து - முறித்தும், மழுவாள் ஏந்தி - மழுவாகிற ஆயுதத்தையுடைய பரசுராமாழ்வானுடைய, வெம் - க்ரௌர்யத்தையுடைத்தாய். வரி-அழகிதாய், நல்-ச்லாக்யமான, சிலை-வில்லை, வாங்கி-வளைத்து அம்பெய்து,வென்றிகொண்டு-அவனைவென்று,தம்முடையகுலத்தினராய், வேல்-வேலையுடையரான, வேந்தர் - ராஜாக்களுடைய, பகைதடிந்த - விரோதிநிரஸநம்செய்தருளின, வீரன்றன்னை - வீரனாய், தெவ்வர் - சத்ருக்கள், அஞ்ச-பயப்படும்படியான, நெடும்-உயர்ந்த, புரிசை-மதிளையும், உயர்ந்த—, பாங்கர்-அட்டாலைகளையுமுடைத்தான, தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள் - திருச்சித்திரகூடத்திலே யெழுந்தருளியிருக்குமவனாய், எவ்அரி - எய்யவரிய, வெம்-க்ரூரமான, சிலை - வில்லை, தடம்-பெரிய, கை-திருக்கையிலேயுடைய, இராமன் றன்னை—, இறைஞ்சுவார் - ஸ்தோத்ரம்பண்ணுமவர்களுடைய, இணையடியே-திருவடிகளையே, இறைஞ்சினேன் - வணங்கினேனென்கிறார்.

† செம்பாட்டுத்தறை-செம்மண் தரை.

வ்யா.—(செவ்வரியித்யாதி) "ஸிதேக்ஷணா" "அஸிதேக்ஷணா" என்கிறபடியே கண்ணழகிலேதோற்று, சினத்தையுடைய ரிஷபத்தைத் தனக்கு வாஹநமான ருத்ரனுடைய வில்லாய், ஒருவரால் கிட்டவொண்ணாதெ யிருக்கிறவில்லை அநாயாஸேநமுறித்து அச் செயலிலேதோற்ற பிராட்டியைத் திருமணம்புணர்ந்தெழுந்தருளா நிற்க வழியிலேவந்து தோற்றின, தன்சௌர்யத்துக்குத்தக்க மழுவாகிற ஆயுதத்தையுடைய ஸ்ரீபரஸுராமாழ்வானுடைய, வெம்மையையுடைத்தாய் தர்ஸநீயமான வில்லைவாங்கி யிவனைவென்று தான் திருவவதாரம்பண்ணின க்ஷத்ரியகுலத்துக்குப் பகைதீர்ந்த வீரத்தையுடையவனை. (தெவ்வரஞ்சுநெடும்புரிசையித்யாதி) ஸத்ருக்கள் அஞ்சும்படியானஉயர்ந்தமதிளையும்† அட்டாலைகளையுமுடைத்தான வூரிலே வர்த்திக்கிற. (எவ்வரியித்யாதி) "அவஷ்டப்யமஹத்தநு:" "அவஷ்டப்யமஹத்தநு:" என்று – வேறொருத்தரால் அடக்கியாளவொண்ணாதே காணவே ப்ரதிபக்ஷம் முடியும்படியான ஸ்ரீஸார்ங்கத்தையுடைய சக்ரவர்த்தித்திருமகனை. (இறைஞ்சுவாரிணையடியே) சக்ரவர்த்தித் திருமகனுடைய வீரத்துக்கும் அழகுக்கும் தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குத் தோற்று அவர்கள் திருவடிகளிலே. (இறைஞ்சினேனே) ஸ்ரீபரதாழ்வான்குணங்களுக்குத் தோற்ற ஸ்ரீஸத்ருக்நாழ்வானைப்போலே. ... ... ... ... ௩

தொத்தலர்பூஞ்சுரிகுழற் கைகேசிசொல்லாற்றொன்னகரந் துறந்துதுறைக்கங்கைதன்னைப், பத்தியுடைக்குகன்கடத்த வனம்போய்ப்புக்குப்பரதனுக்குப் பாதுகமுமரசுமீந்து, சித்திரகூடத்திருந்தான் றன்னை யின்றுதில்லைநகர்த் திருச்சித்திரகூடந்தன்னுள், எத்தனையுங்கண்குளிரக் காணப்பெற்றவிருநிலத்தார்க் கிமையவர்நேரொவ்வார்தாமே. (ச)

பதவுரை.—தொத்து - கொத்துக்கொத்தாக, அலர் - அலருகிற, பூ - பூக்களையுடைத்தாய், சுரி - சுருண்ட, குழல் - குழலையுடையளான, கைகேசி - கைகேசியுடைய சொல் - சொல்லாலே, தொல் - தங்கள் முன்னோர் தொடங்கிவருகிற, நகரம் - அயோத்யாநகரத்தை, துறந்து - விட்டு, பத்தியுடை - பக்தியையுடைத்தான, குகன் - ஸ்ரீகுஹப்பெருமாள், கங்கைத் துறைதன்னை - கங்கைக்கரையை, கடத்த - தாண்டுவிக்க, வநம் - துஷ்டமர்சங்கள் ஸஞ்சரிக்கிற காட்டிலே, போய்ப்புக்கு - சென்று புகுந்து, பரதனுக்கு - ஸ்ரீபரதாழ்வானுக்கு, பாதுகமும் - திருவடிநிலைகளையும், அரசும் - ராஜ்யபாரத்தையும், ஈந்து - கொடுத்து, சித்திரகூடத்திருந்தான் றன்னை - சித்ரகூடபர்வதத்திலேயெழுந்தருளியிருந்தவனை, இன்று தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள் —, கண் - உன்னைக்காணப்பெறாதே விடாய்த்தகண்கள், எத்தனையும்குளிர - நன்றாகக்குளிரும்படி, காணப்பெற்ற - கண்டநுபவிக்கப்பெற்றவர்களாய், உகந்தருளின நிலங்களையுடைத்தாகையாலே, இரு - ச்லாக்யமான, நிலத்தார்க்கு - பூமியிலுள்ளவர்களுக்கு, இமையவர் - நித்யஸூரிகள், நேரொவ்வார் - ஸத்ர்சராகார்கள்.

---

† அட்டாலை - தார்க்கசயரணை.

வ்யா.—நாலாம்பாட்டு. (தொத்தலர்) கொத்துக்கொத்தாக அலரு கிற பூக்களையுடைய, சுருண்டு அழகிதான குழலையுடைய கைகேயி. இத்தால்-தன்னுடைய ஒப்பனையாலும் அழகாலும் சக்ரவர்த்தியைத் தானிட்டவழக்காம்படி பண்ணிப்ரமிப்பிக்கவல்லளான. (கைகேயிசொல்லால்) சக்ரவர்த்திவாய்திறக்கமாட்டாதிருக்க, "பிள்ளாய்! உங்களையர், உன்னைக் காட்டேறப்போகச்சொல்லாநின்றார்" என்றுகைகேயி சொன்னவார்த்தையாலே. (தொன்னகரந்துறந்து) குல க்ரமாகதமாய்வருகிறபடைவீட்டை ஸங்கலித்து. இவள்சொன்னாளென்று போகைக்கு ப்ராப்தியில்லாமையைக் காட்டுகிறது. (துறைக்கங்கை தன்னை) கங்கையின் துறைதன்னை. (பத்தியுடைக் குகன்கடத்த) தம்பிமாரைக் காட்டிலும் ஸ்நேஹத்தையுடையனாய், பிரியில் தரியாதபடி பெருமாள் நியமிக்கையாலே நின்றவனுமாய், ஸ்ரீபரதாழ்வானையுங்கூட அசிர்க்கும்படியான ஸ்ரீகுஹப்பெருமாள் கங்கையைக் கடத்த.(வனம்போய்ப்புக்கு) மநுஷ்யஸஞ்சாரமின்றியே துஷ்டம்ருகங்களேயான காட்டிலேபோய்ப்புக்கு. (பரதனுக்குப் பாதுகமுமரசுமீந்து சித்திரகூடத்திருந்தான்றன்னை) சித்ரகூடத்திலே எழுந்தருளியிருக்கிற இருப்புத் தான் பெறாதே பிற்பட்டார்க்கு மிழவுதீர ஸர்வகாலத்திலும் அநுபவிக்கைக்காகத் திருச் சித்திர கூடத்திலே வர்த்திக்கிறவனை. (எத்தனையுங்கண்குளிர) இவனைக்காணப்பெறாதே விடாய்த்தகண் குளிரும்படி. (காணப்பெற்ற) கேட்டே போகையன்றிக்கே கண்டநுபவிக்கப்பெற்ற. (இருநிலத்தார்க்கு) உகந்தருளினதேசங்களையுடைய ஶ்லாக்யமான பூமியிலுள்ளார்க்கு, * ஸதா பஶ்யந்தி - ஸதாபஶ்யந்தி பண்ணியிருக்கையே ஸ்வபாவமான நித்ய ஸூரிகளும் ஒவ்வார். இங்கு,கண்ணுக்குவிஷயம் புறம்பேயுண்டாயிருக்கச்செய்தே அத்தைத்யஜித்துக் காண்கிறவர்கள்; அவர்கள், அதுவே ஆசையாக விருக்கிறவர்களிறே. ... ... ... ச

வலிவணக்குவரைநெடுந்தோள்விராதைக்கொன்று வண்டமிழ்மாமுனிகொடுத்தவரிவில்வாங்கி, கலைவணக்குநோக்கரக்கி மூக்கை நீக்கிக்கரனோடு தூடணன்றனுயிரைவாங்கிச், சிலைவணக்கிமான் மரியவெய்தான்றன்னைத்தில்லைநகர்த் திருச்சித்திரகூடந்தன்னுள், தலைவணக்கிக்கைகூப்பி யேத்தவல்லார்திரிதலால் தவமுடைத்துத் தரணிதானே. (ரு)

ப-லா.—வலிவணக்கு-எதிரிகள் வலியைத் தோற்பிக்கக்கடவதாய், வரை-மலைபோலே, நெடு - திண்ணிதான, தோள் - தோள்களையுடைய, விராதை-விராதனை, கொன்று—, வண் - யாவர்க்கும் எளிதில்கற்கலான, தமிழ் - தமிழ்பாஷைக்கு நிர்வாஹகராய், மா - ரிஷிச்ரேஷ்டரான, முனி - அகஸ்த்யரிஷியானவர், கொடுத்த—, வரி - தர்சநீயமான, வில் - வில்லை, வாங்கி-வளைத்து, கலை-மானின்நோக்கை, வணக்கு - தோற்பிக்கக்கடவதான, நோக்கு - நோக்கையுடைய, அரக்கி - சூர்ப்பணகியுடைய, மூக்கை—, நீக்கி - அறுத்து, கரனோடு தூடணன்றன் - கரதூஷணர்களுடைய, உயிரை - ப்ராணனை, வாங்கி - முடி

த்து, மான் - மான்வடிவுகொண்டுவந்தமாரீசன், மரிய - முடியும்படி, சிலை வணக்கி - வில்லைவளைத்து, எய்தான்றன்னை - பாணப்ரயோகம்பண்ணினவனை, தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள்—, தலைவணக்கி - தெண்டன் ஸமர்ப்பித்து, கைகூப்பி - அஞ்சலிபண்ணி, ஏத்தவல்லார் - ஸ்தோத்ரம்பண்ண வல்லவர்கள், திரிதலால் - ஸஞ்சாரம் பண்ணுகையாலே, தரணி - இந்த பூமியானது,தவமுடைத்து - பாக்யத்தையுடையது.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (வலிவணக்கு) எதிரிகள்வலியைத் தோற்பிக்கக்கடவதாய் மலைபோலே திண்ணியதான தோள்களையுமுடைய விராதனைக்கொன்று. (வண்டமிழ் மாமுனிகொடுத்த) அகஸ்த்யன்கொடுத்த தர்ஶநீயமான வில்லைவாங்கி. (கலைவணக்கு நோக்கரக்கி)கலைநோக்கைத்தோற்பிக்கும்படியானநோக்கையுடைய ஶூர்ப்பணகியுடையமூக்கைவாங்கி. (கரனோடுதூடணன்றன் உயிரைவாங்கி) இவளுடையரூபவைரூப்யங்கண்டுபொறுக்கமாட்டாதே வந்த கரதூஷணர்களை ப்ராணன்களை ஹரித்து. (சிலைவணக்கிமான் மரிய வெய்தான்றன்னை) அதுகேட்டுப் பொறாத ராவணனாலே ப்ரேரிதனாய்வந்த மாரீசனான மாயாம்ர்கத்தை யெய்துகொன்றவனை. (தில்லைநகரித்யாதி) அக்காலத்தில்காணப்பெறாத இழவெல்லாந்தீரத் தலையுண்டான ப்ரயோஜநம்பெற வணங்கி, கையுண்டான ப்ரயோஜநம்பெறத் தொழுது, வாயுண்டான ப்ரயோஜநம்பெற ஏத்த வல்லார்திரிதலால். (தவமுடைத்துத்தரணிதானே) இவர்களுடைய ஸஞ்சாரத்துக்கு விஷய மாகையாலே பூமியானது பாக்யத்தை யுடையது. ... ... ... ... ... ... ரு

தநமருவுவைதேகி பிரியலுற்றுத்தளர்வெய்திச் சடாயுவை வைகுந்தத்தேற்றி, வநமருவுகவியரசன் காதல்கொண்டுவாலியைக் கொன் றிலங்கைநகரரக்கர்கோமான், சினமடங்கமாருதியாற் சுடுவித்தானைத்தில்லைநகர்த் திருச்சித்திரகூடந்தன்னுள், இனிதமர்ந்தவம் மானை யிராமன்றன்னையேத்துவா ரிணையடியேயேத்தினேனே. (கூ)

ப-கா.—தநம் - ஸ்தநத்தினழகாலே, மருவு - கூடி யிருப்பதற்குயோக்யையான, வைதேகி - விதேஹராஜன் திருமகளானபிராட்டியை, பிரியலுற்று-பிரிகையாலே, தளர்வெய்தி - மனம்வருந்தி, பிராட்டிக்காக ராவணனோடே எதிர்த்து யுத்தம்செய்து ப்ராணனைவிட்ட, சடாயுவை - ஜடாயுமஹாராஜனை, வைகுந்தத்தேற்றி - பரமபதத் தேறப்போகவிட்டு, வநம் மருவு - வாலிக்கு அஞ்சிக்காட்டிலே மறைந்து வர்த்திக்கிற, கவியரசன் - ஸுக்ரீவமஹாராஜர்பக்கலுண்டான, காதல்கொண்டு - ஸ்நேஹத்தாலே, வாலியைக்கொன்று—,இலங்கைநகர் - லங்காநகரத்திலிருக்கிற, அரக்கர் - ராக்ஷஸர்களுக்கு, கோமான் - அரசனான ராவணனுடைய அபிமாநமும், சினம் - கோபமும், அடங்க - அடங்கும்படி, மாருதியால் - திருவடி வாலாலே, சுடுவித்தானை - கொளுத்துவித்தவனை, தில்லைநகர்த் திருச்சித்திரகூடந்தன்னுள்—, இனிது-இனிதாக, அமர்ந்த-எழுந்தருளியிருக்கிற, அம்மானை-ஸர்வேச்வரனான, இராமன்றன்னை - சக்ரவர்த்தித் திருமகனை, ஏத்துவார் - ஸ்தோத்ரம் பண்ணுமவர்களுடைய, இணையடியே-திருவடிகளையே, ஏத்தினேன் - ஸ்தோத்ரம் பண்ணப்பெற்றேனென்கிறார்.

வ்யா.—ஆறாம்பாட்டு. (தனமருவு) திருமுலைத்தடத்தினழகாலும் ஆபிஜாத்யத்தாலும் பிரியத்தகாத பிராட்டி பிரிவாலே பெருமாள் தம்மளவிலே நோவுபட்டு, பிராட்டிக்காக ராவணனோடே யுத்தம்பண்ணி ப்ராணனைவிட்ட பெரியவுடையாரைப் பரமபதத்தேறப் போகவிட்டு. "தநமருவுவைதேகி" என்று "ஃஃஃ" "விஷ்ணோ:ஸ்ரீ" என்கிறபடியே-பெருமாளுக்கு தநமான பிராட்டியென்றுமாம். (வநமருவுகவியரசன்) வாலிக்கு அஞ்சிக் காட்டிலே மறைந்துகிடக்கிற குரங்குகளுக்கு ராஜாவான ஸுக்ரீவனை ஸ்நேஹபூர்வகமாகக் கட்சிகொண்டு, அவற்காக அதிபல பராக்ரமனான வாலியை நிரஸித்து. (இலங்கைநகர்) லங்கைக்கு நிர்வாஹகனென்றும் ராக்ஷஸேஸ்வரனென்றும் மோஹித்திருக்கிறவனுடைய அபிமாநமும் சீற்றமுமடங்கும்படி, திருவடிவாலிலே நெருப்பையிட்டுச் சுடுவித்தவனை. (தில்லைநகரித்யாதி) அக்காலத்திலநுபவிக்கப் பெற்றிலோமென்னும் இழவுதீர இங்கே நித்யஸந்நிஹிதனா[illegible]த்திக்கிற ஸர்வேஶ்வரனான சக்ரவர்த்தித்திருமகனை. (ஏதமியார்) அவனுடைய வடிவழகிலும் ஸௌலப்யத்திலு மீடுபட்டேத்துமவர்கள் திருவடிகளிலே யேத்தினேனே. ... ... ... ... சா

குரைகடலையடலம்பால் மறுகவெய்து குலைகட்டி மறுகரையை யதனாலேறி, எரிநெடுவேலரக்கரொடு மிலங்கைவேந்தனின்னுயிர் கொண் டவன்றம்பிக்கரசுமீந்து, திருமகளோடினிதமர்ந்த செல்வன்றன்னைத்தில்லைநகர்த் திருச்சித்திரகூடந்தன்னுள், அரசமர்ந்தானடிசூடு மரசையல்லாலரசாக வெண்ணேன்மற்றரசுதானே. (எ)

ப-ரை.—குரை - சப்தியாநின்றுள்ள, கடலை - ஸமுத்ரத்தை, அடல் - சத்ருக்களை வருத்தத்தக்க, அம்பால் - அம்பாலே, மறுக-கலங்கும்படி, எய்து—, குலைகட்டி - அணைகட்டி, அதனால் - அந்த அணையாலே, மறு கரையை யேறி- அந்தக்கரையிலேபோய், எரி - சத்ருக்களை யெரிக்கக்கடவதாய், நெடு-பெரிய, வேல் - வேலையுடையரான, அரக்கரொடும் - ராக்ஷஸருடைய ப்ராணனையும், இலங்கைவேந்தன் - லங்காதிபதியான ராவணனுடைய, இன் - இனிய, உயிர்- ப்ராணனையும், கொண்டு - அபஹரித்து, அவன் தம்பிக்கு - அவன் தம்பியான ஸ்ரீ விபீஷணாழ்வானுக்கு, அரசீந்து - ராஜ்யத்தைக்கொடுத்து, பிரிவெல்லாம் மறக்கும்படி, திருமகளோடு - பிராட்டியோடே, இனிது - இனிதாக, அமர்ந்த- அமர்ந்தருளிய, செல்வன்றன்னை- ஐச்வர்யமுடையவனை, தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள்—, அரசமர்ந்தான்-ராஜ்யம்பண்ணுமவனுடைய, அடிசூடும்- திருவடிகளை சிரஸ்ஸிலே தரிக்கையாகிற, அரசையல்லால்-அரசாட்சியையொழிய, மற்றரசு - இதரராஜரீகத்தை, அரசாகவெண்ணேன் - அரசாட்சியாக நினையே னென்கிறார்.

வ்யா.—ஏழாம்பாட்டு.(குரைகடலை)கோஷத்தையுடைத்தான கடலை, ஶத்ருக்களென்றால் எப்போதோவென்று மேல்விழக்கடவதான அம்பைவிட்டு மறுகும்படியாக வெய்து. (குலைகட்டி) அஞ்சின கடலானது என்மேமே. தூர்த்துக்கொள்ளீ ரென்ன;

அதின்மேலேமலைகளையிட்டுத் தூர்த்து வழிசெய்து அந்தக்கரையிலே
போய். (எரிநெடுவேல்) ஶத்ருக்களை எரிக்கக்கடவதாய் நெடிதான
வேலையுடைய ராக்ஷஸரோடே, லங்காதிபதியான ராவணனை அவ
னுகந்த ப்ராணனை ஹரித்து, அவன் தம்பிக்கு ராஜ்யத்தைக்கொடு
த்து, பிராட்டியோடேகூட, பிரிந்த பிரிவெல்லாம் மறக்கும்படி
இனிதமர்ந்தருளிய ஐஶ்வர்ய முடையவன்றன்னை. (தில்லைநகரித்
யாதி) ராஜ்யம்பண்ணி யிருக்கிறவன் திருவடிகளைக் கொடுக்கை
யாகிற ராஜ்யமொழிய அதுக் கெதிர்த்தட்டாக ஸ்வதந்த்ரத்தைப்
பார்க்கும் ராஜ்யத்தை ராஜ்யமாகவேண்டேன். ... ... எ

அம்பொனெடுமணிமாட வயோத்தியெய்தியரசெய்தி யகத்தி
யன்வாய்த் தான்முன்கொன்றான், தன்பெருந்தொல்கதைகேட்டு
மிதிலைச்செல்வியுலகுய்யத் திருவயிறுவாய்த்தமக்கள், செம்பவளத்
திரள்வாய்த் தன்சரிதைகேட்டான்றில்லைநகர்த் திருச்சித்திரகூடந்
தன்னுள், எம்பெருமான்றன்சரிதைசெவி யாற்கண்ணாற்பருகுவோ
மின்னமுதமதியோமன்றே. (அ)

ப-ரை.—அம் - பட்டாபிஷேகத்துக்காக அலங்கரித்து, பொன் - தர்சநீய
மாய், நெடு - உயர்த்தியையுடைத்தாய, மணி-ரத்நங்களாலே சமைக்கப்பட்ட,
மாடம் - மாடங்களையுடைய, அயோத்தி - திருவயோத்யையிலே, எய்தி-மீண்
டெழுந்தருளி, அரசுஎய்தி - ராஜ்யபாரத்தையடைந்து, அகத்தியன்வாய்-அக
ஸ்த்யாச்ரமத்திலே, வேறு பணியில்லாமையாலே, தான்—, முன் - முன்பு,
கொன்றான்றன் - கொன்ற ராவணனுடைய, பெரும் - பெருமைதங்கிய, தொல்
கதை-பூர்வ வ்ர்த்தாந்தங்களை, கேட்டு - கேட்டும், மிதிலைச்செல்வி - ஸ்ரீ ஜநக
ராஜன் திருமகளானபிராட்டி, உலகு உய்ய - லோக மடைய உஜ்ஜீவிக்கும்
படி, திருவயிறுவாய்த்த-பெற்ற, மக்கள் - குசலவர்களுடைய, திரள்-திரண்டு,
செம்-சிவந்த, பவளம்-பவளம்போன்ற, வாய்-வாயாலே, தன் - தன்னுடைய,
சரிதை - சரித்ரமான ஸ்ரீ ராமாயணத்தை, கேட்டான் - கேட்டருளின சக்ர
வர்த்தித் திருமகன் நித்யவாஸம் பண்ணுகிற, தில்லைநகர்த் திருச்சித்திரகூடந
தன்னுள்—, எம்பெருமான்றன் - என் நாதனுடைய, சரிதை-வ்ர்த்தாந்தத்தை,
திருவடியைப்போலே, செவியால் - செவிகளாலும், கண்ணால் - கண்களாலும்,
பருகுவோம் - அநுபவிக்கப்பெற்ற நாம், இன் அமுதம் - இனிதான தேவா
ம்ர்தத்தை, இன்று—, மதியோம் - ஒருபொருளாக மதியோம்.

வ்யா.—எட்டாம்பாட்டு. (அம்பொன்) திருவபிஷேகத்துக்
கிடாக அலங்கரித்து தர்ஶநீயமாய் ஓக்கத்தையுடைத்தாய் நல்லரத்ந
ங்களாலேசமைக்கப்பட்ட மாடங்களையுடைய திருவயோத்யையிலே
ஜகத்தையெல்லாம் உகக்கும்படி மீண்டெழுந்தருளிப் புகுந்து.
(அரசெய்தி) "𑌰𑌾𑌜𑍍𑌯𑌂𑌪𑍁𑌨𑌰𑌵𑌾𑌪𑍍𑌤𑌵𑌾𑌨𑍍" "ராஜ்யம்புநரவாப்தவாந்"
என்னும்படியே ஜகத்தையெல்லாம் வாழும்படி ஸாம்ராஜ்யத்திலே
அதிகரித்து. (அகத்தியன்) வேறு க்ர்த்யாம்ஶ மில்லாமையாலே
போதுபோக்காகத் தான் முன்கொன்ற ராவணனுடைய பூர்வ வ்ர்
த்தாந்தங்களை யடைய அகஸ்த்யபகவாந் விண்ணப்பஞ்செய்யக்

கேட்டு. (மிதிலைச்செல்வியித்யாதி) ஸ்ரீஜநகராஜன் திருமகள், ஜகடைய வுஜ்ஜீவிக்கும்படி பெற்ற குஶலவர்கள்பேசத் தம்முடைய வ்ருத்தமான ஸ்ரீராமாயணகதையைக் கேட்டருளினவர் நித்யவாஸம் பண்ணுகிற, என்னுடைய நாதனுடைய வ்ருத்தாந்தத்தைத் திருவடியைப்போலே ஸர்வேந்த்ரியங்களாலும் அநுபவிக்கப்பெற்ற நாம் தேவஜாதி யநுபவிக்கிற அம்ருதத்தை யொன்றாகமதியோமே. அ

செறிதவச்சம்புகன்றன்னைச் சென்றுகொன்றுசெழுமறையோனுயிர்மீட்டுத்தவத்தோனீந்த, நிறைமணிப்பூணணியுங்கொண் டிலவணன்றன்னைத்தம்பியால் வானேற்றிமுனிவன்வேண்டத், திறல்விளங்குமிலக்குமனைப் பிரிந்தான்றன்னைத்தில்லைநகர்த் திருச்சித்திரகூடந்தன்னுள், உறைவானைமறவாதவுள்ளந் தன்னையுடையோம் மற்றுறு துயரமடையோமன்றே. (கூ)

ப-ரை.—செறிதவம் - மிக்க தபஸ்ஸையுடையனான, சம்புகன்றன்னை-ஜம்புகனென்னும் ஶூத்ரனை, சென்று - அவனிருக்குமிடம் தேடிச்சென்று, கொன்று - அவனை யுருவழித்துப் பொகட்டு, செழு - விலக்ஷணனான, மறையோன் உயிர் - ப்ராஹ்மணனுடைய புத்ரன் ப்ராணனை, மீட்டு—, தவத்தோன்-அகஸ்த்யபகவான், ஈந்த - கொடுத்தருளின, நிறை-ஒளிமிக்கிருந்துள்ள, மணிப்பூணணி - ரத்நஹாரத்தை, கொண்டு - சாத்தியருளி, திருவயோத்யையிலே புகுந்து, இலவணன்றன்னை - லவணாஸுரனை, தம்பியால்-ஸ்ரீசத்ருக்நாழ்வானையிடுவித்து, வானேற்றி - வீரஸ்வர்க்கத்திலே யேற்றுவித்து, முனிவன்வேண்ட-துர்வாஸச்சாபத்தாலே, திறல்விளங்கும் - பகைவரைவெல்லுகையில் மிக்க ஸாமர்த்யமுடையரான, இலக்குமனை - இளையபெருமாளை விட்டு, பிரிந்தான்றன்னை - பிரிந்த சக்ரவர்த்தித் திருமகனை, தில்லைநகர்த் திருச்சித்திர கூடந்தன்னுள் உறைவானை - திருச்சித்திரகூடத்திலே நித்யவாஸம்பண்ணுமவனை, மறவாத வுள்ளந் தன்னையுடையோம் - மறவாத மனஸ்ஸையுடையரான நமக்கு, மற்று - இனிமேல், உறு - எம்பெருமானை யநுபவிக்கப் பெறுமையால் வரக்கடவ, துயரமடையோம் - துக்கத்தையடையமாட்டோமென்கிறார்.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (செறிதவச்சம்புகனித்யாதி) மிக்க தபஸ்ஸை யுடையனாய் ஶூத்ரனான ஜம்புகனைத் தலையறுத்து. (செழுமறையோனுயிர்மீட்டு) விலக்ஷணனான ப்ராஹ்மணனுடைய புத்ரன்ப்ராணனைமீட்டு, அகஸ்த்யபகவான் கொடுத்த பெருவிலையனான ஹாரத்தையுஞ் சாத்தியருளித் திருவயோத்யையிலே புகுந்து, லவணாஸுரனை ஸ்ரீஶத்ருக்நாழ்வானையிடுவித்து வீரஸ்வர்க்கத்திலே குடியேற்றுவித்து. (முனிவனித்யாதி) துர்வாஸாவினுடைய ஶாபத்தாலே, "ஸ்ர்க்ஷம்ஸ்நீஸ்நுர்ஸ்ந" "த்விதீயம்மேந்தராத்மாநம்" என்கிறபடியே-தம்முடைய ப்ராணபூதரான இளையபெருமாளுக்கு விடைகொடுத்து, அப்படிப்பட்ட தன்னைப் பின்புள்ளார் காணப்பெறாத இழவுதீரத் திருச்சித்திரகூடத்திலே நித்யவாஸம் பண்ணுகிறவனை. (மறவாதவுள்ளந்தன்னையுடையோம்) இப்படிப்பட்ட ஸௌலப்யத்தை அநவரதபாவனைபண்ணியிருக்கிறநமக்கு "எம்பெருமானை யநுபவிக்கப் பெற்றிலோம்" என்கிற இழவு இனியில்லை. ... கூ

அன்றுசராசரங்களைவைகுந்தத் தேற்றியடலரவப்பகையேறி யசுரர்தம்மை, வென்றிலங்குமணிநெடுந்தோள் நான்குந்தோன்ற விண்முழுது மெதிர்வரத்தன்றாமமேவி, சென்றினிதுவீற்றிருந்த வம்மான்றன்னைத்தில்லைநகர்த் திருச்சித்திரகூடந்தன்னுள், என்று நின்றானவனிவனென் றேத்திநாளுமிறைஞ்சுமினோ வெப்பொழுதுந்தொண்டீர்நீரே. (௧௦)

ப-ரை.—அன்று - தீர்த்தம் ப்ரஸாதித்தருளுகிறவன்று, சராசரங்களை—, வைகுந்தத்து - பரமபதத்திலே, ஏற்றி - போகவிட்டு, அடல்-வலியையுடைய, அரவம் - ஸர்ப்பஜாதிக்கெல்லாம், பகையேறி - சத்ருவான பெரியதிருவடியை மேற்கொண்டு, அசுரர்தம்மை - அஸுரவர்க்கத்தை, வென்று - ஜயிக்கையாலே, இலங்கு - விளங்குகிற, மணி - அழகிய, நெடும்-நீண்ட, தோள்நான்கு-நான்கு திருத்தோள்கள், தோன்ற - தோன்றவும், விண்முழுதும் - பரமபதத்திலுள்ளாரெல்லாம், எதிர் வர - எதிர் கொண்டுவர, தன் - தன்னுடைய, தாமம்-ஸ்தாநத்திலே, மேவிச்சென்று-போய்ப்புக்கு, இனிது - இனிதாக, ஸிம்ஹாஸநத்திலே, வீற்றிருந்த - தன்பெருமைதோற்ற எழுந்தருளியிருந்த, அம்மான்றன்னை-ஸர்வேச்வரனை, தில்லைநகர்த் திருச்சித்திரகூடந்தன்னுள்—, என்றும் நின்றான் - நித்யவாஸம்பண்ணுகிறான்; தொண்டீர்காள் - அநந்யப்ரயோஜநரான நீங்கள், அவன் - அப்படிப்பட்டவன், இவன் - இப்படிப்பட்டவன், என்று ஏத்தி - என்று ஸ்துதித்து, நாளும் - நாள்தோறும், இறைஞ்சுமின் - ஆச்ரயித்துக்ருதார்த்த ராகுங்கோ ளென்கிறார்.

வ்யா.—பத்தாம்பாட்டு. (அன்று சராசரங்களை) "அபிவ்ருக்ஷாঃ பரிம்லாநাঃ" "அபிவ்ர்க்ஷாঃ பரிம்லாநாঃ" என்று-வ்யதிரேகத்திலே அவைபட்ட தறிந்தருளுகையாலே "நோசாஸக்தமயோத்யாயாம் ஸுஸூக்ஷ்மமபித்ருச்யதே । திர்யக்யோநிகதாச்சாபி ஸர்வே ராமமநுவ்ரதாঃ" "நோசாஸக்தமயோத்யாயாம் ஸுஸூக்ஷ்மமபித்ர்ஶ்யதே । திர்யக்யோநி கதாஶ்சாந்யே ஸர்வேராமநுவ்ரதாঃ" என்கிறபடியே - இவையபெருமாளோபாதி பரமபதத்துக்குப் போகவிட்டு. (அடலரவப் பகையேறி) ஸர்ப்பஜாதிக்கு ஜந்மஶத்ருவான பெரியதிருவடியை மேற்கொண்டு அஸுரவர்க்கத்தைவென்று அந்த வீரஶ்ரீ விளங்குகிற திருத்தோள்கள்நாலோடுங்கூட அங்குள்ளாருகக்கும்படி எழுந்தருளி பரமபதத்திலேபோய்ப் புக்கு தன் மேன்மையெல்லாம் தோற்றும்படியான ஈஶ்வரனை. (தில்லைநகரித்யாதி) அவ்விருப்பிலொன்றுங் குறையாமே காலதத்த்வமுள்ளதனையுமிங்கே நமக்காக நித்யவாஸம் பண்ணுமவனை அநந்ய ப்ரயோஜநரான நீங்கள் அவனை ஆஶ்ரயித்து க்ர்தார்த்த ராகுங்கோள். ... ... ... ௧௦

தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுட் டிறல்விளங்கு மாருதியோடமர்ந்தான்றன்னை, எல்லையில்சீர்த்தயரதன்றன் மகனாய்த்தோன்றிற்றது முதலாத்தன்னுலகம்புக்கதீறாக், கொல்லியலும்படைத்தானைக் கொற்றவொள்வாள்கோழியர்கோன் குடைக்குலசேகரன் சொற்செய்த, நல்லியலின்றமிழ்மாலை பத்தும்வல்லார் நலந்திகழ் நாரணனடிக்கீழ்நண்ணுவாரே. (௧௧)

ப-ரை.—தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள்—, திறல்விளங்கு-திறல் விளங்காநின்றுள்ள, மாருதியோடு - சிறியதிருவடியோடே, அமர்ந்தான்றன்னை - நித்யவாஸம்பண்ணுகிறவனை, எல்லையில் - அளவில்லாத, சீர்-நல்லகுணங்களையுடையனான, தயரதன்றன் - தசரதசக்ரவர்த்திக்கு, மகனாய்த் தோன்றிற்றதுமுதலா - பிள்ளையாகப்பிறந்ததுமுதலாக, தன்னுலகம்புக்கதீறு - தன்னுடைச்சோதிக்கு எழுந்தருளினதுமுடிவாக, கொல்லியலும்-கொலையைமுயலாநின்றுள்ள, படை -வேலையுடைய, தானை - ஸேனையையுடையராய், கொற்றம்-வெற்றியையும், ஒள் - அழகையுமுடைய, வாள் - வாளையுடையராய், கோழியர் - உறையூரிலுள்ளார்க்கு, கோன் - தலைவராய், குடை-வெண்கொற்றக்குடையையுமுடையரான, குலசேகரன் - ஸ்ரீகுலசேகரப்பெருமாள், சொற்செய்த-அருளிச்செய்ததாய், நல்இயல்-அழகிய இயலையுடைத்தாய், இன் - இனியதாய், தமிழ் - த்ராவிடபாஷையாய், மாலை - மாலாரூபமான, பத்தும் - இப்பத்துப் பாட்டுக்களையும், வல்லார்-சொல்லவல்லவர்கள், நலந்திகழ் - நன்மைவிளங்காநின்றுள்ள, நாரணனடிக்கீழ் - ஸர்வேச்வரன்திருவடிகளை, நண்ணுவார் - கிட்டப்பெறுவர்கள்.

வ்யா.—நிகமத்தில். (தில்லைநகரித்யாதி) "[Telugu script]" "பாவோநாந்யத்ரகச்சதி" என்று அங்குப்போகேனென்ற திருவடியை விடமாட்டாமே இங்கேவந்து நித்யவாஸம் பண்ணுகிறவனை. (எல்லையில்சீரித்யாதி) பஹுகுணனான சக்ரவர்த்திக்கு, "[Telugu script]" "பிதரம்ரோசயாமாஸ" என்று பிள்ளையாய்ப்பிறந்தது தொடக்கமாகப் பரமபதம்புக்கது முடிவாகவுண்டான ஸ்ரீராமாயணகதையை.(கொல்லியலும்படைத்தானை)கொலையை முயலாநின்றுள்ள வேலையுடைய படையையுடையராய். (கொற்றவொள்வாள்) வெற்றியையும் அழகையுமுடைய வாளையுடைய. (கோழியர் கோன்) கோழியர்க்குக்கோன். கோழி - உறையூர். சோழராஜாவானவன். (குடைக்குலசேகரன்சொற்செய்த) வெண்கொற்றக் குடையை யுடையரான ஸ்ரீகுலசேகரப்பெருமா ளருளிச்செய்த. (நல்லியலின்தமிழ்மாலை பத்தும்வல்லார்) அழகிய இயலையுடைய தமிழ்மாலை பத்தும்வல்லார். (நலந்திகழ்நாரணனடிக்கீழ் நண்ணுவாரே) பரமபதத்திலே விளங்காநின்றுள்ள ஸர்வேச்வரன்திருவடிகளைக் கிட்டப்பெறுவர்கள். ... ... ... ... ௧௧

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

———:0:———

அடிவரவு - அங்கணெடு வந்தெதிர்ந்த செவ்வரிநற் றொத்தலர்பூம் வலிவணக்கு தனமருவு குரைகடலை அம்பொன் செறிதவ அன்றுசராசரம் தில்லைநகர் பூநிலாய.

ஆ திருமொழி - ௧௦ - இ - பாட்டு - ௧௦௫.

---

பெருமாள் திருமொழி வ்யாக்யாநம் ஸம்பூர்ணம்.



ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# திருமழிசைப்பிரான் அருளிச்செய்த திருச்சந்தவிருத்தத்

## தனியன்களுக்கு

பிள்ளைலோகஞ்சீயரருளிச்செய்த

## வ்யாக்யாநம்.

அவதாரிகை.—(தருச்சந்தப்பொழில்) இதில்-திருச்சந்தவிருத்தஞ்செய்தருளின திருமழிசைப்பிரான் அவதாரஸ்தலமான*திருமழிசைவளம்பதியும் ஒருதேசமே! என்று அதிலே ஆழங்காற்படும்படி சொல்லுகிறது.

தருச்சந்தப்பொழில்தழுவுதாரணியின் துயர்தீரத்
திருச்சந்தவிருத்தஞ்செய்திருமழிசைப்பரன்வருமூர்
கருச்சந்துங்காரகிலுங்கமழ்கோங்குமணநாறும்
திருச்சந்தத்துடன்மருவுதிருமழிசைவளம்பதியே.

வ்யா.—(தருச்சந்தப்பொழில்தழுவுதாரணியின்துயர்தீர) தரு-கல்பகத்தரு. சந்து-சந்தநம். * சந்தநப்பூமலர்சோலையிறே;இரண்டு சோலையாலும் சூழப்பட்ட. தாரணி-பூமி. பொழில்தழுவியிருக்கிற பூமியிலுண்டான மநுஷ்யர் துக்கம்தீர. அவர்கள் பகவத்விஷயத்தை யிழந்திருக்கிற துக்கம்தீர. அவர்கள்தான்போக்ய போகோபகரண போகஸ்தாநங்களைவிரும்பி பகவத்விமுகராயாய்த் திருப்பது. அதுக்குமேலே "அறியார்சமணரயர்த்தார்பவுத்தர்சிறியார்சிவப்பட்டார்" என்றிறே அவர்கள்அந்யசேஷபூதராய் அநர்த்தப்படுகிறது; அவற்றை நிவர்த்திப்பித்து ஸத்வர்த்தராக்குகைக்காக வாய்த்து-"திருச்சந்தவிருத்தம்"என்கிற திவ்யப்ரபந்தம் செய்தருளிற்று. அதிலே "புண்டரீகபாதபுண்ணியகீர்த்தி நும்செவிமடுத்துண்டு நும்முறுவினைத்துயருள்நீங்கியுய்மினோ" என்றும், "நன்மாலைவாழ்த்திவாழ்மினோ" என்றும்-பகவத்பஜநத்தையும் தேவதாந்தராஜ்ஞாநாமுக்திகளை,*காணில் * கொந்தம் * வண்டு * போதுகளிலே ஸ்வயக்தமாக தர்ஸிப்பித்தும் திருத்தியருளிற்று. (திருச்சந்தவிருத்தம்) சந்தோரூபமான வ்ர்த்தமென்றபடி. "கலித்துறை, விருத்தம், வெண்பா" என்றாப்போலே சொல்லக்கடவதிறே. ஏவம்வித ப்ரபந்தநிர்மாணகராய்த் திருமழிசைக்கு நாதரான ஆழ்வாரவதரித்தவூரிருக்கும்படி சொல்லுகிறது (கருச்சந்தும்காரகிலும்கமழ்) ஆகரத்தில் சந்தநாகருக்களாலும் பரிமளிதமாய்.

(கோங்குமணநாறும்) கோங்கென்கிற வ்ருக்ஷத்தினுடைய புஷ்பபரிமளத்தையு முடைத்தாய் எல்லாவற்றிலும் மிக்க பரிமளத்தை யுடைத்தாகையாலே * வேரிமாறாதபூமேலிருப்பாளாய் ஸ்ரீ என்று திருநாமத்தை யுடையளான பெரியபிராட்டியாருடன் பொருந்தி யிருக்கும் திருமழிசை. (வளம்பதியே) இந்த விபூதியிலே இதொரு தேசமே! கோங்கு என்று - பரிமளமாகவுமாம் - வளம் - அழகும், ஸம்பத்தும். ஆழ்வாராலே ஊரும் உத்தேஸ்யமாயிருக்கிறது. ... க

அ.—(உலகுமழிசையும்) "இதில் திருமழிசை - மஹீஸாரக்ஷேத்ரம்" என்று மஹத்தையைச் சொல்லுகிறது.

உலகுமழிசையு முள்ளுணர்ந்து தம்மில்
புலவர்புகழ்க்கோலால் தூக்க - உலகுதன்னை
வைத்தெடுத்தபக்கத்தும் மாநீர்மழிசையே
வைத்தெடுத்தபக்கம் வலிது.

வ்யா.—(உலகுமழிசையும்) லோகங்களையும் விலக்ஷணமான திருமழிசையையும். (உள்ளுணர்ந்து) மாஹாத்ம்யங்களை மநஸ்ஸிலே மநநம்பண்ணி. (தம்மில்புலவர்) பார்க்கவாதி மஹர்ஷிகளான மஹாகவிகள். (புகழ்க்கோலால்தூக்க) இவற்றின்புகழை யென்னுதல்; புகழ்க்கோலாலே யென்னுதல். தூக்க - துலைப்படுத்திநிறுக்க. (உலகுதன்னைவைத்தெடுத்தபக்கத்தும்) லோகத்தைவைத்தெடுத்த துலையைக்காட்டிலும். (மாநீர்மழிசையே வைத்தெடுத்தபக்கம்வலிது) மிக்க ஜலஸம்ருத்தியையுடைய மஹீஸாரக்ஷேத்ரத்தை வைத்தெடுத்த துலையே அதுலமாயிருந்தது. அகஸ்த்ய துர்வாஸாதிகளிருந்த பக்கம்போலே ஆழ்வாரவதரண ஹேதுவானதேஸமும் தாழ்ந்துகாட்டிற்றிறே. ஜகந்நாதனிறே அங்கேநித்யஸந்நிதிபண்ணுவது. "చిన్తయేత్సజగన్నాథం విష్ణుంజిష్ణుంసనాతనమ్" "சிந்தயேத் ஸஜகந்நாதம் விஷ்ணும்ஸநாதநம்" என்றிறே தத்யாநபரராய் அங்குள்ளதபோதநரிருப்பது; அத்தாலே வைத்தெடுத்தபக்சம் வலிதாய்த்து. "ధాత్రాతు లితాఙ్ఘుమహీ" "தாத்ராதுலிதாலகுமஹீ" என்னக்கடவதிறே. மாநீர்மழிசை-தீர்த்தம் திருமண்ணுண்டானஸ்தலம். "மழசாடுகண்டீர்மருந்து" என்னக் கடவதிறே. * பத்தியாண பாசனமான பக்திஸாராவதரணத்துக்கு அநுகுணமாயிருக்கும் தேஸமென்று அந்த திவ்யதேஸ வைபவம்சொல்லிற்றாய்த்து.

"తులయామలవేనాపి నస్వర్గంనపునర్భవమ్।
భగవత్సఙ్గిసఙ్గస్య మర్త్యానాంకిముతాశిషః॥"

"துலயாம லவேநாபி நஸ்வர்க்கம் நபுநர்ப்பவம்।
பகவத்ஸங்கி ஸங்கஸ்யமர்த் யாநாம்கிமுதாஸிஷஃ"

என்றிறே ததீயவைபவ மிருப்பது.

பிள்ளைலோகஞ்சீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# திருமழிசைப்பிரான் அருளிச்செய்த

## திருச்சந்தவிருத்தத்திற்கு

# பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த

## வ்யாக்யாநாவதாரிகை.

---

ஆழ்வார்திருமழிசைப்பிரானுகிறார் க்ர்ஷ்ணாவதாரம்போலே யாய்த்துப் பிறந்தபடியும் வளர்ந்தபடியும்;—யதுகுலத்திலே பிறந்து கோபகுலத்திலே வளர்ந்தாப்போலே, ரிஷிபுத்ரராய்ப் பிறந்து தாழ்ந்தகுலத்திலே யாய்த்து வளர்ந்தது. க்ர்ஷ்ணனாய் யதுகுலத்திலேபிறந்தாப்போலே அங்கே வளர்ந்தருளினானாகில் ராமாவதாரத்தோபாதியா மித்தனையென்று பார்த்தருளி, இடையரும் இடைச்சிகளும் பசுக்களும், "நம்மிலே யொருத்தன்" என்னும்படி தாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கைக்காகவாய்த்து கோபஸஜாதியனாய் வளர்ந்தருளிற்று; அப்படியே ஆழ்வாரும் பகவதபிப்ராயத்தாலே தாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கைக்காகத் தாழ்ந்தகுலத்திலே வளர்ந்தருளினாராய்த்து. இவ்வாழ்வாருக்கு ஸர்வேஶ்வரன் நிர்ஹேதுகமாக * மயர்வறமதிநலமருளி, தன்னுடைய திவ்யாத்மஸ்வரூபத்தையும், ததாஶ்ரயமான ஜ்ஞாநஶக்த்யாதிகல்யாணகுணங்களையும், உபயத்துக்கும் ப்ரகாஶகமான திவ்யமங்கள விக்ரஹத்தையும், அதுக்கலங்காரமான கிரீடாதிபூஷணவர்க்கத்தையும், அத்தோடு விகல்பிக்கலாம்படியான சங்கசக்ராதி திவ்யாயுதங்களையும், இதடங்கக் காட்டிலெறித்த நிலாவாகாமே அநுபவிக்கிற லக்ஷ்மீப்ரப்ர்தி மஹிஷீவர்க்கத்தையும், அச்சேர்த்தியேதங்களுக்கு தாரகாதிகளாக வுடையரான பரிஜநபரிபர்ஹத்தையும், இப்போகத்துக்கு வர்த்தகமான பரமபதத்தையும் ஸாக்ஷாத்கரிப்பித்து ப்ரக்ர்திபுருஷாத்மகமான லீலாவிபூதியினுடைய ஸ்ர்ஷ்டி ஸ்திதிஸம்ஹாரங்களை லீலையாகவுடையனாயிருக்கிறபடியையுங்காட்டிக்கொடுத்து, இப்படி உபயவிபூதிநாதனான எம்பெருமான் தன்பெருமையைக்காட்டிக்கொடுக்கையாலேபகவதநுபவைகபோகராய், "ஸ்ரீபஜநஸ்துரகு ஶரீரம்" "கோபஜநம்ஸ்மரந்திதம் ஶரீரம்" என்கிறபடியேஸம்ஸாரதோஷத்தை அநுஸந்திக்க இடமில்லாதபடி ஈஶ்வரன் தம்மை அநுபவிக்கையாலே மார்க்கண்டேயாதிகளைப்போலே சிரகாலம் ஸம்ஸாரத்திலே யெழுந்தருளி யிருந்தவிவர், ப்ராப்தமுமாய் ஸுலபமுமான விஷயத்தை ஸம்ஸாரிகளிழக்கைக்கு ஹேதுவென்னென்று அவர்கள்பக்கலிலே கண்வைத்தார்.

தாம்பகவத்விஷயத்தில்ப்ரவணராயிருக்கிறப்போலேரஜஸ்தமஸ் ஸுக்களாலேபிறந்த அந்யதாஜ்ஞாந விபரீதஜ்ஞாநங்களாலே, "యో బ్రహ్మాణం విదధాతి పూర్వమ్" "யோப்ரஹ்மாணம் விததாதிபூர்வம்" என்றும் "యుగకోటిసహస్రేషు విష్ణుమారాధ్య పద్మభూః । పునస్త్రైలోక్యధాతృత్వం ప్రాప్తవానితి శుశ్రుమః" "யுககோடிஸஹஸ்ரேஷு விஷ்ணுமாராத்யபத்மபூ:। புநஸ்த்ரைலோக்யதாத்ர்த்வம் ப்ராப்தவாநிதிஶுஶ்ரும:" என்றும் "వేదా మే పరమం చక్షుర్వేదా మే పరమం ధనమ్" "வேதாமேபரமம்சக்ஷுர்வேதாமேபரமம்தநம்" என்றும் "మహాదేవస్సర్వమేధే మహాత్మా" "மஹாதேவஸ்ஸர்வமேதே மஹாத்மா" என்றும்-குருபாதகாதிகளாலும்க்ஷேத்ரஜ்ஞதயாஸம்ப்ரதிபந்நரானப்ரஹ்மருத்ராதிகள்பக்கலிலே, "ఏక ఏవ రుద్రః" "హిరణ్యగర్భస్సమవర్తతాగ్రే" "ஏகஏவருத்ர:" "ஹிரண்யகர்ப்பஸ்ஸமவர்த்ததாக்ரே" என்று இத்யாதிப்ரஶம்ஸா வாக்யங்களாலும் தாமஸ புராணங்களாலும் பரத்வ புத்தியைப்பண்ணி, சேதநர் பகவத் விமுகராய் அநர்த்தப் படுகிறபடியைக்கண்டு பராநர்த்தம் பொறுக்கமாட்டாமையாலே நிர்த்தோஷ ப்ரமாணங்களாலும் ஸம்யஜ்ஞ்யாயங்களாலும் பாஹ்யகுத்ர்ஷ்டி நிரஸநபூர்வகமாக பகவத் பரத்வத்தை உபதேஶித்தவிடத்திலும் அவர்கள் அபிமுகீகரியாமையாலே, நாம் இவர்களைப்போலன்றியே ஜகத்காரண பூதனாய் பரமபத நிலயனான ஸர்வேஶ்வரனே ப்ராப்யனென்று அவன் ப்ரஸாதத்தாலே அறியப்பெற்றோம். இனி இவனை ஆஶ்ரயிக்குமிடத்தில் பரவ்யூஹங்கள் தேஶவிப்ரக்ர்ஷ்டத்வத்தாலே அஸ்மதாதிகளுக்கு ஆஶ்ரயணீயமாகமாட்டாது; அவதாரங்கள் காலவிப்ரக்ர்ஷ்டதையாலே ஆஶ்ரயணீயங்களாகமாட்டாது; இரண்டுக்கும் தூரஸ்தரான பாக்யஹீநர்க்கும் இழக்கவேண்டாதபடி அர்ச்சகபராதீநனாய் ஸர்வாபராதஸஹனாய் ஸர்வாபேக்ஷிதப்ரதனாய் வர்த்திக்கும் அர்ச்சாவதாரத்தின் நீர்மையை அநுஸந்தித்து ஆகிஞ்சந்யத்தை அதிகாரமாக்கி, ப்ரபத்தியை அதிகாரிவிஶேஷணமாக்கி, பகவத்க்ர்பையை நிரபேக்ஷோபாயமென்று அத்யவஸித்து அவனையாஶ்ரயித்து அவன் க்ர்பைபண்ணி முகங்காட்ட இவ்விஷயத்தை லபிக்கப்பெற்றேனென்று தமக்குப் பிறந்த லாபத்தைச்சொல்லித் தலைக்கட்டுகிறார். ... ... ... ... ... ... ...

அ.—முதற்பாட்டு. "భూతేభ్యోऽణ్డమ్" "பூதேப்யோऽண்டம்" என்கிறபடியே - அண்டகாரணமாய் ஸகுணமான ப்ர்த்வ்யாதி பூதபஞ்சகங்களுக்கு அந்தராத்மாவாய் நிற்கிற நீயே ஜகத்துக்கு உபாதாநகாரணம். இவ்வர்த்தம் வேதாந்தப்ரமேயம் கைப்படாத பாஹ்யகுத்ர்ஷ்டிகளால் நினைக்கவொண்ணாதென்கிறார்.

பூநிலாயவைந்துமாய்ப்புனற்கணின்றநான்குமாய்த்
தீநிலாயமூன்றுமாய்ச்சிறந்தகாலிரண்டுமாய்
மீநிலாயதொன்றுமாகிவேறுவேறுதன்மையாய்
நீநிலாயவண்ணநின்னையார்நினைக்கவல்லரே. (௧)

ப-ரை.—பூ - பூமியிலே, நிலாய - வர்த்திக்கிற, ஐந்துமாய் - சப்தஸ்பர்ச ரூபரஸகந்தங்களைந்துமாய், புற்னகணின்ற-ஜலத்திலேவர்த்திக்கிற, நான்குமாய் - சப்தஸ்பர்ச ரூபரஸங்கள் நான்குமாய், தீநிலாய - அக்நியிலேவர்த்திக்கிற, மூன்றுமாய் - சப்தஸ்பர்சரூபங்கள் மூன்றுமாய், சிறந்த - சேதநர்க்கு ஆதாரமாயிருக்கும் பலத்தையுடைய, கால்நிலாய - காற்றிலேவர்த்திக்கிற, இரண்டுமாய் - சப்தஸ்பர்சங்களிரண்டுமாய், மீநிலாயது - ஆகாசத்திலே வர்த்திக்கிற, ஒன்றுமாகி - சப்தகுணமொன்றுமாகி, வேறுவேறு தன்மையாய்-தேவாதிகளுக்கு அந்தராதமாவாய், நீ - சிதசிச்சரீரியானநீ, நிலாயவண்ணம்-கார்யகாரணவர்க்கத்திலே நிற்கும் ப்ரகாரத்தையுடையனாய், நின்னை - சிதசித்விசிஷ்டமாய்க்கொண்டு ஜகதுபாதாந காரணமாய்நிற்கிற வுன்னை, ஆர்நினைக்கவல்லரோ - நினைக்கவல்லாரார்.

வ்யா.—(பூநிலாயவைந்துமாய்)பூம்யிலேவர்த்திக்கிறஶப்தாதிகுணங்களைந்துமாய். "[illegible]" "[illegible]" "கந்தவதீ ப்ர்திவீ" "தஸ்யாகந்தோகுணோமதஃ" என்று-ப்ர்திவிகுணம்கந்தமாயிருக்க,ஶப்தாதிகளைந்தும் அதுக்குகுணமாகச்சொல்லுவானென்னென்னில்; "[illegible]" "சப்தாதிபிர்குணைர்ப்ரஹ்மந் ஸம்யுதாந்யுத்தரோத்தரை:" என்கிறபடியே காரணகுணாநுவர்த்தியாலே ஶப்தஸ்பர்ஶ ரூபரஸகந்தங்களையுங் கூட்டிச்சொல்லுகிறது. (புனற்கணின்றநான்குமாய்) அப்பிலேவர்த்திக்கிற ஶப்தஸ்பர்ஶரூபரஸங்களுமாய். "[illegible]" "ஸம்பவந்திததோம் பாம்ஸி ரஸாதாராணிதாநி து" என்கிறபடியே தக்குணம்ரஸமாயிருக்க, அதிலும்காரணகுணாநுவர்த்தியாலே ஶப்தஸ்பர்ஶ ரூபங்களையும் கூட்டிச்சொல்லுகிறது. (தீநிலாயமூன்றுமாய்) "[illegible]" "ஜ்யோதிருத்பத்யதே வாயோஸ்தத்ரூபம்குணஉச்யதே" என்கிறபடியே அக்நிகுணமான ரூபத்தோடே ஶப்தஸ்பர்ஶங்களைக் கூட்டி "மூன்றுமாய்" என்கிறது.

(சிறந்தகாலிரண்டுமாய்) ஸ்வஸஞ்சாரத்தாலே சேதநர்க்காதாரமான பலத்தையுடைய வாயுவினுடையகுணமிரண்டுமாய். "[illegible]" "பலவாந்பகவாந்வாயுஸ் தஸ்ய ஸ்பர்ஶோகுணோமதஃ" என்கிறபடியே வாயுகுணமான ஸ்பர்ஶத்தோடே ஆகாஶகுணமான ஶப்தத்தையுங் கூட்டிச்சொல்லுகிறது.

(மீநிலாயதொன்றுமாகி) மீதிலேவர்த்திக்கிறஶப்தகுணமொன்றுமாய். "[illegible]" "ஆகாஶம் ஶப்தலக்ஷணம்" என்கிறபடியே ஆகாஶகுணமொன்றையும்சொல்லுகிறது. உக்தமான பூதபஞ்சகங்களுக்குக் காரணமான ஏற்றத்தாலும் ஸ்வவ்யதிரிக்தங்களுக்கு அவகாஶப்ரதாநம்பண்ணு மேற்றத்தாலும் "மீது" என்று - ஆகாஶத்தைச்சொல்லுகிறது.

---

முதற்பாட்டு.—காரணகுணாநுவர்த்தியாவது - பூமிக்கு பரம்பரையா மற்றநாலுபூதங்களும் காரணமாகையாலே அந்த நாலு பூதங்களுடைய குணங்களும் கார்யமான பூமியிலே வர்த்திக்குமென்றபடி.

அண்டகாரணம் ப்ர்திவ்யாதிகளாயிருக்க ஶப்தாதி குணங்களோடே ஸமாநாதிகரித்தது ப்ர்திவ்யாதிகளோபாதி தத்குணங்களும் ஸ்வாதீநமா யிருக்கையாலே சொல்லுகிறது. ப்ர்திவ்யாதிகளோடு ஸாமாநாதிகரண்யம் ஶரீராத்மபாவ ஸம்பந்த நிபந்தநம்; குணங்களோடு ஸாமாநாதிகரண்யம் அவற்றினுடையஸத்தாதிகள் ஸ்வாதீநமாயிருக்கையாலே. அண்டத்துக்கு மஹதஹங்காரங்களும் காரணமாயிருக்க பூதங்களைச் சொல்லுவானென்னென்னில்; "తస్మాద్వా ఏతస్మాదాత్మన ఆకాశస్సమ్భూతః" "தஸ்மாத்வா ஏதஸ்மாதாத்மந ஆகாஶஸ்ஸம்பூதஃ" என்கிற ஶ்ருதிச்சாயையாலே யருளிச்செய்கிறார். "భూతేభ్యోऽణ్డమ్" "பூதேப்யோऽண்டம்" என்று ரிஷிகள் சொல்லுகிற பஞ்சீகரணத்தாலே - ஸூக்ஷ்மசிதசித்விஶிஷ்டப்ரஹ்மகாரணமாகையாலே சிதந்தர்ப்பூதமான புருஷஸமஷ்டியையும் நினைக்கிறது. இவ்வளவாக ப்ராக்ர்தஸ்ர்ஷ்டி சொல்லிற்றாய்த்து.

(வேறுவேறுதன்மையாய்) அண்டாந்தர்வர்த்திகளாய் ஒன்றுக்கொன்று விலக்ஷணமான தேவாதிபதார்த்தங்களுக்கும் ஆத்மாவாய். ஆத்மாக்களுடையஸ்வரூபம் ஏகரூபமாயிருக்க "வேறுவேறு" என்கிறது கர்மத்தால்வந்த தேவாதிரூப பேதங்களைப்பற்ற. (நீநிலாயவண்ணம்) சிதசிச்சரீரியானநீ கார்யகாரணவர்க்கத்திலேநிற்கிற ப்ரகாரம். அதாகிறது - அசித்கதமான பரிணாமமென்ன, சேதநகதமான அஜ்ஞாநதுஃகாதிகளென்ன இவை, உன்பக்கல்ஸ்பர்ஶியாதபடிநிற்கை. (நின்னை) சிதசித்விஶிஷ்டமாய்க்கொண்டு ஜகதுபாதாந காரணமானவுன்னை. (ஆர்நினைக்கவல்லர்) நினைக்கவல்லாரார். பரமாணுக்கள் உபாதாநகாரணமென்னும் வைஶேஷிகர் நினைக்கவோ; ப்ரதாநம் உபாதாநகாரணம், சிதசித்ஸம்ஸர்க்கத்தாலே ஜகந்நிர்ஹரணமென்னும் ஸாங்க்யர் நினைக்கவோ; நிமித்தோபாதாநங்களுக்குபேதஞ்சொல்லும் ஶைவர் நினைக்கவோ; சிதசிதீஶ்வர தத்வத்ரயங்களும் ப்ர்ஹ்மபரிணாமமென்னும் பேதாபேதிகள் நினைக்கவோ; நிர்விஶேஷவஸ்துவ்யதிரிக்தங்கள் அபரமார்த்தமென்னும் மாயாவாதிகள் நினைக்கவோ; வேதாந்த ப்ரமேயம் கைப்பட்டாரொழிய ஆர்நினைக்கவல்லர் என்கிறார். (க)

அ.—இரண்டாம்பாட்டு. "సహయజ్ఞైః ప్రజాస్సృష్ట్వా" "ஸஹயஜ்ஞைஃப்ரஜாஸ் ஸ்ர்ஷ்ட்வா" என்கிறபடியே-காரணபூதனானவுன்னாலேஸ்ர்ஷ்டமான சேதநர்க்குகர்மயோகம்முதலாகபரமபக்திபர்யந்தமான பகவத்ஸமாராதநத்துக்கும் ஶுபாஶ்ரயமாகைக்கும் அந்த பரபக்தியுக்தர்க்கு ஸர்வவித போக்யமாகைக்கும் க்ர்ஷ்ணனாய்வந்து ரக்ஷிக்கும் உன்னுடைய நீர்மையை * யார் நினைக்கவல்லரென்கிறார்.

---

ஸத்தாதிகள்-குணங்களுடைய ஸத்தாதிப்ரவர்த்திகள்.

இரண்டாம்பாட்டு —ஶுபாஶ்ரயம் - விஷயம்.

ஆறுமாறுமாறுமாயோரைந்துமைந்துமைந்துமாய்
ஏறுசீரிரண்டுமூன்றுமேழுமாறுமெட்டுமாய்
வேறுவேறுஞானமாகிமெய்யினோடுபொய்யுமாய்
ஊறொடோசையாயவைந்துமாயவாயமாயனே. (உ)

ப-ரை.—ஆறும் - அத்யயநாதிஷட்கர்மங்களாறும், ஆறும் - வஸந்தாதி ருதுக்களாறும், ஆறுமாய் - ஆக்நேயம்முதலான யாகங்களாறுமாய், ஓரைந்து - பஞ்சமஹாயஜ்ஞத்துக்கும், ஐந்தும் - பஞ்சாஹுதிக்கும் ஆராத்யனாய், ஐந்துமாய் - பஞ்சாக்நிக்கு அந்தராத்மாவுமாய், ஏறு - ச்லாக்யமான, சீர்இரண்டும்-உபாஸநரூப பகவதஜ்ஞாநமும் இதரவிஷயவைராக்யமுமாகிற இரண்டு குணங்களும், மூன்றும்-ஐச்வர்ய கைவல்ய பகவத்ப்ராப்திகள்மூன்றும், ஏழும்-விவேகவிமோகம் முதலான ஏழுகர்மங்களும், ஆறும் - ஜ்ஞாநபலைச்வர்யம் முதலான ஆறும், எட்டுமாய் - அபஹதபாப்மத்வாதி எண்குணங்களுமாய், வேறுவேறுஞாநமாகி - நிர்மலாந்தகரணரல்லாத பாக்யஹீநர்க்கும் பாஹ்ய குத்ருஷ்டிஸ்ம்ருதிகளுக்கும் ப்ரவர்த்தகனாய், மெய்யுமாய் - முமுக்ஷுக்களுக்கு மெய்யனாய், பொய்யுமாய் - ப்ரயோஜநாந்தரபரர்க்கு க்ஷுத்ரப்ரயோஜநங்களைக்கொடுத்துத் தான் அகலநிற்கையாலே பொய்யனாய், ஊறொடோசையாய வைந்துமாய - சப்தஸ்பர்சரூபரஸகந்தங்களைந்துமாய், ஆயன் - கோபஸஜாதியனாய் வந்து திருவவதரித்த, மாயனே - ஆச்சர்யபூதனே !, உன்னை உள்ளபடி பரிச்சேதித்தறிய வல்லாராரொன்கிறார்.

வ்யா.—(ஆறுமாறுமாறுமாய்) அத்யயநாதி ஷட்கர்மங்களும், அத்யயநத்தால் ஜ்ஞாதவ்யமான கர்மாநுஷ்டாநத்துக்கு யோக்யமான வஸந்தாதிருதுக்களாறும், அநுஷ்டேயமான ஆக்நேயாதிஷட் யாகங்களும். இது ஸர்வகர்மங்களுக்கு முபலக்ஷணம். இவை ஆறு என்றது - இவற்றோடே ஈச்வரனை ஸமாநாதிகரித்தது. அத்யயநாதிகளிலே, "దదామిబుద్ధియోగం తమ్" "ததாமிபுத்தியோகந்தம்" என்கிறபடியே - சேதநரைமூட்டியும் அவற்றுக் கேகாந்தங்களான காலங்களுக்கு நிர்வாஹகனாயும், அநுஷ்டேய கர்மங்களுக்கு ஆராத்யனாயு மிருக்கையாலே ஸமாநாதிகரித்துச் சொல்லுகிறது. (ஓரைந்து மைந்துமைந்துமாய்) கீழ்ச்சொன்ன கர்மத்துக்கு அதிகாரஸம்பத்துக்குடலாய், ப்ரதாநமான பஞ்சமஹாயஜ்ஞத்துக்கும், பஞ்சாஹுதிக்கும் ஆராத்யனாய், பஞ்சாக்நிக்கு அந்தராத்மாவாயுமிருக்குமவன். பஞ்சமஹாயஜ்ஞமாவது - "దేవయజ్ఞో పితృయజ్ఞో భూతయజ్ఞో మనుష్యయజ్ఞో బ్రహ్మయజ్ఞః" "தேவயஜ்ஞோ பித்ருயஜ்ஞோ பூதயஜ்ஞோ மநுஷ்யயஜ்ஞோ ப்ரஹ்மயஜ்ஞ:" என்கிறவை. பஞ்சாஹுதிகளாவன - ப்ராணாஹுதிகள். பஞ்சாக்நிகளாவன - கார்ஹபத்யாஹவநீயதக்ஷிணாக்நிகளும் ஸப்யாவஸத்யங்களும். (ஏறுசீரிரண்டும்) "ధర్మేణపాపమపనుదతి" "தர்மேணபாபமபநுததி" என்னும்படியே-விஹிதகர்மாநுஷ்டாநத்தாலே மோக்ஷவிரோதிபாபம்போனால்

---

அத்யயநாதிஷட்கர்மங்கள் - அத்யயந அத்யாபந யஜந யாஜந தாந ப்ரதிக்ரஹங்களாகிற ஆறு கர்மங்கள். ... ... உ

இவன்பக்கலிலே [பிறக்கும்] உபாஸநரூப பகவத்ஜ்ஞாநமும் தத் கார்யமான இதர விஷயவைராக்யமு மென்கிற இரண்டு குணமும். * மாற்பால் மநஞ்சுழிக்கையும், மங்கையர்தோள் கைவிடுகையும். (மூன்றும்) உபாஸநபலமான ஐஶ்வர்ய கைவல்ய பகவத் ப்ராப்தி கள். அன்றிக்கே, ஜ்ஞாநவைராக்ய ஸாத்யமான பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகள் மூன்றும். (ஏழும்) உக்தமானகர்மயோகாதி பரபக்தி பர்யந்தமான அளவுகளை பலிக்கக்கடவ மநோநைர்மல்யத்துக் கடி யான விவேகாதி ஸப்தகமும். அதாகிறது - விவேக விமோகாப்யா ஸக்ர்யாகல்யாண நவஸாதாநுத் தர்ஷங்கள். அதாகிறது – மநோ நைர்மல்ய ஹேதுவான விவேகாதி நியமஸப்தகயுக்தமாகிய க்ரியா ரூபத வாச்யமான விஹித சர்மாநுஷ்டாநத்தாலே உபாஸநநிஷ் பத்தியைச் சொல்லுகிறது. (ஆறும்) உக்தபக்தி வர்த்தகமாய் ஸ்வ யம் ப்ராப்யமான ஜ்ஞாநபலைஶ்வர்ய வீர்யஶக்தி தேஜஸ்ஸுக்களா றும். (எட்டுமாய்) * அபஹத பாப்மத்வாதி குணாஷ்டகமுமாய் "[illegible]" "ஸ்வேநரூபேணாபிநிஷ்பத்யதே" என்கிற படியே இது ப்ராப்யாந் தர்க்கதமிறே.

(வேறுவேறுஞாநமாகி) நிர்மலாந்தக்கரணரல்லாதபாக்யஹீநர்க் கும் பாஹ்யகுத்ர்ஷ்டி ஸ்ம்ர்திகளுக்கும் ப்ரவர்த்தகனாய். (மெய்யி னோடுபொய்யுமாய்) கீழ்ச்சொன்ன முமுக்ஷுக்களுக்கு மெய்யனாய். ப்ரயோஜநாந்தரபரரான க்ஷுத்ரர்க்கு ப்ரயோஜநங்களைக்கொடுத்து தான் அகல நிற்கையாலே பொய்யனாய். (ஊறொடோசையாய் கை ங்தமாய) பரமபக்தி யுக்தராயிருப்பார்க்கு ஸர்வவித போக்யமான வன். "ஊறொடோசை" என்று - ரூபாதிகளைந்துக்கும் உபலக்ஷ ணம். "உண்ணுஞ்சோறு பருகுநீர்" என்றும், "சேலேய் கண்ணி யரும் பெருஞ்செல்வமும்" என்னக்கடவதிறே. (ஆயமாயனே) கோபஸஜாதீயனாயவதரித்த ஆஶ்சர்யபூதனே. அதாவது - தான் நின்ற நிலையிலேநின்று ஆஶ்ரிதர்க்கு உபகரிக்கையன்றிக்கே, திவ்ய மங்களவிக்ரஹத்தை ஸம்ஸாரிஸஜாதீயமாக்கிவந்தவதரித்து, உபா ஸகர்க்கு ஶுபாஶ்ரயமாய் ஸித்தோபாய பரிக்ரஹம் பண்ணினார்க்கு விஷயாந்தரங்களில் நின்றும்மீட்டு, தானே போக்யமுமாய், * காண வாராயென்றென்று கண்ணும்வாயும் துவர்ந்திருக்கும் பரமபக்தி யுக்தர்க்கு ஸர்வவித போக்யமுமானவனென்கை. அவதாரந்தான் * ஸாதுபரித்ராணத்துக்கும் தர்மஸம்ஸ்தாபநத்துக்கு மாகவிறே.உ

அ.—மூன்றாம்பாட்டு. முதற்பாட்டிற் சொன்ன ஜகத்காரண த்வப்ரயுக்தமான லீலாவிபூதியோகமென்ன, இரண்டாம்பாட்டிற் சொன்ன உபாயத்துக்கு பலமான நித்ய விபூதியோகமென்ன, ஆ இந்த உபய விபூதியோகத்தை நிர்ஹேதுக க்ர்பையாலே தேவரீர் காட்ட வருத்தமற நான் கண்டாப்போலே வேறு ஸ்வஸாமர்த்யத் தால் காணவல்லாரில்லை யென்கிறார்.

ஐந்துமைந்துமைந்துமாகியல்லவற்றுளாயமாய்
ஐந்துமூன்றுமொன்றுமாகிநின்றவாதிதேவனே!
ஐந்துமைந்துமைந்துமாகியந்தரத்தணைந்துநின்
றைந்துமைந்துமாயநின்னையாவர்காணவல்லரே. (௲)

ப-ரை.—ஐந்தும் - ஆகாசாதிபூதங்களைந்தும், ஐந்தும்-ச்ரோத்ராதிஜ்ஞா நேந்த்ரியங்களைந்தும், ஐந்துமாகி - வாய்முதலிய கர்மேந்த்ரியங்களைந்துமாகி, ஐந்தும் - ஆகாசாதிபூதங்களைந்துக்கும் காரணமான தந்மாத்ரைகளைந்தும், மூன்றும் - அஹங்காரம் மஹாந் ஸூக்ஷ்மமூலப்ரக்ருதி என்கிற மூன்றும், ஒன்றுமாகி-மநஸ்ஸுமாய், அல்லவற்றுள்-இப்படி இருபத்துநாலாகப் பிரிக்கப்பட்டிருக்கிற ப்ரக்ருதியிலே ஸ்ருஷ்டமான ஜீவாத்மாக்களுக்கு, ஆயமாய்- அந்தர்யாமியாய், நின்ற-இவை அழிந்தகாலத்திலும் ஸூக்ஷ்மசிதசித் விசிஷ்டனாய்க் கொண்டுநின்ற, ஆதிதேவனே - காரணபூதனே, ஐந்தும் - அப்ராக்ருதமாய் திவ்ய சக்திமயமான திவ்யவிக்ரஹமும், ஐந்தும் - அதற்கு இருப்பிடமான ஜ்ஞாநேந்த்ரியங்களைந்தும், ஐந்தும் - கர்மேந்த்ரியங்களைந்துமாகிற இவற்றுக்கு, ஆகி-நிர்வாஹகனாய், ஐந்தும் - சப்தாதிபோக்யங்களைந்தும், ஐந்துமாய - போக ஸ்தாநம் போகோபகரணம் வைகுந்தத்தமரர்முனிவர் கூமுமுக்கள் என்கிற ஐந்தசோதியுமாய், அந்தரத்து - பரமபதத்திலே, அணைந்துநின்று - பொருந்திநின்ற, நின்னை - உபயவிபூதி யுக்தனாயிருக்கிற வுன்னை, யாவர்காணவல்லரோ - ஸ்வஸாமர்த்யத்தாலே காணவல்லாரார்.

வ்யா.—(ஐந்துமைந்துமைந்துமாகி) ஆகாசாதி பூதங்களைந்தும், ஶ்ரோத்ராதி ஜ்ஞாநேந்த்ரியங்களைந்தும், வாகாதி கர்மேந்த்ரியங்களைந்துமாகி. (ஐந்துமூன்றும்) ஆகாஶாதிபூதங்களைந்துக்கும் காரணமான தந்மாத்ரைகளைந்தும், ஒன்றுக்கொன்று காரணமான அஹங்காரமென்ன மஹானென்ன ஸூக்ஷ்ம மூலப்ரக்ருதியென்ன இவை மூன்றும். (ஒன்றுமாகி) "மநஃ" "மநஏவ" என்கிறபடியே-உக்தமான ஸகல பதார்த்தங்களுக்கும் பந்த ஹேதுவாகைக்கும் மோக்ஷ ஹேதுவாகைக்கும் ஹேதுவான மநஸ்ஸுமாய். (அல்லவற்றுளாயமாய்) இப்படி சதுர்விம்ஶதியாக விபக்தமான ப்ரக்ருதியிலே ஸம்ஸ்ருஷ்டரான ஜீவாத்மாக்களுக்கு அந்தர்யாமியாய். (அல்லவற்றுள்) அசித் வ்யாவர்த்தரான சேதநர்பக்கலிலே. (நின்றவாதிதேவனே) ஸ்தூலசிதசித்விஶிஷ்டனாய் நின்றாப்போலே, இவை அழிந்த காலத்திலும், ஸூக்ஷ்ம சிதசித்விஶிஷ்டனாய்க் கொண்டு நின்ற காரணபூதனானவனே. (ஐந்துமைந்துமைந்துமாகி) இதுக்குக்கீழே லீலாவிபூதியோகத்தைக்காட்டித்தந்தபடியைச் சொன்னாராய், மேல் திவ்யமங்கள விக்ரஹத்தையும் நித்யவிபூதியோகத்தையும் காட்டித் தந்தபடியைச் சொல்லுகிறார். அப்ராக்ருதமாய் பஞ்சஶக்திமயமான திவ்ய விக்ரஹத்தையும், ததாஶ்ரயமானஜ்ஞாநேந்த்ரியங்களைந்தும் கர்மேந்த்ரியங்களைந்து மென்கிற இவற்றுக்கு நிர்வாஹகனாய். இத்தால் - திவ்ய விக்ரஹயோகஞ்சொல்லிற்று.

---

மூன்றாம்பாட்டு.— பஞ்சஶக்தி - " [illegible] " என்கிறவை.

(அந்தரத்தணைந்துநின்றுஐந்துமைந்துமாய)ஶப்தாதிபோக்யங்களைந்தும்,போகஸ்தாநமென்ன,போகோபகரணமென்ன,"வைகுந்தத்தமரரும்முனிவரும்" என்றஇரண்டுகோடியும், முக்தரும் என்ற அஞ்சுகோடியுமாய். (அந்தரத் தணைந்துநின்று) "[illegible]" "பரமவ்யோம" என்றும், "[illegible]" "பரமாகாஶம்" என்னும் ஶ்ருதி ப்ரஸித்தமான பரமபதத்திலே பொருந்திநின்று. இப்படி உபயவிபூதி யுக்தனை (நின்னையாவர் காணவல்லரே) ஸ்வஸாமர்த்யத்தால் காணவல்லாரார். மநுஷ்யரிற்காட்டில் ஜ்ஞாநாதிகரென்று தேவர்கள் காணவோ; உபயபாவநாநிஷ்டரென்று ப்ரஹ்மாதிகள் காணவோ; ப்ரஹ்மபாவநா நிஷ்டரென்று ஸநகாதிகள் காணவோ. ... ... ... ... ... ... ௩

அ.—நாலாம்பாட்டு. ஜ்ஞாபகமான வேதங்களையும் மந்த்ர ரஹஸ்யங்களையும் தேவரீருண்டாக்கி வைக்கச்செய்தேயும் அவ்வழியாலேயறிந்து உபாஸியாதேயிருக்க,நீயேவந்து என்னுடைய ஹ்ருதயத்திலே புகுந்த விதுஎன்ன நீர்மை! என்கிறார்.

> மூன்றுமுப்பதாறினோடொரைந்துமைந்துமைந்துமாய்
> மூன்றுமூர்த்தியாகிமூன்றுமூன்றுமூன்றுமூன்றுமாய்
> தோன்றுசோதிமூன்றுமாய்த்துளக்கமில்விளக்கமாய்
> ஏன்றெனாவியுள்புகுந்ததென்கொலோவெம்மீசனே. (௪)

ப-ரை.—ஸகலவேதத்துக்குமடியான, மூன்றமுப்பது - ககாராதி ஹகாராந்தமான முப்பத்தமூன்று மெய்யெழுத்துக்களும், ஆறினோடொ ரைந்துமைந்தும் - பதினாறு உயிரெழுத்துக்களும், இரண்டிலும் - அநுபாத்தமான, ஐந்துமாய் - ளகாரம் முதலான ஐந்தெழுத்துக்களுமாகிய ஐம்பத்துநாலு அக்ஷரங்களுக்கும் நிர்வாஹகனாய், மூன்றுமூர்த்தியாகி - வேதத்ரயமாவான மூன்றுருபதனையு முடையையாய், மூன்று மூன்று மூன்று மூன்றுமாய் - திருத்வாதசாக்ஷர ப்ரதிபாத்யனாய், தோன்றுசோதி மூன்றுமாய் - மூன்ற க்ஷரங்களாலாகிய ப்ரணவத்தாலே ப்ரதிபாதிக்கப்படுமவனாய், துளக்கமில் - அசைவின்றிக்கேயிருக்கிற, விளக்கமாய - அகாரவாச்யனாய், எம்மீசனே - நீ சேஷி நான்சேஷபூதன் என்கிற ஸம்பந்தத்தை உணர்த்தினவனே!, ஏன்று - என்கார்யத்தை உனக்கு பரமாகஏறிட்டுக்கொண்டு, என் ஆவியுள் புகுந்தது - என்மனஸ்ஸிலே புகுந்து எனனைப்ரகாசிப்பித்தது, என் - என்ன நீர்மை !, என்று ஈடுபடுகிறார்.

வ்யா.—(மூன்றுமுப்பதாறினோடொரைந்து மைந்து மைந்துமாய்) ஸகலவேதங்களுக்குமடியான ஐம்பத்துநாலு அக்ஷரத்துக்கும் நிர்வாஹகனாய். (மூன்றுமுப்பது) ககாராதி ஹகாராந்தமான ஹல்லுக்களான முப்பத்துமூன்று அக்ஷரமும். (ஆறினோடொரைந்துமைந்தும்) அச்சுக்களான பதினாறு அக்ஷரமும். (ஐந்துமாய்) இரண்டிலும் அநுபாத்தமான ளகாராதிகள் அஞ்சக்ஷரமும்.

---

போகோபகரணம் - சத்ரசாமராதிகள். ... ... ...௩

நாலாம்பாட்டு.—அகாரம்முதலானதுக்கு"அச்சு"என்றுபேர்.

(மூன்றுமூர்த்தியாகி)வேதாத்மாவானமூன்றுருபத்தையுமுடையனாய். அக்ஷரங்கள்ஜ்ஞாநஹேதுவாவது வேதஶரீரமாணலிறே. (மூன்றுமூன்று மூன்றுமூன்றுமாய்) அந்த வேததாத்பர்யமான திருத்வாதஶாக்ஷரப்ரதிபாத்யனாய். (தோன்றுசோதிமூன்றுமாய்) மூன்றிலே தோன்றுகிற சோதியாய். "ஓங்காரோ பகவாந் விஷ்ணு:" "ஓங்காரோ பகவாந் விஷ்ணு:" என்கிறபடியே-அக்ஷரத்ரயாத்மகமான ப்ரணவப்ரதிபாத்யனாய். (துளக்கமில்விளக்கமாய்) ஸகலவேதகாரண ப்ரணவத்துக்குங் காரணமாய். தனக்கொரு காரணமில்லாமையாலே, சலநமின்றிக்கேயிருக்கிற அகாரவாச்யனாய்.(ஏன்றெனாவியுள்புகுந்ததென்கொலோ) இவ்வழியாலே நானறிந்து உபாஸிக்கைக்கு விஷயபூதனுகையன்றிக்கே, என்கார்யத்தை உனக்கு பரமாக ஏறிட்டுக்கொண்டு என்மநஸ்ஸிலே புகுந்து என்னை உள்ளபடி ப்ரகாஶிப்பித்த விது என்ன நீர்மை. (எம்மீசனே) ப்ரகாஶிப்பித்த ப்ரகாரமென்னென்னில்; நீ ஶேஷியாய் நான்ஶேஷபூதனாயிருக்கிற இம்முறையுணர்த்தினாயென்னுதல்; இப்படி எனக்கு ப்ரகாஶிப்பிக்கைக்கடி இழவுபேறுகள் உன்னதாம்படியான ஸம்பந்தத்தை யுடையவனென்னுதல். ... ... ... ... ... ... ௪

அ.—அஞ்சாம்பாட்டு. நம்மை உள்ளபடி அறிவிக்கவற்றான வேதங்களும் மந்த்ரரஹஸ்யங்களுமுண்டாயிருக்க, "யாவர்காணவல்லரோ" என்பானென்னென்னில்; அந்தர்யாமித்வத்தாலும் ஜகதேககாரணத்வத்தாலும் ஸகலாதாரனாயிருக்கிற ஸ்வபாவத்தைத் திரளவறியு மித்தனையொழிய, தேவரீர்காட்ட நான் கண்டாப்போலே ஏவம்விதனென்று ஒருவர்க்கு மறியவொண்ணாதென்கிறார்.

நின்றியங்குமொன்றிலாவுருக்கடோறுமாவியாய்
ஒன்றியுள்கலந்துநின்றநின்னதன்மையின்னதென்
றென்றும்யார்க்குமெண்ணிறந்தவாதியாய்!நின்னுந்திவாய்
அன்றுநான்முகற்பயந்தவாதிதேவனல்லையே. (ரு)

ப-ரை.—நின்று-ஸ்தாவரமாய்நின்றும், இயங்கும்-ஜங்கமமாய்ஸஞ்சரித்தும், ஒன்றிலா - உஜ்ஜீவநப்ரகாரங்களில் ஒன்றுக்கும் உறுப்பன்றிக்கேயிருக்கிற, உருக்கள்தோறும் - ஸகலசரீரங்கள்தோறும்,ஆவியாய் - ஆத்மாவாய், ஒன்றி-எதிர்த்தலையில் ஹேயதையைப்பாராதே பொருந்தி, உள்கலந்துநின்ற - ஏகதத்வமென்னும்படி கலந்துநின்ற, நின்னதன்மை - உன்னுடையஸ்வபாவம், இன்னதென்று-இப்படிப்பட்டதென்று, என்றும் - நிகழ்காலத்திலும் எதிர்காலத்திலும், யார்க்கும் - பேரளவுடையரான ப்ரஹ்மாதிகளுக்கும், எண் இறந்த-

வேதாத்மாவான - வேதஶரீரமான. மூன்று ரூபமாவது - கீழ் "ஹல்" என்றும், "அச்சு" என்றும் இரண்டு மன்றியிலே யிருக்கிற ளகாராதியுமாகிற மூன்று ரூபத்தையு மென்றபடி. அக்ஷரங்கள் வேதஶரீரமாக வேண்டுவானென்னென்ன ; அருளிச்செய்கிறார் (அக்ஷரங்களித்யாதி.) ... ... ... ... ... ௪

